# ஸ்ரீவித்யா ப்ரஸன்ன தீர்த்தரின்
# மத்வ விஜய ஸார ஸங்க்ரஹ
## (தமிழில் அர்த்த விளக்கங்களுடன்)

தமிழில் உரை எழுதியவர்:

'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
**89044 58276. haridasa.vijayam@gmail.com**

வெளியீடு:

ஸ்ரீமுனித்ரய ப்ரதிஷ்டான ஸேவா டிரஸ்ட்
கோவை

# ஸ்ரீவித்யா ப்ரஸன்ன தீர்த்தரின் மத்வ விஜய ஸார ஸங்க்ரஹ (தமிழில் அர்த்த விளக்கங்களுடன்)

ஸ்ரீஹரிவாயு குருகளின் அருளால்
ஸ்ரீவிஜயீந்திர தீர்த்தரின் ஆராதனை நாளான
26-06-2022 அன்று கோவையில் வெளியிடப்பட்டது

**உரை எழுதியவர்:**
ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்

**வெளியீடு:**
ஸ்ரீமுனித்ரய ப்ரதிஷ்டான ஸேவா டிரஸ்ட், கோவை
தொலைபேசி: 9894492156 / 9659641010

பக்கங்கள் : 175
காணிக்கை : ரூ.70/- + தபால் / குரியர் செலவுகள்.

| பொருளடக்கம் | |
|---|---|


**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து**

# முன்னுரை

ஜீவோத்தமரான வாயுதேவரின் மூன்றாவது அவதாரம் - ஸ்ரீஹரியின் பிரதிபிம்பரான, ஸர்வக்ஞரான, ஸ்ரீமன் மத்வாசார்யர். இவர் அனைத்து ஜீவர்களுக்கும் த்ராணர், பிராணர். என்றைக்கும் இவரது ஞான சக்திகளுக்கு மறைவு / குறைவு இல்லை. ஸ்ரீமதாசார்யரை அறியாமல் ஸ்ரீஹரியை அறியமுடியாது. பூர்ணப்ரக்ஞர் என்று காரணப்பெயரைக் கொண்ட இவர் அறியாததே இல்லை. சொல்லாததும் இல்லை. இவரது ஸர்வமூல கிரந்தங்கள், அனைத்திற்கும் மூலம் மட்டுமல்லாமல், அவருடைய ஸ்வரூபமே ஆகியிருக்கின்றன.

இத்தகைய ஸ்ரீமன் மத்வாசார்யரின் திவ்ய சரிதத்தை வெளிப்படுத்திய சிறந்த கிரந்தம் - ஸுமத்வவிஜயம். இதனை இயற்றியவர் ஸ்ரீத்ரிவிக்ரம பண்டிதரின் மகனான ஸ்ரீநாராயண பண்டிதர். இது ஒரு சாஸ்திர காவியமும் ஆகும். துல்லியமான ஆதாரமுள்ள கிரந்தமும் ஆகும். 1008 ஸ்லோகங்களில், 16 அத்தியாயங்களில், சம்ஸ்கிருதத்தில் இயற்றப்பட்டுள்ளது இந்த கிரந்தம்.

இந்த அற்புத கிரந்தத்தின் சாரத்தை மிகச் சுருக்கமாக 65 ஷட்பதி கன்னட பத்யங்களில் இயற்றி நமக்குக் கொடுத்திருக்கிறார் ஸோஸலெ ஸ்ரீவ்யாஸராஜ மடத்தின் 37வது பீடாதிபதியாக இருந்த ஸ்ரீவித்யா ப்ரஸன்ன தீர்த்தர் (1940-69). பாராயண கிருதியாகவும், மிகவும் எளிமையாக நமக்கு புரியும்படியுமாகவும் இந்த ‘மத்வ விஜய ஸார ஸங்க்ரஹ’ என்னும் கிருதி இருக்கிறது.

இதன் தமிழ் உரையினை, ஒரு நாளைக்கு ஒரு பத்யமாக எனது தளமான http://dasa-sahitya.blogspot.com ல் வெளியிட்டு வர, அதனைப் பார்த்து, கோவையின் ‘ஸ்ரீமுனித்ரய ப்ரதிஷ்டான சேவா டிரஸ்ட்’ இதனை புத்தகமாக வெளியிட முன்வந்தனர். அனைத்து மக்களுக்கும் மிகக் குறைவான கட்டணத்தில் இந்தப் புத்தகத்தைக் கொண்டு சேர்க்க உதவி புரிந்த இந்த டிரஸ்ட் அமைப்பினருக்கு

எனது மனமார்ந்த நன்றிகள். ஸ்ரீஹரிவாயு குருகளின் அருளால், இப்படிப்பட்ட மேலும் பல புத்தகங்களை அவர்கள் வெளியிட வேண்டும் என்பது எனது விருப்பம்.

இந்தப் புத்தகத்தை முழுவதுமாக படித்து, சிறிசிறு திருத்தங்களைக் கூறி உதவிய திரு. சுதர்ஷன ஆசார்யருக்கும் எனது மனப்பூர்வமான நன்றிகள்.

இந்தப் புத்தகத்தை படிக்கும் அனைத்து ஹரிபக்தர்களுக்கும், மத்வாந்தர்கதனான ஸ்ரீகிருஷ்ணனின் அருள் கிடைக்கட்டும் என்று வேண்டிக் கொள்கிறேன்.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
பெங்களூரு
12-06-2022

## ஸ்ரீகுருப்யோ நம:
## ஸ்ரீமத்வ விஜய ஸார ஸங்க்ரஹ
## முன்னுரை - 2

அப்ரமம் பங்கரஹிதம் அஜடம் விமலம் சதா |
ஆனந்ததீர்த்த மதுலம் பஜே தாபத்ரயாபஹம் ||

ஸ்ரீமத்வ விஜய ஸார ஸங்க்ரஹ
இயற்றியவர் : ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்
ஸ்லோகங்கள் : 65
மொழி : கன்னட ஸ்லோகங்கள்

ஸ்ரீநாராயண பண்டிதாசார்யர் இயற்றிய ஸ்ரீமத்வ விஜயத்தில் உள்ள 16 சர்க்கங்கள், 1008 ஸ்லோகங்களை சுருக்கி, நித்ய பாராயணத்திற்காக கன்னடத்தில் இயற்றி நமக்குக் கொடுத்து பேருதவி செய்திருக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர். அவரது பூர்வாசிரம தந்தையும், பரமகுருகளுமான ஸ்ரீவித்யா ரத்னாகர தீர்த்தர் இயற்றிய சம்ஸ்கிருத கிருதியான மத்வ விஜய ஸார ஸங்க்ரஹத்தின் கன்னட ஆக்கமே இந்த கிருதியாகும்.

முதலில் மத்வ விஜயத்தைப் பற்றிய ஒரு அறிமுகமும், ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தரைப் பற்றிய குறிப்புகளையும் பார்த்துவிட்டு, ஸார ஸங்க்ரஹ ஸ்லோகங்களின் அனுவாதத்திற்குச் செல்வோம்.

### மத்வ விஜயம்

ஸ்ரீமன் மத்வாசார்யரின் திவ்யமான வாழ்க்கைச் சரிதத்தை வெளிப்படுத்திய சிறந்த கிரந்தம் - சுமத்வவிஜயம். இதனை எழுதியவர் த்ரிவிக்ரம பண்டிதரின் மகனான நாராயண பண்டிதர். இது ஒரு சாஸ்திர காவியமும் ஆகும். துல்லியமான ஆதாரமுள்ள கிரந்தமும் ஆகும். இதிகாசப் பின்னணி கொண்ட கிரந்தம் எனப்படுகிறது. சமஸ்கிருத சாகித்ய உலகில் சிறப்பான இடத்தைப் பெற்று மிகச்சிறந்த காவியம் என்று அழைக்கப்படுகிறது. இத்தகைய சுமத்வவிஜயத்தின் நாயகர், உலகத்தையே

காப்பவரான, முக்யபிராணரின் அவதாரமான ஸ்ரீமதானந்த தீர்த்தர். இவர் சர்வக்ஞர். அனைத்து நற்குணங்களையும் கொண்டவர். அனைத்து தேவதைகளாலும் வணங்கப்படுபவர். அனைத்து லட்சணங்களையும் கொண்டவர். அனைத்து சாஸ்திரங்களிலும் வல்லவர். அனைவரையும் காப்பவர். துர்மதங்களை நிராகரிப்பவர். சர்வமூலங்களை இயற்றியவர். சர்வோத்தமனின் நிஜ தாசர். ஜீவோத்தமரான இவர், ஸ்ரீஹரியின் ஆணைப்படி சஜ்ஜனர்களை காப்பாற்றுவதற்காக தரைக்கு இறங்கி வந்த மகானுபாவர். இவை அனைத்தையும் நிரூபிக்கும், மேலும் பல மகிமைகளை சுமத்வவிஜயத்தில், அழகுற விளக்கப்பட்டிருக்கின்றன. மந்திர துல்யமான, அனைத்து வரங்களையும் கொடுக்கவல்ல இந்த கிருதி தினமும் படிக்க, கேட்க, பாராயணம் செய்யப்படும் கிரந்தமாக நம் பரம்பரையில் புகழ்பெற்றிருக்கிறது.

இதில் மொத்தம் 16 சர்க்கங்கள், 1008 ஸ்லோகங்கள் உள்ளன. ஸ்ரீமதாசார்யரின் திவ்ய சரித்திரத்தின் மகிமையை வெவ்வேறு விதமாக வர்ணிக்கும் ஒரேயொரு கிரந்தமாக இருக்கிறது சுமத்வவிஜயம். ஸ்ரீமதாசார்யரின் த்வைத சித்தாந்தத்தின் தத்வங்களையும் நிரூபிக்கும் கிரந்தமாகவும் இருக்கிறது. இப்படிப்பட்ட சுமத்வவிஜயத்தை படித்தல், கற்பித்தல் ஒவ்வொரு மாத்வரின் கடமையாகும். மூல குருவைப் பற்றியே அறியாதவர்கள், குரு உபதேசத்திற்கு, குரு இயற்றிய கிரந்தங்களை படிப்பதற்கு, நித்யகர்மானுஷ்டாங்களை செய்வதற்கு அருகதை அற்றவர்கள்.

மத்வ விஜயத்தில் உள்ள 16 சர்க்கங்களின் ஸாரத்தினை இங்கு பார்ப்போம்.

**முதல் சர்க்கம்:**

ஸ்ரீமன் நாராயணனை வணங்கும் மங்களாசரணத்துடன் சுமத்வவிஜயத்தின் முதல் சர்க்கத்தை துவக்கும் நாராயண பண்டிதாசார்யர், இந்த கிரந்தத்தின் நோக்கம் மற்றும் பின்னணியை இங்கே விளக்கியிருக்கிறார். வாயுதேவரின் அவதாரங்களான ராமாயணத்தின் ஹனுமந்த மற்றும் மகாபாரதத்தின் பீமசேனரின்

கதையை சுருக்கமாக வர்ணித்திருக்கிறார். மூன்றாம் அவதாரமான ஸ்ரீமதாசார்யரின் அவதாரத்தின் பின்புலத்தின் விவரங்களும் இங்கு இருக்கின்றன.

**இரண்டாம் சர்க்கம்:**

இந்த சர்க்கத்தில், ஸ்ரீநாராயண பண்டிதாசார்யர், மத்வாசாரியரின் அவதாரத்தின் பின்புலம், ஸ்ரீஹரியின் ஆணை, மத்யகேஹ பட்டர் தம்பதிகளின் அறிமுகம், அவர்கள் அனந்தாசன ஆலயத்தில் செய்த சேவை, மத்வரின் பிறப்பு, வாசுதேவனின் பற்பல பால்ய லீலைகள் ஆகியவற்றை விவரித்திருக்கிறார்.

**மூன்றாம் சர்க்கம்:**

வளர்ந்து வந்த வாசுதேவன், மக்களுக்கு தனது பால்ய லீலைகளைக் காட்டினான். பாரதிபதி ஆனவனுக்கு அக்ஷராப்யாசம், வித்யாப்யாசம், 'லிகுச' சொல்லிற்குப் பொருள் சொல்வது, வயதுக்கு ஏற்றாற்போல் பிரம்மோபதேசம். பாம்பு வடிவில் வந்த அசுரனைக் கொன்றது, ஜகத்குரு ஆனவனுக்கு குருகுலவாசம், குருவின் மகனின் தலைவலிக்கு தீர்வு, குருதட்சிணையாக் ஐதரேய உபநிஷத்தின் ரகசிய அர்த்தத்தினை நிரூபித்தல் - ஆகியவை இந்த சர்க்கத்தில் உள்ளன. சாதாரணமாக இருந்து, அசாதாரண செயல்களைச் செய்ததன்மூலம், தான் யார் என்பதை ஒவ்வொரு கட்டத்திலும் தனது அற்புத லீலைகளினால் அறிவித்தான் வாசுதேவன்.

**நான்காம் சர்க்கம்:**

வாசுதேவன் சன்யாசி ஆவதென்று முடிவு, அச்யுதப்ரேக்ஷரின் பின்புலம், அச்யுதப்ரேக்ஷரைக் காண வாசுதேவன் பயணம், தடை போட தந்தை செய்த முயற்சிகள் வீணானது, சகோதரன் பிறப்பு, சன்யாசி ஆதல், 'பூர்ணப்ரக்ஞ' என்ற பெயர் பெறுதல், ரஜதபீடபுரத்து குளத்தில் கங்கை தோன்றுதல், அச்யுதப்ரேக்ஷர் மூலமாக இஷ்டசித்தி பாடம் கேட்டல், அதில் முதல் ஸ்லோகத்திலேயே பூர்ணப்ரக்ஞர் 32 பிழைகளைக் கண்டுபிடித்தல், வேதவியாசருக்கு ஒப்புதலான ஸ்ரீமத்பாகவத பாடத்தை

சொல்லுதல் – ஆகிய விஷயங்கள் இந்த சர்க்கத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன.

**ஐந்தாம் சர்க்கம்:**

பூர்ணபிரக்ஞருக்கு வேதாந்த சாம்ராஜ்யத்தில் அபிஷேகம், ஆனந்ததீர்த்தர் என்னும் பெயர், வாதங்களில் வெல்லுதல், புத்திசாகர மற்றும் வாதிசிம்மனை தோற்கடித்தல், சங்கரபாஷ்யத்தை கண்டித்தல், சூத்ர வியாக்யான, திருவனந்தபுரம், கன்யாகுமரி, ராமேஸ்வரம், ஸ்ரீரங்கம் வரையிலான தென்னிந்திய பயணம் – முதலான விஷயங்கள் இந்த சர்க்கத்தில் வருகின்றன.

**ஆறாம் சர்க்கம்:**

இந்த சர்க்கத்தில் – ஐதரேய சூக்தத்தின் பொருள், விஷ்ணு சஹஸ்ரநாமத்தின் 'விஸ்வ' என்னும் சொல்லின் பொருள், தான சூக்தத்தின் பொருள், 'அபாலா' சொல்லின் சிறப்புப் பொருள், கீதா பாஷ்யம் இயற்றுதல், முதல் பத்ரி யாத்திரை, கீதா பாஷ்யம் சமர்ப்பித்தல், வியாசரின் பாராட்டு, ஆசார்யரின் மௌன விரதம், சிஷ்யர்களுக்கான செய்தி, வேதவியாசர் மேல் பத்ரிக்கு அழைத்தல், ஸ்ரீசத்ய தீர்த்தரின் குருபக்தி, அவருக்கு ஆசார்யரின் அருள், ஸ்ரீமதாசார்யர் தென்னிந்தியாவின் பயணத்தை வெற்றிகரமாக முடித்தார். வேதவியாசரிடமிருந்து பத்ரிக்கு வருமாறு அழைப்பு வந்தது. ஸ்ரீமதாசார்யர் பதரிக்குப் புறப்பட்டார். பாதராயணரைப் பார்ப்பதற்கு சிஷ்யர்களை விட்டு முன்னே சென்றார் – ஆகிய விஷயங்கள் இந்த சர்க்கத்தில் உள்ளன.

**ஏழாம் சர்க்கம்:**

தசபிரமதிகளான பூர்ணப்ரக்ஞர் வியாச ஆசிரமத்தை அடைந்தார். வேதவியாசரை கண்டார். இங்கு ஆசார்யரின் தேக வர்ணனை மற்றும் வேதவியாசரின் தோற்ற வர்ணனை வருகிறது. இது படிப்பதற்கு மகிழ்ச்சியைக் கொடுக்கக்கூடியது, என்றும் புதியது, ஞானத்தை தரக்கூடியது. இவ்விருவரின் சந்திப்பைக் கண்ட ஞானிகளே தன்யர். இதை இந்த சர்க்கத்தில் அருமையாக வர்ணித்திருக்கும் நாராயண பண்டிதாசார்யரின் திறன் அற்புதமானது.

**எட்டாம் சர்க்கம்:**

உத்தர-பதரியில் வியாஸமத்வரின் சந்திப்பு. சர்வோத்தமரிடத்தில் ஜீவோத்தமரின் சிஷ்யத்வம். சிறிது காலத்திலேயே பற்பல வேதங்களின் பொருளைக் கற்றார். இன்னொரு ரூபமான நாராயணரைக் காண்பதற்கு, நாராயண ஆசிரமத்திற்கு வியாசரே மத்வரை அழைத்துச் சென்றார். தவம் செய்து கொண்டிருந்த நாராயணரைக் கண்டார். எண்ணிக்கையற்ற ரூபங்களைக் கொண்ட ஸ்ரீஹரியின் திவ்யரூபங்களை சிந்தித்தார். மத்ஸ்யாதி பல ரூபங்களின் வர்ணனையை மிகச் சிறப்பாக கொடுத்திருக்கிறார் நாராயண பண்டிதர். அனந்தரூபியான நாராயணன், மத்வரை பிரம்மசூத்ர பாஷ்யத்தை இயற்றுமாறு கூறினார். வேதவியாஸ - நாராயண - மத்வர் ஆகியோர் மூன்று-அக்னியைப் போல அமந்திருந்ததை இந்த சர்க்கத்தில் பார்க்கலாம்.

**ஒன்பதாம் சர்க்கம்:**

நாராயணரின் ஆசிரமத்திலிருந்து வேதவியாசரின் ஆசிரமத்திற்கு திரும்பினார் மத்வர். வேதவியாசரிடமிருந்து தத்வோபதேசம். அக்னிசர்மா முதலான 5-6 பிராமணர்களிலிருந்து ஒரே நேரத்தில் பிக்ஷை ஸ்வீகரித்தல். பதரியில் பிரம்மஸூத்ர பாஷ்யம் இயற்றுதல். சத்யதீர்த்தர் அதை ஆவணப்படுத்துவது. பாஷ்யத்தின் சிறப்பினை விவரித்தல். பதரியிலிருந்து கோதாவரி நதிக்கரைக்கு மத்வர் வருகை மற்றும் அங்கு தத்வபிரசாரம். உடுப்பியில் ஸ்ரீகிருஷ்ண பிரதிஷ்டை. குரு புத்ரரினால் யக்ஞம். மத்வரின் இரண்டாவது பதரியாத்திரை. வேதவியாசரை வணங்கி மறுபடி ரஜதபீடபுரத்திற்கு வருகை - ஆகிய விஷயங்கள் இந்த சர்க்கத்தில் வருகின்றன.

**பத்தாம் சர்க்கம்:**

இரண்டாம் பத்ரி யாத்திரையின்போது ஆசார்ய மத்வர் செய்துகாட்டிய பல மகிமைகள் இந்த சர்க்கத்தில் விளக்கமாக வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. முக்கியமான விஷயங்கள் என்றால், ஸ்ரீமத்வர் தாம் பிராணதேவர் என்று காட்டியது, இஸ்லாமிய அரசனுடனான சந்திப்பு, பயணத்தில் செய்து காட்டிய விஷயங்கள், யோகசக்தியைக் காட்டியது ஆகியன வந்திருக்கின்றன. மத்வரின்

வெற்றிப்பயணம் மற்றும் தேக வர்ணனையானது அற்புதமான காவிய நடையில் சொல்லப்பட்டிருக்கின்றன. பல நடைகளினால் நிரம்பிய இந்த சர்க்கம் மத்வவிஜய-சுருக்கம் என்றே அழைக்கப்படுகிறது.

**பதினொன்றாம் சர்க்கம்:**

ஸ்ரீமதாசார்யர் இயற்றிய கிரந்தங்களைக் கேட்பதன் பலன், ஸ்ரீஹரியின் மற்றும் வாசுதேவனான வைகுண்டனின் வர்ணனை, முக்தர்களின் சாதனை மற்றும் வைகுண்டத்தில் இருக்கும் கோயில், வீடு, பொருட்களின் வர்ணனை, அங்கு ரமாதேவியின் விசேஷ சேவையின் வர்ணனை, முக்தர்களின் / முக்த ஸ்திரீகளின் வர்ணனை, ஹரிமந்திரத்தின் மகிமை - இந்த விஷயங்கள் அனைத்தும் இந்த சர்க்கத்தில் உள்ளன.

**பன்னிரெண்டாம் சர்க்கம்:**

ஸ்ரீமத்வாசார்யரின் தத்வவாதம் அனைத்து திசைகளிலும் பரவத் துவங்கியதும், அதை தடுப்பதற்கும் கண்டிப்பதற்கும் மாயாவாதிகள் முயன்றனர். (மாயாவாதத்தின் சுருக்க அறிமுகம் உள்ளது). ஸ்ரீமதாசார்யர் வேதங்களை உச்சரிக்கும் முறை, பத்மதீர்த்தரினால் மாத்வ கிரந்தங்கள் திருடப்படுவது, புண்டரீகபுரியை ஆசார்யர் வாதத்தில் வெல்லுதல், ஆசார்யரின் மகிமையை சிஷ்யர் விளக்குதல், 'கோடிப்பாடி' கிராமத்தில் மத்வரின் சாதுர்மாச விரதம் - ஆகிய விஷயங்கள் இந்த சர்க்கத்தில் வந்துள்ளது.

**பதிமூன்றாம் சர்க்கம்:**

ஸ்ரீமன் மத்வாசார்யர், ப்ராக்ர்யவாட கிராமத்தில் சாதுர்மாசத்தை முடித்து சஹ்யாத்ரிக்கு வந்தார். ஜயசிம்ம ராஜனின் அழைப்பின் பேரில் அந்த பிராந்தியத்திற்கு பிரயாணம். மதனேஸ்வர தேவாலயத்திலிருந்து வந்த, அழகான தேஜஸ்ஸினை உடைய ஆசார்ய மத்வருக்கு ஜயசிம்மன் செய்த அபூர்வமான வரவேற்பு, அனைத்து தேவர்களாலும் வணங்கப்படும், சச்சிதானந்த மூர்த்தியான ஸ்ரீமத்வரின் மங்கள உருவ வர்ணனை. பாகவத பிரவசன ரூபத்தில் மத்வவாணி, த்ரிவிக்ரம பண்டிதரின் பின்னணி, பாலலீலைகளுடன் அவரது சிறப்புகள், தத்வங்களை

அறியவேண்டுமென்ற அவரது ஆவல், ஆசார்யருடன் சந்திப்பு - ஆகியவை இந்த சர்க்கத்தில் உள்ளன.

**பதினான்காம் சர்க்கம்:**

ஸ்ரீமதானந்ததீர்த்தரைக் கண்ட ஜயசிம்ம பூபாலன், அவரின் அறிவு, திறன், தவம், தேஜஸ்ஸினைக் கண்டு மயங்கினான். பணிவுடன் அவரது சேவகனானான். பத்மதீர்த்தரிடமிருந்து கைப்பற்றிய கிரந்தங்களை மறுபடி ஆசார்யரிடம் ஒப்புவித்தான். சபையில் த்ரிவிக்ரம பண்டிதரின் வருகை. தேவதைகளும் நினைக்கக்கூடிய ஸ்ரீமதானந்ததீர்த்தரின் தினப்படி செயல்களை நாராயண பண்டிதர் மிக அழகாக வர்ணிக்கிறார். அருணோதய காலத்திலிருந்து துவங்கி மாலையில் ஆன்ஹிகங்களின் வரை அனைத்து செயல்களையும் ஸ்ரீஹரியின் யக்ஞமாக நினைத்து, சஜ்ஜனர்களுக்கு சிறந்த வழிகாட்டியாகவும், தேவதைகளாலும் மதிக்கத் தக்கவராக இருந்தார் - என்ற விஷயங்கள் இந்த சர்க்கத்தில் உள்ளன.

**பதினைந்தாம் சர்க்கம்:**

அமராலயத்தில் தங்கியிருந்த ஆசார்யரிடமிருந்து அபூர்வமான சொற்பொழிவு, துர்மதங்களை கண்டித்தல், ஸ்வமதத்தின் சிறப்புகளை ஆசார்யரின் முகத்திலிருந்து கேட்ட த்ரிவிக்ரம பண்டிதர் அத்வைத சித்தாந்தத்தை கைவிடுவதற்கு தீர்மானித்தல். 15 நாட்கள் வாதத்திற்குப் பிறகு, உண்மையை அறிந்து ஆசார்யரின் சிஷ்யராதல். த்ரிவிக்ரம பண்டிதர் மூலமாக மாத்வ கிரந்தங்களின் வர்ணனை. இவர் கேட்டுக்கொண்டதால், ஆசார்யர் அனுவியாக்யானத்தை இயற்றினார். வைராக்ய மூர்த்தியான தனது சகோதரருக்கு அருளி, சன்யாச ஆசிரமத்தைக் கொடுத்து ‘விஷ்ணு தீர்த்தர்’ என்ற பெயரையும் சூட்டினார். விஷ்ணுதீர்த்தரின் சிறப்புகள் வர்ணிக்கப்பட்டுள்ளது. சித்தாந்த பிரசாரத்திற்காக பத்பனாப தீர்த்தரை நியமித்தார். பல சன்யாசி சிஷ்யர்களைப் பெற்ற ஸ்ரீமதாசார்யரின் மகிமைகள் மற்றும் சிஷ்யர்களின் சிறப்புகள் ஆகியவற்றை நாராயண பண்டிதர் இந்த சர்க்கத்தில் விளக்கியுள்ளார்.

**பதினாறாம் சர்க்கம்:**

மகாவேதாந்த காவியத்தின் இந்த சர்க்கத்தில் பண்டிதர் ஸ்ரீமதானந்ததீர்த்தரின் பல மகிமைகளை வர்ணித்திருக்கிறார். பத்தாவது சர்க்கத்தில் விளக்கியதைப் போல இங்கும் சித்தாந்தத்தின் சிறப்புகள் விளக்கப்பட்டுள்ளன. இந்த பூர்ணப்ரக்ஞ விஜயம், ஸ்ரீமதாசார்யரிடம், அவர் நிறுவிய சித்தாந்தத்தில், நிர்மலமான பக்தியை வளர்த்து, ஸ்ரீஹரியின் அருளைக் கொடுக்கும் என்பதில் சந்தேகமில்லை. ஆசார்ய மத்வர் தம் வாழ்க்கை முழுவதும் காட்டிய திவ்யமான, அற்புதமான, காணக்கிடைக்காத, ஸ்ரீஹரியின் மகிமைகளில், நாராயண பண்டிதர் சிலவற்றை மட்டும் இங்கு தொகுத்து, அழகான நடையில் விளக்கியிருக்கிறார். ஸ்ரீமதாசார்யரின் பல மகிமைகளை விவரிக்கும் இந்த சர்க்கத்தில் ஸ்ரீமதாசார்யர், தேவதைகளால் போற்றப்பட்டு, பார்வையிலிருந்து மறைந்த காட்சியை வர்ணித்து, ஸ்ரீ சுமத்வவிஜயத்தின் விஜயமகோத்ஸவமாக சொல்லியிருக்கிறார்.

***

# ஸ்ரீவித்யாபிரசன்ன தீர்த்தர்

ஸ்ரீ மத் கிருஷ்ண பதாம்போஜ மானஸம் கவி புங்கவம்!
ஸ்ரீ மத் வித்யா ப்ரஸன்னாப்திம் குரும் வந்தே நிரந்தரம்!!

ஸ்ரீவித்யாபிரஸன்ன தீர்த்தர் வியாசராஜ மடப் பரம்பரையில் 37 வது பீடாதீஸராக அலங்கரித்த மஹனீயர். இவரது காலம் 1940 முதல் 1969 வரை ஆகும்(பீடத்தில் இருந்த காலம்). இவர் பூர்வா ஸ்ரமத்தில் வழக்கறிஞர் சமூக சேவகர், பல மொழிகளிலும் புலமை, ஸாஸ்திர ஞானம் என விளங்கியதோடு, பீடாதீஸராக அலங்கரித்ததுடன் ஹரிதாஸர் ஆகவும் பக்தி பிரச்சாரம் செய்த மஹா புருஷர். 'பிரஸன்ன' அங்கிதத்தில் கிருதிகளை ரசனை செய்து சமீபகாலத்தில் வாழ்ந்த ஸன்யாஸ தீக்ஷை பெற்ற ஹரி தாஸர் இவர். கிட்டத்தட்ட 30 வருடக்காலம் பீடத்தில் அமர்ந்து மூல கோபால கிருஷ்ணனை பூஜித்த மஹான். இவரது குரு ஸ்ரீவித்யா வாரிதி தீர்த்தர். இவரது ஆஸ்ரம சிஷ்யர் ஸ்ரீ வித்யா பயோநிதி தீர்த்தர். ஸ்ரீ ராகவேந்திர மடத்தின் ஸ்ரீ ஸுயமீந்திர தீர்த்தர், ஸ்ரீ ஸுஜயீந்திர தீர்த்தர், ஸ்ரீ பாதராஜ மடத்தின் ஸ்ரீ தயாநிதி தீர்த்தர், ஸ்ரீ ஸத்யநிதி தீர்த்தர் மற்றும் ஸ்ரீ உத்தராதி மடத்தின் ஸ்ரீ ஸத்யத்யான தீர்த்தர்' ஸ்ரீ ஸத்யாபிக்ஞ தீர்த்தர், ஸ்ரீ ஸத்யப்ரமோத தீர்த்தர் போன்றவர்களின் சமகாலத்தவர் இவர்.

பூர்வாஸ்ரமத்திலே இவரது பூர்வீகம் தமிழ்நாட்டிலே கோவை மாவட்டம் அவினாசிக்கு அருகில் உள்ள தெக்கலூர் என்பதாகும். இவரது மூதாதையர்கள் 19ம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் ஸ்ரீ வித்யா காந்த தீர்த்தர் காலத்தில் ஸோஸலேவிற்கு இடம் பெயர்ந்தனர். இவரது பூர்வாஸ்ரம தாய் தந்தையர்கள் ஸ்ரீமதி ஸத்யபாமா மற்றும் ஸ்ரீ அஹோபிலாச்சார் (பின்னர் ஸ்ரீ வித்யா ரத்னாகர தீர்த்தராக பட்டம் ஏற்றவர்) தம்பதிகள் நாமக்கல் நரஸிம்மரைத் துதித்து சேவை புரிந்ததினால், பல பெண் குழந்தைகளுக்குப் பிறகு ஒரே மகனாகப் பிறந்தார். நரஸிம்மனின் அருளால் பிறந்தமையால் "வெங்கட நரஸிம்மா" என்று பெயர் வைத்தனர். பின்னாளில் இவர் தெக்கலூர் வெங்கட

நரஸிம்மாச்சார் (அ) T.V . நரஸிம்மாச்சார் என்றே பிரஸித்தியாக விளங்கினார்.

ஸ்ரீவித்யா ஸிந்து தீர்த்தர் (அக்கிபேளே ஸ்வாமிகள்) காலத்தில் மடத்தின் செல்வங்களையெல்லாம், பஞ்சத்தைப் போக்க, தான மாக அளித்து விட்ட சூழ்நிலையில், இவரது காலத்திற்குப் பின் ஸ்ரீ வித்யா ஸமுத்ர தீர்த்தர் காலம் வரை மடமானது பணப் பற்றாக்குறையினால் கடினமான சூழ்நிலையைக் கடந்து வந்த காலம் அது. ஸ்ரீவித்யா ஸமுத்திரத் தீர்த்தர் தனக்குப் பிறகு பீடத்தை அலங்கரிக்க மிகச்சிறந்த பாண்டித்தியம் பெற்று விளங்கிய ஸ்ரீ அஹோபிலாச்சாரைத் தேர்ந்தெடுத்து, ஸன்யாஸம் அளித்து "ஸ்ரீ வித்யா ரத்னாகர தீர்த்தர் "என நாமம் சூட்டினார். மடத்தின் நிலைமை அறிந்து' மைசூர் மகாராஜா வும் மடத்தின் நிர்வாகத்திற்கு ஆகும் செலவினை ஏற்று நடத்த ஒப்புக் கொண்டார். மடத்தின் முன்னேற்றத்திற்காக அப்போது பல தரப்பட்ட சேவைகளையாற்றிய மகனீயர் ஸ்ரீ வித்யா ரத்னாகர தீர்த்தர். உத்தராதி மடத்தின் ஸ்ரீ ஸத்ய த்யான தீர்த்தர் முதலானோர் மெச்சிய ஞானம் கொண்ட தபோசீலர் இவர்.

ஸ்ரீவித்யா ரத்னாகர தீர்த்தர் பூர்வாஸ்ரமத்தில் (அஹோபிலா ச்சார்) T.V. நரஸிம்மாச்சாரை ஸாஸ்திரத்தில் மிகச் சிறந்த நிபுணத்துவம் பெற வைக்க வேண்டும் என்ற இச்சை கொண்டி ருந்தார். அவர் ஸன்யாஸ ஆஸ்ரமம் ஏற்க, ஸ்ரீமதி ஸத்யபாமா அவர்கள் குடும்பப் பொறுப்பை ஏற்று நடத்தியதுடன் தனது மகனை வளர்க்கும் மிகப்பெரிய பொறுப்பும் அவருக்கு இருந்தது. இந்நிலையில், அவர் T.V. நரஸிம்மாச்சாரை லௌகிக கல்வி யிலும் மிகச் சிறந்ததாக தயார் செய்தார். ஆச்சார் பெங்களூரில் B.A Honors பட்டம் பெற்று, மேலும் படிப்பைத் தொடர்ந்து, சென்னையில் சட்டம் படித்து BA.B.L பட்டம் பெற்றார். மைசூரில் வழக்கறிஞராக பயிற்சி மேற்கொண்ட நரஸிம்மாச்சார், சிறிது காலம் திருப்பூர் மாவட்டத்தில் உள்ள தாராபுரத்தில் வழக்கறிஞராக பணியாற்றினார். மடத்தின் சட்ட ஆலோசகராக செயல்புரிந்து, மடத்தின் சில நில ஆக்கிரமிப்பு விவகாரங்களில் சட்ட ரீதியாக வெற்றி கண்டு, நிலங்களையும் சொத்துக்களையும் மீட்டு எடுக்க உதவி புரிந்தார்.

இந்நிலையில் ஸ்ரீவித்யா ரத்னாகர தீர்த்தர் பிருந்தாவனஸ்தர் ஆகும் முன், ஸ்ரீ வித்யா வாரிதி தீர்த்தரிடம் சூசனை அளித்து, T.V. நரஸிம்மாச்சாரின் ஸ்வரூப யோக்கியதையை அறிந்து, அவரை ஸாஸ்திர பாடத்தில் சிறந்த வகையில் தயார் செய்யும்படி வழி வகைக் கூறி, உணர்த்தினார். குருவின் வழிகாட்டுதலின்படி நெடூர் கிருஷ்ணமூர்த்தி ஆச்சாரிடமும், வீரசோழபுரம் கிருஷ்ணா ச்சாரிடமும் ஸாஸ்திரப் பாடங்களை சிறப்பாகக் கற்றுத் தேர்ந்தார் நரஸிம்மாச்சார். அதே வேளையில் வியாஸராஜ மடத்தில் பல தரப்பட்ட நற்காரியங்களைப் புரிந்து வந்த ஸ்ரீ வித்யாவாரிதி தீர்த்தர், மூல கோபாலகிருஷ்ணனின் பூஜைக்காக தங்க மண்டபம், வெள்ளி மண்டபம், தங்கத் தொட்டில், பட்டாபி ராமனுக்கு தங்க கிரீடம், கவசம் முதலியவற்றை சமர்ப்பித்ததுடன், வியாஸராஜபுரத்தில் மடத்தை உருவாக்கி, 'வ்யாஸ யோகி சரித்திரம்' என்ற கிரந்தத்தின் ஆராய்ச்சிகளை விளக்குவித்தார். ஸ்ரீஹரிவாயுகுரு மஹனீயர்களின் ப்ரேரணை யினால், சூசனையாகி ஸ்ரீ வித்யா வாரிதி தீர்த்தர் 1935-ம் ஆண்டு T.V. நரஸிம்மாச்சாரியாருக்கு ஸன்யாஸம் அளித்து, 'ஸ்ரீ வித்யா பிரஸன்ன தீர்த்தர்' என்று நாமகரணம் செய்தார். பின்னர் பீடத்தை ஸ்ரீ வித்யா பிரஸன்ன தீர்த்தரிடம் ஒப்படைத்து 1940-ம் ஆண்டு பாத்ரபத மாஸ ஸுக்லபக்ஷ பஞ்சமியன்று ஸ்ரீரங்கத்தில் பிருந்தாவனஸ்தர் ஆனார். ஸ்ரீ வித்யா வாரதி தீர்த்தர். ஸ்ரீ வித்யா பிரஸன்ன தீர்த்தர், தமது குருவிற்கு விஸேஷமாக வைபவங் களுடன் ஸமாராதனையை செய்து சேவை புரிந்தார்.

ஸ்ரீ வியாஸராஜ மடம் முக்கியமாக ஹரி தாஸ ஸாஹித்தி யத்திற்கு பெரும் பங்களிப்பை அளித்ததுடன், அத்தகைய தாஸ கான ஸேவை செய்பவர்களையும் விளக்குவிப்பதில் முக்கிய த்துவம் அளித்து வந்துள்ளது. ஸ்ரீ வியாஸராஜரிடம் இருந்து ஆரம்பித்து, ஸ்ரீ வித்யா காந்த தீர்த்தர், ஸ்ரீ வித்யா ரத்னாகர தீர்த்தர் வரை இத்தகைய சேவையை செய்து வந்ததை சரித்திரத்தில் காண முடிகிறது. அவ்வகையில் ஸ்ரீ மூல கோபால கிருஷ்ணனின் பரிபூர்ண அனுக்ரஹத்திற்குப் பாத்திரரான ஸ்ரீ வித்யா பிரஸன்ன தீர்த்தர் "பிரஸன்ன" என்று அங்கிதத்திலே (முத்ரையிலே) எத்தனையே க்ருதிகளை ரசனை செய்துள்ளார். ஸ்ரீ பாதராஜர், ஸ்ரீ வியாஸராஜர், ஸ்ரீ புரந்தரதாஸர் போல எந்தவொரு தலைப்பிலும்

பலவித ராகங்களில் க்ருதி களை ரசனை செய்யும் திறமை உடையவராக விளங்கினார். ஸாஸ்திர விஷயங்களின் ஸாரத்துடன், பக்தி ரஸத்தையும் கலந்து மிக ரம்மியமான இசையில் அமைந்த பாடல்கள் இவருடையவை ஆகும். த்விபதி, சதுஷ்பதி, ஷட்பதி எனக் கடினமான இசை வகையிலும் கூட க்ருதிகளை படைத்துள்ளார். கன்னடத்தில் அமைந்த படைப்புகள் பலவற்றுள் "பதரிகாஸ்ரம வர்ணனை," "வைகுண்ட வர்ணனை," "ஸுமத்வ விஜய ஸார ஸங்க்ரஹம்" போன்றவை மிக முக்கியமானதாகும். அவருடைய ஸாஹித்தியங்களில் "ஹுபேகே பரிமளத", "குனி குனி யெலொ பால கோபால", "ஜனும ஜனுமதலி" போன்றவை மிக பிரபலமானவை. குரு மஹனியர் ஸமஸ்க்ருதத்திலும் க்ருதிகளை வழங்கியவர். ஆங்கிலத்திலும் மிகச் சிறந்த புலமை வாய்ந்த இவர், புகழ் பெற்ற ஆங்கில எழுத்தாளர்களான ஷேக்ஸ்பியர், மில்டர், கெய்த் போன்றவர்களின் படைப்புகளாலும், ஸமஸ்க்ருதத்தில் காளிதாசனின் படைப்புகளாலும் ஈர்க்கப்பட்டு தனக்கென ஒரு பாங்கினை உருவாக்கி பலதரப்பட்ட மேடை நாடக படைப்புகளை அளித்துள்ளார். அவற்றில் சில கன்னடம் மற்றும் ஆங்கிலத்தில் கிடைக்கின்றன.

ஸ்வாமிகள் சமுதாய பிரச்சினைகளை நநோக்குவதிலும், சரி செய்வதிலும் முற்போக்கு சிந்தனையாளராக இருப்பினும், ஸம்பிரதாயங்களைக் கடைபிடிப்பதில் மிக கண்டிப்பாக இருந்தவர். ஸ்வாமிகளின் சமுதாயத் தொண்டும் ஞான காரியத்திற்கான சேவையும் அளவிட முடியாதது. அப்போதைய பேஜாவர் மடாதீசர் ஸ்ரீ விஸ்வேஸ தீர்த்த ஸ்ரீ பாதங்கள் உருவாக்கிய 'அகில பாரத மத்வ மஹா மண்டல' என்னும் மாத்வர்களை ஒருங்கிணைத்து ஸபைகளை அமைத்து தத்வ பிரசாரம் செய்யும் ஸத்காரியத்தில் , ஸ்ரீ வித்யா பிரஸன்ன தீர்த்தர் ஆரம்பம் முதலே, அவருடைய காலம் முழுவதும் வெவ்வேறு சபாக்களில் தலைமை பொறுப்பேற்று நடத்தியவர். இத்தகைய சபாக்களில் அவர் அளித்த சொற்பொழிவுகளின் தொகுப்பு கட்டுரைகளாக வெளிவந்துள்ளன. உதாரணத்திற்கு சென்னையில் தர்மபிரகாஷ் மண்டபத்தில் நடைபெற்ற சபாவில் மைசூர் மகாராஜா முதலியோர் கலந்து கொண்டு கௌரவித்தது குறிப்பிடத்தக்கது. ஸ்வாமிகள்

வியாசராஜபுரத்தில் உள்ள சந்த்ரிகா குருகுலத்தில் பயிலும் வித்யார்த்திகளுக்கு இலவசமாக உணவு விடுதிகளை ஏற்படுத்திக் கொடுத்து ஸ்ரீ மடத்தின் மூலமாக மாபெரும் சேவையாற்றியுள்ளார். முக்கியமாக பரமகுருவான ஸ்ரீ வித்யா ரத்னாகர தீர்த்தரின் படைப்புகளைத் தொகுத்து வெளியிட்டதுடன் "பாஷ்ய தீபிகா" முதலான கிரந்தங்கள் வெளிவர ஸ்ரீ மடத்தின் மூலம் பொருள் உதவியும் ஊக்குவிப்பும் நல்கியவர். 'தஸப்ரமதி தர்ஸன ப்ரகாசினி சபாவின்' மூலம் ஸத்காரியங்களை நடத்தி ஊக்குவித்தவர் ஸ்ரீ வித்யா பிரஸன்ன தீர்த்தர். தாம் பிருந்தாவனஸ்தராகும் காலம் நெருங்குவதை உணர்ந்து மடத்தின் சிஷ்யரான மிகச் சிறந்த பண்டிதரான ஸ்ரீ பூர்ணபோத ஆச்சாரைத் தேர்ந்தெடுத்து, 'ஸ்ரீ வித்யா பயோநிதி தீர்த்தர்' என்று நாமக்கரணம் செய்து ஸன்யாஸ தீக்ஷை வழங்கினார்.

ஸ்ரீ வித்யா பயோநிதி தீர்த்தர் பூர்வாஸ்ரமத்திலேயே ஸ்வாமி களிடத்தில் அத்யயனம் செய்தவர். விஸேஷமாக தஸ ப்ரகர ணங்கள், ஸூத்ர பாஷ்ய தீபிகா, ப்ரமாண பத்ததி, தத்வ பிரகாசிகா போன்றவற்றை கற்றுத் தேர்ந்தவர். பெங்களூரில் ஸ்ரீ வியாஸ ராஜ மடத்தின் திவானாகவும் ஸேவையாற்றியவர். அத்தகைய சிஷ்யருக்கு ஆஸ்ரமத்தை அளித்ததுடன், பீடத்தையும் ஒப்படைத்து, 1969-ம் ஆண்டு மார்கஸீர்ஷ மாஸ (மார்கழி) பௌர்ணமி தினத்தன்று ஸோஸலேவில் பிருந்தாவனஸ்தரானார் ஸ்ரீ வித்யா பிரஸன்ன தீர்த்தர். இன்றும் தம்மை வேண்டும் பக்தர்களுக்கும், ஸேவை புரிவோருக்கும், ஞான, பக்தி, வைராக்கி யத்தையும், விஸேஷமான பாண்டித்தியத்தையும் அருள்பவரான, இத்தகைய மகனியரின் பாதம் பணிந்து போற்றுவோமாக. ஸ்ரீ வித்யா பிரஸன்ன தீர்த்த குருவாந்தர்கத பாரதி ரமண முக்ய ப்ராணாந்தர்கத ஸ்ரீ மூல கோபால கிருஷ்ணனின் பாதார விந்தங்களில் ஸமர்ப்பணம்! ஸ்ரீ கிருஷ்ணார்பணமஸ்து !!

**மேடவாக்கம்,சென்னை'** **பிரஸங்க பூஷணம்',**
**'பிரவசனபூஷணம்','மத்வரத்னா'**
**30-4-2022** **S. லக்ஷ்மிபதிராஜா**

# ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தரின்
# ஸ்ரீமத்வ விஜய ஸார ஸங்க்ரஹ

**(மூலம் மட்டும் – பாராயணத்திற்காக)**

லகுமிவல்லப4னாக்3ஞெயனு தா
முகுடத3லி வஹிஸுதலி ஸுரவர
நிகரவந்தி3தசரண கபிரூபவனெ தா தாளி |
லகுமி ஸீதெகெ3 ராமசரிதெக3
ளகி2லதி3ம் ஸந்தஸவ புட்டிஸி
**ஶ**குதியிந்த3லி வனதி3 லங்கி4ஸி ரகு4வரன நமிஸி ||1

வனதி4யலி ஸேதுவெய கட்டுத
த3னுஜரனு ஸதெ3ப3டி3து3 த3 **ஶ**ரத2
தனயஸதி நீடி3த3 ஸுமாலிகெயனுக்3ரஹவ படெ3து3 |
வனஜநிலயள வல்லப4ன பத3
வனஜவு ஹ்ருத3யத3லி ஸந்தத
மனனத3லி கிம்புருஷத3லிஹ ஹனுமனனு ப4ஜிபெ1 ||2

பாண்டு3ஸதி மாருதனு முட்டலு
க3ண்டு3தனயன படெ3யலா **ஶிஶு**
க2ண்டி3ஸிது **ஶ**த **ஶ்**ருங்க3 கி3ரியனு தனுவ ஸங்க3த3லி |
தண்ட3தண்டதி3 ராஜகுவரர
புண்ட3ட3கி3ஸி த்ருபத3 த4ரணீ
மண்ட3லேஷன குவரி கரகமலக3ள தா கெ3லித3 ||3

அரிஸமூஹவ பொஸகி1 தா யது3
வரன சரணாம்பு3ருஹ மது4கர
னுரு பராக்ரமவரிது தி3திஜரு மத்ஸரதி3 உரிது3 |
த4ரணியலி புட்டித3ரு து3ர்மத
ஸரணி ஹரடு3த ஸேட3னெஸக3லு
மருத3ம் **ஶ**ன பீ4மஸேனன சரணவே **ஶ**ரணு ||4

நிஜமதிய தி3னகரனு முளுக3லு
அஜிதனாக்3ஞெய படெ3த3 மருதனு
ருஜுதபக3ளாசரிஸி பரம வி **ஶு**த்3த4ராகித்3த3 |
ஸஜன **ஶோ**க2ர மத்4யகே3ஹ
த்3விஜவரன ஸதியுத3ரத3லி தா
பி3ஜயகெ3ய்த3னு ஹொரகெ3ட3ஹி பே3ரொந்த3னா க்ஷணதி3 ||5

அஸம மூவத்தெரடு3 லக்ஷண
**ஶிஶு ஶ**ரீரவ பொக்கனாக்ஷண
பி3ஸுட1னா பரஜீவவனு அஸுபதியு தா ஹொரகெ3 |
அஸுரநிகரகெ1 கே2த3 ஸு2கஸந்
தஸவு ஸஜ்ஜனததிகெ3 ஈ பரி
ஸுஸமயவிதெ3ம்பு3த3 நுடி3யிது3 தே3வது3ந்து3பி4யு ||6

கோ3ப்ரதா3யக விப்ரவர்யகெ3
க்ஷிப்ரத3லி ஸுப்ரக்3ஞெயித்தனு
ஸ்வப்ரபா4வதி3 நிஜஜனர க்3ரஹப4யவ நீகி3ஸுத |
விப்ரஸதி ஹொரகி3ரலு ரோத3ன
தப்பிஸலு நிஜ ஸஹஜெயுணிஸித3
ப்ரப்ரபக்வ குலித்த2 பு4ஜிஸி ஜீர்ணிஸித3 க்ஷணதி3 ||7

ம்ருது3ள கலபா4ஷணதி3 ஸ்வஜனகெ
முத3வனீயுதலொந்து3 தி3ன
வைதி3த3னு வனவனு வ்ருஷப4 பா3லவ பிடி3து3 ஸந்தஸதி3
பெத3ரிஸித3 ருணகொட்ட த4னிகன
ஹ்ருத3ய கரகு3வ தெரதி3 ஸுந்த3ர
வத3ன த3ர் **ஶ**னவித்த வாயுகுமார ரக்ஷிஸலி ||8

ஜனனிஜனகர ஸஹித பா3ந்த4வ
ஜனர க்3ருஹகொ3ந்து3 தி3ன தெரளித3
ஜனதெ1யதி1 ஸம்ப்4ரமத3லிருதிரெ தரள ஹொரஹொரட |
வனவனவ ஸஞ்சரிஸியல்லிஹ
வனஜனாப4ன மந்தி3ரக3ளலி
த3ணிவு காணதெ3 ஹரிய நமிஸுத ஸிக்கித3னு பி1தகெ3 ||9

யாரு நினகெ3 ஸஹாயகரு ஈ
கோ4ரவனத3லி பேளெனலு தா
தோரித3னு வனஸத3னவல்லப4 மாரஜனகனனு |
ஸூரி **ஶி**வனனு கெ3லிது3 ஸபெ4யலி
சாருவடுவெனிஸித3 ஸகாலதி3
மாருதன மூரனெய ரூபவு **ஶ்**ரேயவனு கொட3லி ||10

ஸரிது3 ப3ருதிரெ கொ1ல்லலோஸுக3
உரக3ரூபிய தை3த்யனனு வர
சரணகமலத3 லீலெயலி ஸம்ஹரிஸித3னு க்ஷணதி3 |
ஸுரவரார்ச்சித சரணநாத3ரு
த4ரணிஸுரனனு நமிஸி வேத3வ
நரியுவந்த3தி3 நட1னெ மாடி3த3 லோக **ஶி**க்ஷகனு ||11

பா$^3$லலீலெக$^3$ளல்லி ப$^3$ஹுதர
காலவனு களெயுத வினோத$^3$தி$^3$
பா$^3$லனொப்$^3$ப$^3$ன சிரதனத$^3$ யாதனெய பரிஹரிஸி |
ஆலயகெ தெரளுவ மொத$^3$லு கு$^3$ண
**ஶா**லி கு$^3$ருவனு நமிஸி தன்ன க்ரு
பாலவதி$^3$ பரலோக ஸாத$^4$க ஹரி ப$^4$குதியித்த **||12**

த$^4$ரணிப$^4$வ தி$^3$திஸுதர த$^3$ண்டி$^3$ஸெ
பரமஹம்ஸா **ஶ்**ரமவ படெ$^3$யலி
கு$^3$ருக$^3$ளனு ஹுடு$^3$குதலி ஹொரட$^1$னு ஸகலவ த்யஜிஸி |
பரமமங்க$^3$ள வேதி$^3$ஜெய கர
ஸரஸிஜதி$^3$ தொ$^3$ரெதுது$^3$த$^3$ பு$^4$ஞ்சிஸி
கரண **ஶு**த்$^3$தி$^4$யல்லித்த யதிவரனோலக$^3$கெ$^1$ ப$^3$ந்த$^3$ **||13**

தாளித$^3$ரெ யத்யா **ஶ்**ரமவ நீ
பா$^1$லகரு யாரெமகெ$^3$ பு$^4$வியலி
லாலிஸெம்மய வசனவெந்த$^3$ரு ஜனகஜனனியரு |
பாலிஸுவனென்னனுஜ நிம்மனு
கேளிதி$^3$த்$^3$த$^3$ரெ என்ன நுடி$^3$யனு
தாளலாரிரி ஸதத து$^3$க்க$^2$வனெந்து$^3$ த்$^3$ருட$^4$மனதி$^3$ **||14**

கு$^3$ருவரேண்யர கரஸரோஜதி$^3$
பரம ஹம்ஸா **ஶ்**ரமவ பொந்து$^3$த
கரெத$^3$ராத$^1$கெ$^3$ த$^4$ரெஸுரரு வரநியகமக$^3$ள ததிய |
ஹருஷத$^3$லி வர பூர்ணபோ$^3$தா$^4$
பி$^4$த$^3$தி$^3$ கு$^3$ணக$^3$ளனரிது ஜீவர
வரவர பரிமித மாத்ர ப்ரணவ ஜபாதி$^4$காரிக$^3$ளு **||15**

ரஜதபுரவல்லப$^4$ன ஸேவெகெ$^3$
விஜயவெம்பு$^3$வ தோருவந்த$^3$தி$^3$
பு$^4$ஜபிடி$^3$து$^3$ தா கொட்டநீத$^1$னு அச்யுதேக்ஷரிகெ$^3$ |
அஜிதனாக்$^3$ஞெய படெ$^3$த$^3$ ஸுரநதி$^3$
பிஜயிஸித$^3$ளாஸ்த$^2$ளகெ கீர்த்திய
த்$^4$வஜவு ஹாரிது$^1$ வாத$^3$த$^3$லி ஸுஜனார்த்தி$^1$ மரெயாய்து$^1$ **||16**

வேத$^3$வித்யா ராஜ்யத$^3$லி பர
மாத$^3$ரத$^3$லபி$^4$ஷேகவீதகெ$^3$
கெ$^3$ய்த$^3$ரச்யுத மதிய தீமத்$^3$ரரொந்து$^3$ தி$^3$ன |
பா$^3$த$^4$பா$^3$ரத$^3$ மோத$^3$வனு தி$^3$ன
ஸாதி$^4$ஸுவ **ஶா**ஸ்த்ரக$^3$ளானு ரசிஸலு
மோத$^3$தீர்த்த$^2$ ஸுனாமவிவரிகெ$^3$ ஸார்த்த$^2$கவாயிது **||17**

ஹேயவாதக3ளரித கெலரனு
ந்யாய**ஶா**ஸ்திரதி3 சதுரரனு ஹொஸ
ந்யாயக3ள தோருதலி கெ3த்3த3ரு அதிஸுலப4த3லெ **|**
ஜீயபூர்ணப்ரமதி1 த4ரெயொள
ஜீயரெனிஸித3 பு3த்3தி3ஸாக3ர
ப்ரேயனீதகெ3 வாதி3ஸிம்ஹன கெ3லிது3 தா மெரெத3 **||18**

அகு3ணனீ**ஶ்**வர ஈஷஜீவரு
விக3தபே4த3ரு ஜக**3**தி**3**ந்தெனிது1
பொக3ளுதிஹ மாயிக3ள பா4ஷ்யத3 தோ3ஷக3ள தோரி **|**
ஸுக3ம ஸூத்ரார்த்த2க3ள விவரிஸி
ஸ்வகு3ருஸஹிததி3 ஹொரடு த3க்ஷிண
தி3க3னு ஸஞ்சரிஸுத ப3ந்த3ரு விஷ்ணுமங்க3ளகெ **||19**

மங்க3ளாங்க3ன சரணகெரகு3த
அங்கு3டத3 ஜாட2ர ப்ரபா4வதி3
துங்க3கத3லீனிகரகள பு4ஞ்சிஸுத பி4க்ஷெயலி **|**
அங்க3ஸரஸிஜநாப4ஶ்ரீ
ரங்க3ரமணன நமிஸி பூ4ஸுர
ஸங்க3தி3ந்தா3த3ரவ படெ3யுத மெரெத3 ஸபெ4க3ளலி **||20**

ச2லதி3 ஸபெ4யலி பு3த4ஜனங்க3ளு
ஹலவு வித4 ப்ரஶ்னெக3ள மாட3லு
ஸுலப4வாது3த்தரக3ளித்தரு திளியப3யஸித3ரு |
ஹலவு வித4த3ர்த்த2க3ளவரு ஶ்ரீ
நிலய நாமத3 ஸாஸிரக3ளிகெ3
அலவபோ3த4ரு பேளலதி விஸ்மயதி3 நமிஸித3ரு ||21

ஒந்து3 தி3ன ஸத3ஸினபா1லா
எந்தி3ருவ பத3த3ர்த்த2வனு ப3லு
ஸுந்த3ராங்கி3யளெந்து3 நுடி3த3ரு நம்பி3கெயு ப3ரலு |
முந்தெ3 ப3ரலிஹ விப்ரவரனனு
ஸந்தி4ஸுத கேளிரித3ரர்த்த2வ
நெந்து3 ஸர்வக்3ஞதெய ஜனரொளு ப்ரகடபடி3ஸித3ரு ||22

ஸதிய ஸபெ4யலி ஸீரெ ஸெளெத3தி
க2தியபடி3ஸித3 து3ருள த3னுஜர
ததிய ஸவருவ கோ4ரதீ3க்ஷெய ப3ந்த4னத3 தெரதி3 |
ஶ்ருதிததியு மாயாக்2யவாத3த3
சிதெயலிருதிரெ ஸுஜனஷரணரு
தி3திஸுதர நாஷனத3 கங்கணகட்டிரு க்ஷணதி3 ||23

ஹிமகி$^3$ரிய தலத$^3$ல்லி நெலெஸிஹ
கமலெரமணன கண்டு$^3$ வந்தி$^3$ஸி
விமலமதிக$^3$ளு கீ$^3$தெக$^3$வர ப்$^4$யாவனர்ப்பிஸலு |
ஹிமனிலய ஶ்ருங்கத$^3$லி ப$^3$தரீ
த்$^3$ரும பு$^3$ட$^3$தி$^3$ ராஜிஸுவ வ்யாஸா
ஶ்ரமவ ஸேரலு தெரளித$^3$ரு ஹரியாக்$^3$ஞெயனுஸரிஸி || 24

துஹிமஹிதுதி$^3$யல்லி ராஜிஸு
திஹ ப$^3$த$^3$ரிஷண்டக$^3$ள மத்$^4$யதி$^3$
அஹிபதிய போ$^4$க$^3$த$^3$லி ரமிப ஶ்ரீபதிய தெரதி$^3$ |
ப$^3$ஹுள தேஜவ நோடி$^3$த$^3$ரு பூ$^4$
ஸுரர ஸமீபகெ ப$^3$ரலு தாபஸ
நிவஹ விஸ்மயதி$^3$ந்த$^3$ நோடி$^3$த$^3$ராவரிவரெந்து$^3$ ||25

தாபஸோத்தம பா$^3$தராயண
ரூபவனுபமசித் ஸுக$^2$மாயா
பாத$^3$மெளளிய நோடி$^3$ பரவஶராகி$^3$ மெய்மரெதரு |
தாபஸர மத்$^4$யத$^3$ல்லி பொளெயுவ
ரூபவிது$^3$ மானஸதி$^3$ நெலெஸிஹ
ஶ்ரீபதியெந்த$^3$ரிது விஸ்மராத$^3$ராக்ஷணதி$^3$ ||26

ப$^4$குதியலி பா$^3$கி$^3$த$^3$ரு ஶிரவனு
ஸுக்ருத ஶாலிக$^3$ளாக்ஷணதி$^3$ நகு$^3$
முக$^2$தி$^3$ந்த$^3$ ப$^3$ந்தெ$^3$த்தித$^3$ரு வ்யாஸரு ப்ரதம ப$^4$குதரனு |
ஶுகபிதரு ப$^4$குதாக்$^3$ரணிக$^3$ளீ
ஸுக$^2$கராலிங்க$^3$னத$^3$லிருதிரெ
ப்ரகடவாயிது ரவிஸுதெய ஸுரநதி$^3$ய ஸங்க$^3$மவு ||27

தனய ஶுகனிகு$^3$ தொ$^3$ரெயதி$^3$ஹ லால
னெய படெ$^3$த$^3$ மஹாத்மரனு அதி
வினயதி$^3$ந்தா$^3$த$^3$ரிஸித$^3$ரு முனிஜனரு விஸ்மயதி$^3$ |
வனஜஸம்ப$^4$வ தனகெ$^3$ ப்ரியதம
ஜனகெ$^1$ ஹரிஸத$^3$னத$^3$லிருவ பரி
முனிவரரு யதிவரரு பெ$^3$ளகித$^3$ராஶ்ரமவன்னெல்ல || 28

குஶலபு$^3$த்$^3$தி$^3$ய அஸம ப்ரதிபெ$^4$யு
ஹொஸதெரெத$^3$ ப்ரபெ$^3$யிந்த$^3$லொப்புவ
த$^3$ஶமதிய தருஶனதி$^3$ ஜனதெகெ$^3$ மூடி$^3$தச்சரியு |
அஸுபதிக$^3$ளாத$^3$ரதி$^3$ ஶாஸ்திரத$^3$
ரஸவ பு$^4$ஞ்சிஸி கு$^3$ருஸஹித மா
நஸ விகாஸதி$^3$ ஹொரடு ஸேரித$^3$ராஶ்ரமாந்த$^1$ரவ ||29

த2ளத2ளிஸுதிஹ தா4மவர்ஜித
ஜ்வலனத3ந்திஹ தாபஸாக்ருதி
குளிதிருவுத3னு நோடி3 நயன விகாஸ பொந்தி3த3ரு |
ஹொளியிதாக்ஷண ஈத நிக3மா
வளிய ரக்ஷிஸிதா3தனெம்பு3து3
ஹலவு வித4த3வதாரக3ள சிந்திஸுத நமிஸித3ரு ||30

எரடு3 ஹரிரூபக3ள ப3ளியலி
பரமஹருஷாம்பு4தி3யலிருதிரெ
தொ3ரகதீ3ஸுக2வெம்பு3த3ரித1ரு மூரு லோகத3லி |
அரியதஞ்ஞானிக3ளு ரசிஸித3
து3ருள பா4ஷ்யவ க2ண்டி3ஸுவுத3கெ
தெரளு பு4வனகெ த3க்ஷணதி3 நீனெந்த3 லோகபதி ||31

அஜித பாராஶரியு கருணதி3
ரசிஸிருவ வரஸூத்ரனிகரகெ
ரஸிஸு ஶுப4தம பா4ஷ்யவனு ஸஜ்ஜனரனுத்3த4ரிஸு |
உசிதவல்லவித3ன்ய ஜனரிகெ3
ஶுசி யஷவ ஸ்ரேயஸவ பொந்து3வி
வசனவிதெ3 ஶ்ரீபதியு பேளித3 ஶிரதி3 த4ரிஸித3ரு ||32

ஹோக3லாக்3ஞெயனித்த யது3ஸுத
னாகி3 ஜனிஸித3 ஹரிகெ3 ஶிரவனு
பா3கி3 ஸகலவ ஶ்ரவணகெ3ய்த3ரு ஶ்ருதிபதிக3ளிந்த3 |
போகி3ப3ரலப்பணெய படெ3த3ரு
வேக3த3லி தா3டி1த3ரு கி3ரிக3ள
பூ4க3ஸுரதரு நோடி3 ஶிஷ்யரு நீகி3த3ரு க்லேஷ ||33

த்3விஜரு பி4க்ஷெய நீடி3தெ3ல்லவ
த்யஜிஸதெ3லெ பு4ஞ்சிஸி மஹாமதி
விஜய படெ3த3ரு ஆருஶாஸ்த்ரக3ளரிதவர கெ3லிது3 |
நிஜதனுவ பே3ரொந்து3 ரூபவ
ஸ்ருஜிஸுவந்த3தி3 ஸூத்ரபா4ஷ்யவ
ஸ்ருஜிஸி பொரெத3ரு ஸத்யதீர்த்தரு ப3ரெத3ராபா4ஷ்ய ||34

ஸரிது3 கோ3தா3வரிய தடத3லி
முரிது1 ஷட்ஸமயக3ள ஸுலப4லி
ஷரணு ஹொடெ3ஸித3ரெல்லர விது3ஷர ஸபெ4ஸபெ4க3ளல்லி |
ஹிரிய ஶோப4னப4ட்டரலி ப3லு
ஸரளதெய தோருதலி பா4ஷ்யத3
திருளுக3ள தோரித3ரு யதிவரராதனிகெ3 த3யதி3 ||35

குமததொா3ளு மதிலீனரச்யுத
ப்ரமதிக3ள மதிரோக3 தொலகி3ஸி
விமலமதியனு கருணிஸலு ப3லு ஶாஶ்வதவதா3ய்து |
அமிதஸுந்த3ரமூர்த்தி கோ3குல
ரமணனனு ஸ்தா2பிஸுவ யக்3ஞவ
க்ரமதி3 நடெ3ஸலனுக்3ஞ்யெயித்த1ரு ||36

ஒந்து3 தி3ன மார்க்க3த3லி ப3ருதிரெ
நிந்த்3ய நரபதி நெலவனகி3யலு
நந்தி3தீர்த்தரிகி3த்தனாக்3ஞெய ஒந்த3னரியதெ3லெ |
ஹிந்தி3னனுப4வஶூன்யரிகெ3 ஹே
கெ3ந்து3 தோரலு பூ4மியகி3யுதெ
நிந்த3னான்ருப விவஷனாத3னு முந்தெ3 ஸாகி3த3ரு ||37

தி3விஜெ க3ங்கெ3ய தா3டி1 ஶிஷ்யர
நிவஹதிந்3தொ3ட3கூ3டி3 ப3ருதிர
லிவர கொல்லலு ந்ருபன தூ3தர ப3ந்த3ரெது3ரனலி |
விவித3 யுகுதிக3ளிந்த3 தடெ3யுத
ஸவினுடி3ய கா3ம்பீ4ர்யதி3ந்த3லி
யவன நரபதியிந்த3 பொந்தி3த3ரர்த்த4ராஜ்யவனு ||38

ஹோத3ஹோதெ3டெ3க3ளலி பரிபரி
பா4தி4ஸித3 ஶத்ருக3ள கெ3லியுத
பா3த3ராயண ஷிலெய படெ3த3ரு த4ர்மஸுதனிந்த3 |
வேத3னாயகனாக்ஞெயலி பர
மாத3ரவ தோரித3ரு த3ஷமதி
ஶோதி4ஶித3 தாத்பர்யக3ள பேளித3ரு பா4ரதகெ ||39

ஹோதி3கெவஸனவு தோயத3ந்த3தி3
நதி3ய ப்ரவாஹவ தா3டி ப3ந்த3ரு
ம்ருது3லெ க3ங்கெ3யு பூஜிஸித3ளீத1னனு ப4குதியலி |
முத3கெ ஶிஷ்யர வ்ருந்த3வெல்லவ
கத3னத3லி கெடு3ஹித3ரு பி4க்ஷவ
நொத3கி3ஸித3 ஶிவ த்4விஜன வேஷதி3 கா3னகுஶலரிகெ3

பரிபரிய லீலெக3ளனீபரி
சரிஸுதிரலானந்த3தீர்த்த2ரு
ப3ரனிக3ம ஸூத்ரேதிஹாஸக3ளரியலாத3ரதி3 |
நெரெதி3ருவ ஶிஷ்யர ஸமூஹக3
ளரியுவந்த3தி3 போ4தி4ஸுத்திரெ
உரக3பதி ஸனகாதி3முனிக3ள ஸஹித கேளித3னு ||41

ஈஷணத3னு நோடி3த3ரு க3க3னதி3
பூ4ஸுரரு ப்ரவசனத3 ஸமயதி3
சேஷ தெரளித3 தன்ன ப4வனகெ முனிஜனர ஸஹித |
பா4ஷ்ய ப்ரவசனதி3ந்த3 லாப4வி
ஶேஷ வேனெம்பு3த3னு கேளலு
ஶேஷ யுகுதிய விவரிஸித3 ஸனகாதி3 ஸஹஜரிகெ ||42

துங்கமதிக3ள ஶாஸ்த்ரக3ள வ்யா
ஸங்கமாடு3வ ஸுஜனனிகரகெ
மங்க3ளாங்க3னு கொடு3வ தன்னய ஶாஷ்வதத3 பத3வ |
அங்க3னெயரொட3கூ3டி3 து3க்க2த3
ஸங்க3வில்லதெ3 ப்ரதிக்ஷணக3ளலி
ப4ங்க3பா4ரத3 ஸுக2க3ளனுப4விஸுவரு முகுதியலி ||43

நோடு3வரு நாராயணன ஸ்துதி
மாடு3வரு பரமாத3ரதி3
தாவீட3னரியரு ஸுந்த3ர ஸுமங்க3ளன த3ருஶனகெ |
மூடி3த3பி4லாஷெக3ளு தக்ஷண கை
கூ3டு3வுது3 ஹரியாக்3ஞெயிந்த3லி
நோட3பே3கென்னுவரனாக்ஷண தந்து3தோரிஸுவ ||44

ப்ரசுரமதி கேஸரிதீபரி
ரசிஸுதிரெ வ்யாக்யானக3ர்ஜனெ
ருசிஸலாக3தெ3 மாயினரிக3ளு நடு3கி3த3வு ப4யதி3 |
ஶுசிய நடெ3னுடி3ஶூன்ய து3ர்ஜன
நிகர சோளஜத்3வீபபுரிக3ள
ப4ஜிஸித3ரு ரக்ஷிஸலு மாயாவாத3 ஸரணியனு ||45

தி3ட்டபவனன ஸுதன கீர்த்திகெ3
ஹொட்டயுரியிது து3ருளஜனரிகெ3
கெட்டயோசனெ மாடி3 பரிபரி பீடி3ஸித3ரிவர |
ஶிஷ்டஹரி ப4குதாக்3ரணிய தா
விஷ்டு பீடி3ஸதி3ரலு தமஸிகெ3
கட்டுவுது3 பா1தே2யவெந்தெ3ந்தீ3பரிய நட3தெ ||46

கெ3லிது3 ஶார்த்தூ3லாக்2ய விது3ஷன
அலவமதி வேத3க3ள நிகரகெ
ஸுலப4த3லி வ்யாக்2யான தோரித3 ஸுஸ்வரக3ளிந்த3 |
ப3ளிக நீ பேளெனலு ஸ்வரக3ள
திளியதெ3லெ ஶார்த்தூ3ல பேளலு
குளித ஜனரபஹாஸதி3ந்த3தி1 நாசித3னு து3ருள ||47

பது3மனாமக1னோர்வ து3ருளனு
தத3னுக3னு புஸ்தகஸமூஹ
கதி3யலிவரனு நிர்ப்ப4யதி3 க2ண்டி3ஸித3ராக்ஷணதி3 |
பெ3த3ரித3ரு து3ர்ஜனரு வேக3தி3
சத3ரித3ரு மெரயாகெ3 விஸ்தர
ஹ்ருத3யதே3வாலயவ ஸேரித3 ப்ராக்3யவாடத3லி ||48

பரமபதி ப4குதரனுத்3த3ரிஸலிகெ
நரபதிய ப்ரார்த்த2னெய தந்தி3ஹ
புருஷனோர்வன நுடி3ய லாலிஸி தெரளித3ரு முத3தி3 |
த4ரெய ரவி ஸஞ்சரிப தெரத3லி
ஸரிது3 பஶ்சிம ப்ராந்தத3ல்லிஹ
ஸ்மரனவல்லப4னாலயவ ஸேரித3ரு கு3ருவரரு ||49

நிஶீயனாமந்தி3ரதி3 களெயுத
பஸரிஸலு ஜயஸிம்ஹராஜனு
ஹஸன ப4குதிய ப4ரதி3 ப3ந்தெ3து3ரினலி நமிஸித3னு |
அஸமதேஜர த3ருஶனதி3 பர
வஶரு ஸாஸிர ஜனரு ப3ருதிரெ
ஸூஸமயதி3 ஶ்ரீவிஷ்ணுமங்க3ள ப3ளிகெ3 ஸாரித3ரு ||50

உத்தமர லக்ஷணக3ளலி
மூவத்தெரடு3 மாத3ரிய தோருவ
மஸ்தகாதி3 நகா2ந்த ஸௌந்த3ர்யக3ள பெ3ளகு3தலி |
ஶிஸ்தினலி ப3ருதிருவ மூர்த்திய
ஹத்திரதி3 நோடி3த3ரு ஜனக3ளு
ஸ்வஸ்தமானஸதி3ந்த3 பொக்கரு தே3வநிலயவனு ||51

ப4வத3 தாபவ பரிஹரிஸி ப3லு
ஜவதி3 மங்க3ளததிய நீடு3வ
ப4கவத3வதாரக3ள லீலாம்ருதவனுணிஸித3ரு |
கவிவரேண்ய த்ரிவிக்ரமவர்யனு
ஸவியனரிது1 மத்4வ ஶா ஶா ஸ்த்ரத3
ஸூவினயதி3 பே3டி3த3னு கு3ருக3ள சரணதா3ஸ்யவனு ||52

ருணியு நானிரெ நிம்ம கருணகெ
மிணுகு1திருவரு க்3ரந்தசோரரு
கெணகலாரரு முந்தெ3 நிம்மய ஸஹசரரனெந்தூ3 |
க3ணிஸலாக3து3 குந்து3கொரதெய
த்ருணகெ ஸமரீஜனரு நரபதி
வினயத3லி பே3ட3லு த்ரிவிக்ரமனனுஜக3த3நித்த ||53

ஸகலமங்க3லதா3த ஸுஜனகெ
ஸுக2வ லேஶவ கொட3னு கு1னகெ1
சகிதராத3ரு நோட3லீதன மத்4யமத3 ஜனரு |
அகி2ல ஸமயதி3 ஸ்னானஜபதப
ஸுக2மயத3 ஶா ஸ்த்ரக3ள ப்ரவசன
விகஸவாத3து3 ஸுஜன நிகரகெ ஸாது4கர்மக3ளு ||54

அருணனுத3யத3லெத்து3 கு3ருக3ளு
ஹருஷமானஸதி3ந்த3 ஶ்ரீஶன
சரணகமலவ சிந்திஸுத ஸந்ததவு |
ஸரிவ ஸூர்யனு பஶ்சிமகெ தா
மரெய பொந்து3வதனக கர்மவ
பரிபரியிம் சரிஸுத தாவனுதி3ன ||55

ஸ்னானமாடி3 தடாகத3லி ஶுசி
மானஸத3 மந்தி3ரதி3 ஶ்ரீ ஶகெ3
ஸானுராக3தி3 பா4வகுஸுமக3ளர்ப்பிஸுத முத3தி3 |
ப்ராணபதி ஹரிகர்ப்பிஸித3 பர
மான்னவனு பு4ஞ்சிஸுதலீபரி
ஸ்னானஜபதப ப்ரவசனக3ளிம் காலவனு களெது3 ||56

ஹரியு கு3ணக3ணநிலய ஸகலவ
நரித1வனு க2க3க3ளனு ஸ்ருஜிஸுவ
பரிய தோருவ பா4ஷ்யபா4வவ விவரிஸுத்திரலு |
உருதரத3 பாண்டித்யமத3தி3ந்
த3 த4ரெதலதி3 ப்ரக்2யாதரிஹ ஒன்
தெ3ரடு3 விக்ரம நாமகரு கேளித3ரு ப்ரவசனவ ||57

வாத3ஸரணியு முந்த3ரிது3 ஹதி3
னைது3 தினக3ளு களெத3வீதனு
வாத3தல்லீடா3டி3த3 மஹாயுகுதியஸ்த்ரக3ள |
மோத3தீர்த்த2ரு ஸதெ3ய ப3டி3த3ரு
வேத3யுகுதிக3ளிந்த3லாக்ஷண
பாத3கெரகு3த விக்ரமார்யனு பே3டி3த3னு தா3ஸ்ய ||58

மத்4வதீர்த்தரனுக்ஞெ படெ3யுத
ஶுத்3த4தத்வக3ளன்னு தோரலு
மத்4வ பா4ஷ்யகெ டீகெ தத்வப்ரதீ3ப ரசிஸித3ரு |
ஶுத்3த4ஸித்தாந்தக3ள ந்யாய
த3 பத்த3தி4க3ளனு பி3ச்சி தோரி ப்ர
ஸித்3த4மரெந்தெ3னிஸித3ரு வ்யாக்2யான ரசிஸித3ரு ||59

விவித4 ஸம்ஸாரிக நோவு
ஸவிது3 வரவைராக்3ய பொந்து3த
ஸுவினயதி3 ப்ரார்த்தி2ஸித3 ஸஹஜன யதிவரன மாடி3 |
பு4விகெ3பூ4ஷண பத3மனாப4ரு
கவிவரரு யதிவரரனேகரு
ப்ரவஹிஸிதரனுதி3னதி3 த4ரெயலி ஞானப4குதியனு ||60

ஸ்மரணமாத்ரதி3 ஸகல து3ரிதவ
தரிது3 ஶுப4க3ளனீவ சரிதெய
பரிபரிய வித4க3ளலி ப4குதரு வர்ணிஸுத்திரலு |
து3ருள வ்ருஷல நராதி4பனு ப3லு
க3ருவதி3ந்த3 தூ3ஷிஸலு வேத3வ
கரதலதி3 தோரித3ரு நிக3மப்ரமாண வசனவ ||61

தீ3பவாரலு பாட2ஸமயதி3
தாபஸரு தம்மங்க்4ரியுகு3ரின
தீபத3லி பெ3ளகி3த3ரு ப்ரவசனகெ3ய்த3ரொந்து3தி3ன |
ஸ்தாபிஸி2த3ரதி1 தொ3ட்ட3ஶிலெய ஸ்வ
ரூப ப3லத3லி துங்கெ3யலி ஸூ
ர்யோபராக3தி3 ஸ்னானகெ3ய்யலு ஜலதி4கெ3ய்தி3த3ரு ||62

ஜலதி4யலி மஜ்ஜனவ கெ3ய்த3ரு
திளிஸித3ரு ஶ்ருதிததிக3ளர்த்த2வ
ச2லதி3 கண்ட2வ பிடி3த3 து3ருளன நெலகெ1 கெட3ஹித3ரு
ஹலவு வித3தை3ஶ்வர்யக3ள தா
ப3ளிய ஜனரிகெ3 தோரித3ரு ஸுர
நிலயவைப4வக3ளனு ஜீர்ணோத்3தா4ர மாடி3த3ரு ||63

வ்ருஷலனோர்வனு கொல்லப3ருதிரெ
ஹொஸரவிய தெரத3லி விஸ்மய
வெஸகி3த3ரு ஶ்ரீகிருஷ்ணன ஸுதா4ர்ணவவ ரசிஸித3ரு |
ப்ரஸரிஸிது1 ஸத்கீர்த்தி ஜக3த3லி
ரஸத3 கு3ணகா3னத3லி தி3விஜரு
குஸுமக3ள ஸுரிமளெகெ3ய்த3ரு நந்தி3 முனிவரகெ3 ||64

ப்ரசுரமதி1 விஜயக3ள ஸாரவ
ரசிஸிதெ3ன்னய பரம கு3ருக3ளு
வசனஶுத்3தி4யனித்து நுடி3ஸித3 தெரதி3 நுடி3தி3ஹெனு |
ஶுசிமனதி3 ஸுஸ்வரதி3 பாட3லு
ப்ரசுரவாக3லி ஷாந்திஸுக2க3ளு
பு4ஜபிடி3து3 மேலெத்தி ஸலஹுவ கு3ருவர ப்ரஸன்ன || 65

## ஹரி ஸர்வோத்தம| வாயு ஜீவோத்தம||

## ஸ்ரீகுருப்யோ நம:

# ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்
# இயற்றிய
# ஸ்ரீமத்வ விஜய ஸார ஸங்க்ரஹ

**[ஸ்லோகம் 1]**
லகுமிவல்லப$^{4}$னாக்$^{3}$ஞெயனு தா
முகுடத$^{3}$லி வஹிஸுதலி ஸுரவர
நிகரவந்தி$^{3}$தசரண கபிரூபவனெ தா தாளி **|**
லகுமி ஸீதெகெ$^{3}$ ராமசரிதெக$^{3}$
ளகி$^{2}$லதி$^{3}$ம் ஸந்தஸவ புட்டிஸி
**ஶ**குதியிந்த$^{3}$லி வனதி$^{3}$ லங்கி$^{4}$ஸி ரகு$^{4}$வரன நமிஸி **||1**

லகுமிவல்லபன – ஸ்ரீலட்சுமியின் தலைவனான நாராயணனின்; ஆக்ஞெயனு – ஆணையை; தா – தான்; முகுடதலி – தலையில்; வஹிஸுதலி – தாங்கியவாறு; ஸுரவர – சிறந்தவர்களான (ஸ்ரேஷ்டர்களான) தேவதைகளின்; நிகர – கூட்டம்; வந்தித சரண – வணங்கப்படக்கூடிய பாதங்களை (கொண்டவன்); கபி ரூபவனே – ஹனுமந்த ரூபத்தை; தா தாளி – தான் எடுத்து; லகுமி ஸீதெகெ – ஸ்ரீலட்சுமியின் அவதாரமான ஸீதைக்கு; ராமசரிதெகளகிலதிம் – ராம சரிதைகள் போன்றவற்றைக் கூறி; ஸந்தஸவ புட்டிஸி – நம்பிக்கையை ஊட்டி; ஷகுதியிந்தலி – தன் வலிமையினால்; வனதி – அசோக வனத்தினை; லங்கிஸி – அழித்து; ரகுவரன நமிஸி – ஸ்ரீராமனை வணங்கி;ஸ்ரீலட்சுமியின் தலைவனான நாராயணனின் ஆணையை, தன் தலையில் ஏந்தியவாறு, ஸ்ரேஷ்டர்களான தேவதைகளின் கூட்டத்தால் வணங்கப் படக்கூடிய பாதங்களைக் கொண்டவரான ஸ்ரீவாயுதேவர், தான் ஹனுமந்த ரூபத்தை எடுத்து, ஸ்ரீலட்சுமியின் அவதாரமான ஸீதைக்கு (அசோக வனத்தில்) ராம சரிதைகள் போன்றவற்றைக் கூறி, நம்பிக்கையை ஊட்டி, தன் வலிமையினால் அசோக

வனத்தினை அழித்து, ஸ்ரீராமனை வணங்கியவாறு (அடுத்த ஸ்லோகத்தில் தொடர்கிறது).

மத்வ விஜயத்தில் 1ம் சர்க்கத்தில் 9 முதல் 27ம் ஸ்லோகங்கள் வரை, ஸ்ரீவாயுதேவரின் முதல் அவதாரமான ஹனுமந்ததேவரின் மகிமைகள் விளக்கப்பட்டுள்ளன. இதையே ஸ்ரீவித்யா பிரசன்ன தீர்த்தர் இங்கு முதல் இரண்டு ஸ்லோகங்களில் சுருக்கி கொடுத்துள்ளார்.

ஸ்ரீவாயுதேவர் தமது முதல் அவதாரத்தில் த்ரேதாயுகத்தில் ஹனுமனாக கேஸரி என்ற வானர வீரருக்கும், அஞ்சனா தேவி என்ற வானரப் பெண்மணிக்கும் குமாரராக அவதரித்தார். முக்ய பிராணர், அஞ்சனா தேவியை ஸ்பர்சம் செய்த மாத்திரத்தில் ஹனுமந்ததேவர் அவதரித்தார். 'இந்த வானரக் குழந்தை, பிற்காலத்தில் அனைத்து நற்குணங்களின் இருப்பிடமாகவும், மாபெரும் பக்திமானாகவும், ஒளி பொருந்தியவனாகவும் விளங்குவான்' என்று ஞானிகள் கூறினர். இதையே இந்த மத்வ விஜய ஸ்லோகம் விளக்குகிறது.

யே யே கு$^{3}$ணா நாம ஜகத் பிரஸித்$^{3}$தா$^{4}$:
யம் தேஷு தேஷுஷ்ம நித$^{3}$ர்ஷயந்தி |
ஸாக்ஷான் மஹாபா$^{4}$க$^{3}$வத பிரப$^{3}$ர்ஹம்
ஸ்ரீமந்தமேனம் ஹனுமந்தமாஹு: (1-10)

உலகத்தில் உள்ள அனைத்து நற்குணங்களுக்கும் சிறந்த எடுத்துக்காட்டு என்றால், அது ஹனுமான் (ஹனு என்றால் ஞானம், எல்லையில்லா ஞானம் கொண்டவர் ஹனுமான்) என்று சொல்லலாம்.

தரணி ஸுதனனு காயிது ஷரதியனு ந்யரெதாடி
தரணிஸுதெயள கண்டு தனுஜரொடனெ |
பரதி ரணவனெ மாடி மெலிது திவ்யாஸ்த்ரகள
புரஹிலங்கெய பந்த ஹனுமந்தனு ||

ஸ்ரீஸ்ரீபாதராஜர் இயற்றிய மத்வ நாமா, ஸ்லோகம் #8ல், இதே விஷயங்கள் சொல்லப்பட்டுள்ளன. இத்தகைய மகிமைகளைக்

கொண்ட ஹனுமந்ததேவர், ஸ்ரீராமனால் விடப்பட்ட பாணத்தைப் போல, கடலைத் தாண்டி, இலங்கையில் பிரவேசித்து, ஸீதையை சந்தித்து, சூடாமணியைப் பெற்று, அசோக வனத்தை அழித்து, மறுபடி கடலைத் தாண்டி வந்து, ஸ்ரீராமனின் பாதங்களில் விழுந்து வணங்கினார்.

சிறப்புக் குறிப்பு:

1. மத்வவிஜயத்தில் முதல் 8 ஸ்லோகங்களின் ஸாரம் இவ்வாறாக உள்ளது.

காந்தாய கல்யாண கு[3]ணைகதா[4]ம்னே நவத்[4]யுனாத ப்ரதிமப்ரபா[3]ய நாராயணாய அகி[2]லகாரணாய ஸ்ரீபிராணநாதா[2]ய நமஸ்கரோமி || (1-1)

இந்த உலகத்திற்கு நிமித்த காரணனான (efficient cause - அனைத்து மாற்றங்களுக்கும் காரணனான), ஸ்ரீ மற்றும் பிராணதேவருக்கு தலைவனான, மனதை மகிழ்விக்கும்படியான அழகினைக் கொண்ட ஸ்ரீமன் நாராயணனை வணங்கி, முதல் ஸ்லோகத்தில் வியாஸ–கிருஷ்ண ரூபங்களை வணங்கியிருக்கிறார். பிறகு, ஸ்ரீமதாசார்யரின் புகழ் நம் அனைவரின் அஞ்ஞானத்தையும் போக்கி, சுத்தமான ஞானத்தை வழங்கட்டும் என்று வணங்குகிறார். வணங்குதலுக்குரிய தம் தந்தை மற்றும் குருவான ஸ்ரீத்ரிவிக்ரம பண்டிதாசார்யரை வணங்கி, குருபக்தி மிகவும் முக்கியம், இதிலிருந்தே ஹரிபக்தி, 'முகுந்தபக்த்யை குருபக்திஜாயை' (1-5) ஆகவே, ஜகத்குருவான வாயுதேவரின் அவதார லீலைகளை வர்ணிக்கிறேன் என்று சங்கல்பம் செய்கிறார். 'தாம் மந்த்ரவர்ணை: அனுவர்ணனீயாம் சர்வேந்த்ர பூர்வைரபிவக்து காமே' (1-6) மிகவும் மகிமை பொருந்திய வாயுதேவரின் லீலைகளை வர்ணிப்பது, வேத மந்திரங்களைவிட அழகானது. ருத்ரர் முதலான தேவர்களாலும் வர்ணிக்கப்படுபவை. இதை விளக்குவது தமது தகுதிக்கு அப்பாற்பட்டது என்று தனது தன்னடக்கத்தை வெளிப்படுத்தி, எவ்வளவு முடியுமோ அதற்கேற்ப குருகளின் மகிமைகளை வர்ணித்து 'மனோவிசுத்தை சரிதானுவாத:' (1-7), அத்தகைய குருகளின் வர்ணனை நமது மனங்களை சுத்திப்படுத்தட்டும் என்று விருப்பத்தை வெளிப்படுத்துகிறார்.

2. ஸ்ரீமத் ஸுமத்வ பிரமேய மாலிகா என்னும் சிறிய கிருதியை இயற்றிய மாதனூரு ஸ்ரீவிஷ்ணு தீர்த்தர், மத்வ விஜயத்தின் 16 சர்க்கங்களை படிப்பதன் பலன்களை சிறப்பாக இதில் கூறியிருக்கிறார். இந்த முதல் சர்க்கத்தின் ஸ்லோகமும், பலனும் இவ்வாறு:

ஸ்ரீமத்[4]வவிஜயே ஸர்கா[3]: ஷோட[3]ஷானுக்ரமாத[3]ஹம் |
தேஷாம் ப்ரமேயம் வக்ஷ்யாமி ஸங்க்[3]ரஹேண ப[2]லம் ததா[2] ||1||

ஸ்ரீமத்வவிஜயத்தில் 16 சர்க்கங்கள் இருக்கின்றன. அவற்றின் ஆதாரங்களை மற்றும் ஒவ்வொரு சர்க்கங்களின் பலன்களை இங்கு தொகுத்து சொல்கிறேன்.

**ப[3]ளித்தேத்யாதி[3] ஸூக்தோக்தம் வாயோ ரூபத்ரயம் பரம் |**
**ப்ரத[2]மே ப்ரத[2]மம் ப்ரோக்தம் த்[3]விதீயம் து தத: பரம் ||2||**

பளித்தா சூக்தம், பவமான சூக்தம், இவையே முதலான சூக்தங்களில் வாயுதேவரின் மூன்று அவதாரங்களின் மகிமைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. முதலாம் சர்க்கத்தில் முதலாம் அவதாரரான ஸ்ரீஹனுமந்த தேவரின் மகிமைகளை, பிறகு இரண்டாம் அவதாரரான ஸ்ரீபீமசேன தேவரின் மகிமையை சொல்லியிருக்கிறார்.

ஸன்னிதா[4]னம் கு[3]ணவ்யக்தி: ஸ்வரூபஸ்ய நிபோ[3]த[4]னம் |
ஸாத[4]னை: ஷோப[4]னை: கீர்த்தி: ஷாஸ்த்ர ராஜ்யாபி[4]ஷேசனம் ||18

ஸ்ரீமத்சுமத்வவிஜய பாராயணத்தால் வரும் பலன்:
முதல் சர்க்கம் : ஸ்ரீஹரிவாயு குருகளின் சன்னிதானம்

[ஸ்லோகம் 2]
வனதி[4]யலி ஸேதுவெய கட்டுத
த[3]னுஜரனு ஸதெ[3]ப[3]டி[3]து[3] த[3] **ம**ரத[2]
தனயஸதி நீடி[3]த[3] ஸுமாலிகெயனுக்[3]ரஹவ படெ[3]து[3] **|**
வனஜநிலயள வல்லப[4]ன பத[3]
வனஜவு ஹ்ருத[3]யத[3]லி ஸந்தத
மனனத[3]லி கிம்புருஷத[3]லிஹ ஹனுமனனு ப[4]ஜிபெ[1] **||2**

வனதியலி – கடலில்; ஸேதுவெய கட்டுத – பாலத்தைக் கட்ட உதவி செய்து; தனுஜரனு ஸதெபடிது – அசுரர்களைக் கொன்று; தஷரத தனயஸதி – தசரதனின் மகனின் மனைவி (ஸீதை); நீடித – கொடுத்த; ஸுமாலிகெய – ரத்ன மாலையை; அனுக்ரஹவ படெது – அவளின் அருளைப் பெற்று; வனஜநிலயள – தாமரையில் அமர்ந்திருப்பவளின்; வல்லபன – தலைவனின்; பத வனஜவு – பாத கமலங்களை; ஹ்ருதயதலி – தன் இதயத்தில்; ஸந்தத மனனதலி – எப்போதும் மனதில் தியானம் செய்தவாறு; கிம்புருஷதலிஹ – கிம்புருஷ கண்டத்தில்; இஹ – (இன்றைக்கும்) இருப்பவரான; ஹனுமனனு பஜிபெ – ஹனுமந்ததேவரை வணங்குகிறேன்.

ஹனுமந்ததேவரின் மகிமைகள் தொடர்கின்றன. ஸ்ரீராமனுக்கு பாலம் கட்ட உதவி செய்து, இலங்கையில் போரிட வந்த அசுரர்களைக் கொன்று, (ஸ்ரீராம ஸீதையுடன் அயோத்திக்கு திரும்பி வந்து), ஸீதை அருளிக் கொடுத்த ரத்மனாலையை ஏற்று, ஸ்ரீராமனின் பாத கமலங்களை தன் மனதில் நிறுத்தியவாறு, ஸ்ரீராமனின் தியானத்தை செய்தவாறு, இன்றும்கூட கிம்புருஷ கண்டத்தில் இருக்கும் ஸ்ரீஹனுமந்ததேவரை நான் வணங்குகிறேன்.

நிப3த்4ய ஸேதும் ரகு4வம்ஷ கேது
ப்4ரூப4ங்க ஸம்ப்4ராந்த பயோதி4 மத்4யே || (1-17)
கடலில் பாலம் கட்ட உதவினார் ஹனுமந்ததேவர்.

ஆத்வர்யவம் யுத்த மகே ப்ரதிப்ர (1-18). ராம ராவண யுத்தம் என்னும் யாகத்தில், லட்சமணன் ரித்விக்காக இருந்து யாகத்தை நடத்த, ஹனுமந்ததேவர் அவருக்கு துணையாக தலைமை ரித்விக்காக விளங்கினார் என்று மத்வவிஜயகாரர் விளக்குகிறார்.

இப்படியான போரினை முடித்துவிட்டு, ஸ்ரீராம ஸீதையுடன், ஹனுமந்ததேவர் அயோத்திக்கு திரும்பி வந்தார். பரம மங்கள மூர்த்தியான ஸ்ரீராமனை, பல காலம் சேவித்த ஹனுமந்தனுக்கு ஸீதாதேவி ஒரு ரத்னமாலையைக் கொடுத்து அருளினாள்.

ராமஸ்ய வாண்யா மணி மஞ்சுமாலா
வ்யாஜேன தீ3ர்க்கா4ம் கருணாம் ப3ப3ந்த4 || (1-22)

விஜயரகுபதி மெச்சி தரணிஸுதெயளகீயெ
பஜிஸி மௌக்திகத ஹாரவனெ படெத (11)

இந்த மத்வவிஜய ஸ்லோகத்திலும், மத்வ நாமா ஸ்லோகத்தில் இதே விஷயம் சொல்லப்பட்டுள்ளது.

கிம் வர்ணயாம பரமம் பிரஸாத$^3$ம்
ஸீதாபதேஸ்தத்ர ஹரி ப்ரப$^3$ர்ஹே || (1-26)

அஜபதவியனு ராம கொடுவெனெனெ ஹனுமந்த
நிஜபகுதியனெ பேடி வரவ படெத (11)

தனது பக்தனுக்கு பிரம்ம பதவியைக் கொடுக்கிறேன் என்று ஸ்ரீராமன் முன்வந்தபோது, ஹனுமந்ததேவர் தனக்கு திடமான பக்தியை மட்டும் கொடுக்க வேண்டும் என்று வேண்டினார். அதையே வரமாகக் கேட்டார். அதன்படியே, இன்றும் கிம்புருஷ கண்டத்தில் இருந்தவாறு, ஸ்ரீராம நாம சங்கீர்த்தனம் செய்து கொண்டு, அங்குள்ள மக்களையும் ஸ்ரீராம நாம சங்கீர்த்தனத்தில் ஈடுபடச் செய்தவாறும் இருக்கிறார்.

இப்படிப்பட்ட மகிமைகளைக் கொண்ட ஹனுமந்ததேவரை, நான் வணங்குகிறேன் என்று ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர் சொல்லி, ஹனுமந்ததேவரின் மகிமையை முடித்து, அடுத்த ஸ்லோகத்தில் பீமசேனதேவரின் அவதாரத்தை விளக்குகிறார்.

**[ஸ்லோகம் 3]**
பாண்டு$^3$ஸதி மாருதனு முட்டலு
க$^3$ண்டு$^3$தனயன படெ$^3$யலா **ஶிஶு**
க$^2$ண்டி$^3$ஸிது **ஶத ஶ்**ருங்க$^3$ கி$^3$ரியனு தனுவ ஸங்க$^3$த$^3$லி **|**
தண்ட$^3$தண்டதி$^3$ ராஜகுவரர
புண்ட$^3$ட$^3$கி$^3$ஸி த்ருபத$^3$ த$^4$ரணீ
மண்ட$^3$லேஷன குவரி கரகமலக$^3$ள தா கெ$^3$லித$^3$ **||3**

பாண்டுஸதி – பாண்டுவின் மனைவியான குந்திதேவியை; மாருதனு முட்டலு – ஸ்ரீவாயுதேவர் ஸ்பர்ஷம் செய்ய; கண்டுதனய படெயலு – ஆண் மகனை அவள் பெற; ஆ ஷிஶு – அந்தக் குழந்தை (பீமசேனதேவர்); ஷதஶ்ருங்க கிரியனு – ஷதஶ்ருங்க

என்னும் மலையை; தனுவ ஸங்கதலி - தன் தேகத்தின் சங்கத்தினால்; கண்டிஸிது - பொடிப்பொடி ஆக்கியது; தண்டதண்டதி - பல சந்தர்ப்பங்களில் (அவ்வப்போது); ராஜகுவரர - துரியோதனன் முதலான அரசகுமாரர்களின்; புண்டடகிஸி - கெட்ட செயல்களை அடக்கி; த்ருபத - துருபதன் (என்னும்); தரணி மண்டலேஷன - பூமியை ஆண்ட அரசனின்; குவரி - மகளின்; கரகமலகள - கைகளை (அவளை); தா கெலித - தான் வென்றான்;

ஸ்ரீமத்வ விஜயத்தில் 1ம் சர்க்கத்தில் 28 முதல் 44 வரையிலான ஸ்லோகங்களில், ஸ்ரீவாயுதேவரின் இரண்டாம் அவதாரரான, ஸ்ரீபீமசேன தேவரின் மகிமைகள் விளக்கப்பட்டுள்ளன. அதையே ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர் சுருக்கி, இரண்டே ஸ்லோகங்களில் (3&4) இங்கு சொல்லியிருக்கிறார்.

பாண்டுவின் மனைவியான குந்தியை ஸ்ரீவாயுதேவர் ஸ்பர்ஷம் செய்ய, பீமன் என்னும் ஆண் மகனை அவள் பெற்றாள். அந்தக் குழந்தை, தன் தேகத்தின் சங்கத்தினால் ஷதஷ்ருங்க என்னும் மலையை பொடிப்பொடி ஆக்கியது. துரியோதனன் முதலான அரசகுமாரர்கள், பல சந்தர்ப்பங்களில், தனக்கு (பாண்டவர்களுக்கு) தொந்தரவு கொடுக்கையில், அவர்களுடைய கெட்ட செயல்களை அடக்கி, பின், த்ருபதன் என்னும் அரசனின் மகளான திரௌபதியினை, (சுயம்வரத்தில்) தான் வென்றான்.

தஸ்யைவ வாயோரவதாரமேனம்
ஸந்தோ$^1$ த்$^3$விதீயம் ப்ரவத$^3$ந்தி பீ$^4$மம் || (1-28)

ஸ்ரீவாயுதேவரின் இரண்டாவது அவதாரமே பீமசேனதேவர். த்வாபர யுகத்தில் தர்மத்தை நிலை நிறுத்துவதற்காக, ஸ்ரீவாயுதேவர் குந்திதேவியிடம் பீமனாக அவதரித்தார். குழந்தையான பீமன், குந்திதேவியின் கையிலிருந்து தவறி கீழே விழ, அங்கிருந்த ஷதஷ்ருங்க மலை உடைந்து தூள்தூள் ஆனது.

இதையே ஸ்ரீஸ்ரீபாதராஜர், மத்வ நாமா #13ம் ஸ்லோகத்தில், பின்வருமாறு கூறினார்.

கரதிந்த சிசுபாவனாத பீமன பிடலு

கிரிவடெது ஷதஸ்ருங்க வெந்தெனிஸிது ||

அடுத்து, 'தண்டதண்டதி ராஜகுவரர புண்டடகிஸி' - துரியோதனன் முதலான அரசகுமாரர்களின் கெட்ட செயல்களை மத்வ விஜயத்தில், ஸ்ரீநாராயண பண்டிதாசார்யர் மிகவும் அழகாக வர்ணித்துள்ளார்.

பீமசேனதேவரின் அதிபராக்ரம வைபவங்களை காணப் பொறுக்காத துரியோதனன், காலகூட விஷத்தை உணவில் கலந்தும், விஷப் பாம்புகளை விட்டு பீமசேனதேவரை கடிக்கச் செய்தும், கங்கை நதியில் மிகவும் அதிகமான ஆழமுள்ள 'பிரமாண கோடி' என்னும் மடுவில் தள்ளி விட்டும், கொல்ல முயற்சி செய்தான். இந்த அனைத்து ஆபத்துகளிலிருந்தும், பீமசேனதேவர் மிகவும் அனாயாசமாக தப்பி வந்தார். உலகிற்கே பிராணனான, உயிர் நாடியாக விளங்குபவரை, யார் என்னதான் செய்து விட முடியும்?.

பிரமாண கோடே: ஸ ஹி ஹேளயாகா³த்
நேத³ம் ஜக³ஜ்ஜீவன தேத்ர சித்ரம் || (1-31).

ஸ்ரீபீமசேனதேவரின் பால லீலைகளை மத்வ நாமா இவ்வாறு சொல்கிறது.

குருப கரளவனிக்கெ நெரெயுண்டு தேகி ஹஸி
துருககள ம்யாலே பிடலவனொரெஸித || (14)

பீமசேனதேவரின் வலிமையைக் கண்டு, அசுரர்களான துரியோதனாதிகளுக்கு அவர் மேல் துவேஷம் உண்டாயிற்று. அடுத்து திரௌபதி சுயம்வரம்.

ஸ ஸோத³ரோsதாsதித ராஜ ஹம்ஸ:
ஸ ராஜ ஹம்ஸீமிவ ராஜ கன்யாம் ||(1-24)

கொக்குகள், காக்கைகள் போன்ற சாதாரண பறவைக் கூட்டங்களை புறக்கணித்து, ஒருவன் அழகான உன்னதமான ராஜஹம்ஸத்தை அடைவதைப் போல, பீமசேனதேவர், துருபத ராஜனின் மகளான திரௌபதியை மணந்தார்.

பல்லிதஸுரர கெலிது திரௌபதிய கைபிடிது
யல்ல ஸுஜனரிகெ ஹருஷவ தோரித (15)

ஸ்ரீவேதவ்யாஸ தேவரின் ஆணைப்படி பாஞ்சால நகரத்தில் திரௌபதியின் சுயம்வரத்தில் அவரைக் கைபிடித்து, சஜ்ஜனர்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தார் பீமசேனதேவர்.

**[ஸ்லோகம் 4]**
அரிஸமூஹவ பொஸகி$^{1}$ தா யது$^{3}$
வரன சரணாம்பு$^{3}$ருஹ மது$^{4}$கர
னுரு பராக்ரமவரிது தி$^{3}$திஜரு மத்ஸரதி$^{3}$ உரிது$^{3}$ **|**
த$^{4}$ரணியலி புட்டித$^{3}$ரு து$^{3}$ர்மத
ஸரணி ஹரடு$^{3}$த ஸேட$^{3}$னெஸக$^{3}$லு
மருத$^{3}$ம் **ஶ**ன பீ$^{4}$மஸேனன சரணவே **ஶ**ரணு **||4**

அரி – எதிரி; சமூஹவ – கூட்டத்தினை; பொஸகி – அழித்து; தா – தான் (பீமசேனதேவர்); யது வரன = யது குலத்தில் சிறந்தவனான (ஸ்ரீகிருஷ்ணனின்); சரணாம்புருஹ – பாத கமலங்களை; மதுகர – மலர்களை சுற்றி வரும் தேனியைப் போல; உரு பராக்ரமவரிது – (இத்தகைய பீமசேனதேவரின்) வீர பராக்கிரமங்களை அறிந்து; திதிஜரு – அசுரர்கள்; மத்ஸரதி உரிது – பொறாமையில் எரிந்து; தரணியலி – பூமியில்; புட்டிதரு – பிறந்தனர்; துர்மத ஸரணி – பல கெட்ட சாஸ்திரங்களை; ஹரடுத – பரப்பியவாறு; ஸேடனெஸகலு – பழிவாங்கும் செயலை செய்ய; மருதம்ஷன – வாயுதேவரின் அவதாரமான; பீமஸேனன – பீமசேனதேவரின்; சரணவே சரணு – பாதங்களை நான் வணங்குகிறேன்.

பீமசேனதேவரின் மகிமையை இந்த ஸ்லோகத்திலும் தொடர்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர். எதிரிகளின் கூட்டத்தினை அழித்து, பீமசேனதேவர், யது குலத்தில் சிறந்தவனான ஸ்ரீகிருஷ்ணனின் பாத கமலங்களை, மலர்களை சுற்றி வரும் தேனியைப் போல சுற்றி வந்து வணங்குகிறார். இத்தகைய பீமசேனதேவரின் வீர பராக்கிரமங்களை அறிந்த அசுரர்கள், மிகவும் துக்கமடைந்து, மறுபடி கலியுகத்தில் இதே பூமியில் பிறந்து, அவர்களின் ஸ்வபாவங்களுக்கேற்ப, பல கெட்ட சாஸ்திரங்களைப் படைத்து, தங்களின் பழிவாங்கும் செயலை செய்யத் துவங்கினர். இத்தகைய

மகிமைகளைக் கொண்ட, வாயுதேவரின் அவதாரமான பீமஸேனதேவரின் பாதங்களை நான் வணங்குகிறேன் -- என்கிறார்.

கிருஷ்ணாங்க்$^{4}$ரி பங்கே$^{3}$ருஹ ப்$^{4}$ருங்க$^{3}$ராஜ:
கிருஷ்ணாமுகா$^{2}$ம்போ$^{3}$ருஹ ஹம்ஸ ராஜ: || (1-43)

மலர்களை சுற்றிவரும் தேனியைப் போல, ஸ்ரீகிருஷ்ணனின் பாத கமலங்களை பீமன் வணங்கினார். திரௌபதியின் முக கமலங்களுக்கு அன்னப்பறவையைப் போல இருந்தார். தனது ஆட்சியில் இருந்த மக்கள் என்னும் கமலங்களுக்கு, சூரியனைப் போல காட்சியளித்து, தனது சகோதரர்களுடன் ஒளிர்ந்தார் - என்கிறார் நாராயண பண்டிதாசார்யர்.

விஷ்வம் மித்$^{2}$யா விபுரகு$^{3}$ணவான் ஆத்மனாம் நாஸ்தி பே$^{4}$தோ$^{3}$
தை$^{3}$த்யா இத்த$^{2}$ம் வ்யத$^{3}$த$^{4}$த$^{1}$ கி$^{3}$ராம் தி$^{3}$க்ஷு பூ$^{4}$ய: ப்ரஸித்தி$^{4}$ம் || (1-55)

பீமசேனதேவரின் வீர பராக்கிரமங்களை அறிந்த அசுரர்கள், மிகவும் துக்கமடைந்து, மறுபடி கலியுகத்தில் பிறந்து, தங்களது பழிவாங்கும் செயலை செய்யத் துவங்கினர். ஸ்ரீஹரி குணங்கள் இல்லாதவன். ஸ்ரீஹரி மற்றும் ஜீவர்களுக்கு பேதம் இல்லை என்னும் மாயாவாதிகளின் கருத்து மக்களிடையே பரவத் துவங்கியது. அனைத்து நற்குணங்களையும் பெற்றவனான ஸ்ரீஹரியை, சஜ்ஜனர்களின் மனதிலிருந்து மறையுமாறு அந்த அசுரர்கள் செய்தனர் - என்கிறது மத்வவிஜய முதலாம் சர்க்கத்தின் கடைசி ஸ்லோகம்.

இதையே ஸ்ரீஸ்ரீபாதராஜர் மத்வ நாமாவில் எப்படி சொல்லியிருக்கிறார் என்றால்:

ஹரிக்ருபெய படெதிர்த்த பீம ஹுங்காரதிம்
தரிய திவ்யாஸ்த்ரகள நெரெ அட்டித ||19

பீமசேனதேவர் சாட்சாத் முக்யபிராணரின் அவதாரம் என்று மகாபாரதத்திலேயே சொல்லப்பட்டிருக்கிறது. இந்த வாயுதேவர்

ருஜுகணஸ்தர். பா4வி (எதிர்கால) பிரம்மன். ஸ்ரீஹரி இவரின் மேல் வைத்திருக்கும் பிரியம் (லட்சுமிதேவியைத் தவிர), வேறு யாரின் மேலும் அவர் வைத்திருக்கவில்லை.

தானவரு கலியுகதொளவதரிஸி விபுதரொளு
வேனன மதவ நருஹலதனரிது ||23

28வது த்வாபர யுகத்தில் பீமசேனரின் பெருமையைக் கண்டு பொறுக்காமல், தைத்யர்கள் (தானவர்கள்) அந்த கோபத்தை எப்படியாவது தீர்த்துக்கொள்ள வேண்டுமென்று சிந்தித்தனர். 'ஸ்ரீகிருஷ்ணனின் உதவியால் பீமசேனர் முதலான பாண்டவர்கள் வெற்றி பெற்றனர். கலியுகத்தில் ஸ்ரீஹரி அவதரிப்பதில்லை. அப்போது நாமெல்லாம் அங்கு பிறந்து திரௌபதியின் ஸ்தானத்தில் இருக்கும் நற்சாஸ்திரங்களை தவறாக வியாக்யானம் செய்து பிரம்மன் நிர்குணன் என்று பரப்புவோம்' என்று தீர்மானித்தனர்.

அதன்படியே தம் பகையை தீர்த்துக்கொள்ள கலியுகத்தில் பிராமண ஜாதியில் அவர்கள் பிறந்தனர். துஷ்ட சாஸ்திரங்களை இயற்றினர். சௌகந்திக வனத்தில் பீமனால் கொல்லப்பட்ட மணிமந்தன் என்னும் தைத்யன் கலியுகத்தில் மறுபடி பிறந்து, எல்லா இடங்களிலும் தவறான ஞானத்தை பரப்பினான். ருத்ர தேவரைக் குறித்து தவம் செய்து, வரம் பெற்று புகழடைந்தான். பிரம்மசூத்ரங்களுக்கு துர்பாஷ்யங்களை இயற்றி தத்வஞானம் மறையுமாறு செய்தான். பாகவத தர்மங்களை நாசப்படுத்தினான்.

இத்துடன் மத்வவிஜயத்தின் முதல் சர்க்கத்தின் ஸாரம் முடிவடைந்தது. அடுத்த ஸ்லோகத்திலிருந்து இரண்டாம் சர்க்கத்தின் விஷயம் தொடங்குகிறது.

**[ஸ்லோகம் 5]**
நிஜமதிய தி3னகரனு முளுக3லு
அஜிதனாக்3ஞெய படெ3த3 மருதனு
ருஜுதபக3ளாசரிஸி பரம வி **ஶூ**த்3த4ராகித்3த3 |
ஸஜன **ஶே**க2ர மத்4யகே3ஹ
த்3விஜவரன ஸதியுத3ரத3லி தா

பி3ஜயகெ3ய்த3னு ஹொரகெ3ட3ஹி பே3ரொந்த3னாக்ஷணதி3 **||5**

நிஜமதிய தினகரனு – உண்மையான அறிவு என்னும் சூரியன் (ஞான சூரியன்); முளுகலு – மூழ்கத் தொடங்க; அஜிதனாக்ஞெய படத – ஸ்ரீஹரியின் ஆணையைப் பெற்ற; மருதனு – ஸ்ரீவாயுதேவர்; ருஜூதபகளாசரிஸி – ஜப, தபங்களை சரிவர செய்து; பரம விஷுத்தராகித்த – பரம தூய்மையானவராக இருந்த; ஸஜனஷேகர – சஜ்ஜனர்களில் சிறந்தவரான; மத்யகேஹ த்விஜவரன – மத்யகேஹ என்னும் பிராமண ஸ்ரேஷ்டரின்; ஸதியுதரதலி – மனைவியின் வயிற்றில்; ஆக்ஷணதி – அந்த சமயத்தில்; பேரொந்து – அந்த கர்ப்பத்தில் இருந்த வேறொரு ஜீவனை; ஹொரகெடஹி – வெளியே இழுத்து; தா – தான்; பிஜயகெய்தனு – அங்கு உள்ளே பிரவேசித்தார்.

மத்வ விஜயத்தின் இரண்டாம் சர்க்கத்தின் விஷயத்தை இங்கு துவக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

உண்மையான அறிவு என்னும் சூரியன் மூழ்கத் தொடங்க, ஸ்ரீஹரியின் ஆணையைப் பெற்ற ஸ்ரீவாயுதேவர், ஜப தபங்களை சரிவர செய்து, பரம தூய்மையானவராக இருந்த, சஜ்ஜனர்களில் சிறந்தவரான, மத்யகேஹ என்னும் பிராமண ஸ்ரேஷ்டரின் மனைவியின் வயிற்றில், அந்த சமயத்தில் அந்த கர்ப்பத்தில் இருந்த வேறொரு ஜீவனை வெளியே இழுத்து, தான் அங்கு உள்ளே பிரவேசித்தார்.

விக்3ஞான பா4னுமதி கால ப3லேன லீனே
து3ர்பா4ஷ்ய சந்தமஸ சந்ததிதோ ஜனேந்தே4 |
மார்கா3த்சதாம் ஸ்க2லதி கி2ன்ன ஹ்ருதோ3 முகுந்த3ம்
தே3வாஸ்சதுர்முக2 முகா2: ஷரணம் ப்ரஜக்3மு: || (2-1)

உலகத்தில் சஜ்ஜனர்களின் ஞானம் என்னும் சூரியன், கலியின் பிரபாவத்தாலும், துர்பாஷ்யங்களின் துர்போதனைகளாலும் அஸ்தமனம் ஆகி, அஞ்ஞானம் என்னும் இருள் சூழ்ந்து, அவர்கள் தர்மத்தின் வழியிலிருந்து பிறழத் தொடங்கினர். சுக்ஞானம் பிறந்து, அவர்கள் தர்மத்தின் வழியில் திரும்பவேண்டும் என்று பிரம்மாதி தேவதைகள் முகுந்தனை வேண்டினர். ஸ்ரீஹரியானவர்

த்ரியுகஹூதி - அதாவது மூன்று யுகத்தில் மட்டுமே அவதாரம் செய்பவர். பிரம்மதேவருக்கோ அவதாரமே இல்லை.

ஆகையால், இந்த நற்காரியத்தை செய்வதற்கு சர்வக்ஞரான வாயுதேவரால் மட்டுமே சாத்தியம் என்று, ஸ்ரீஹரி வாயுதேவரிடம் 'வேதாந்த மார்க்க பரிமார்கண தீன தூனா' (2-3) குழப்பத்தில் இருப்பவர்களுக்கும், சத்-பக்தர்களுக்கும், வேதாதி சாஸ்திரங்களின் உண்மையான பொருளை அறியச்செய்து, என் நற்குணங்களை நிர்ணயம் செய்து சஜ்ஜனர்களை மகிழ்வுறச் செய்' என்று ஆணையிட்டார். சுரர்களின் வேண்டுதல், சஜ்ஜர்களின் மேல் இருந்த கருணை, இதற்குமேல் ஸ்ரீஹரியின் ஆணை - என அனைத்தையும் கருத்தில் கொண்டு வாயுதேவர் பூமியில் அவதாரம் செய்ய விருப்பம் கொண்டார்.

கோவிந்த ஸுந்த3ர கதா2 ஸுத4யா ஸ ந்ருணாம்
ஆனந்தயன்ன கி1ல கேவலமிந்த்3ரியாணி | (2-15)

கர்மபூமியான பரத கண்டத்தில், மேற்கு கடற்கரையோரம் இருக்கும் உடுப்பிக்கு அருகில் இருக்கிறது பாஜக கிராமம். இது பரசுராமரால் நிர்மாணிக்கப்பட்ட, துர்காதேவி நிலைகொண்டிருக்கும் விமானகிரி இருக்கும் க்ஷேத்திரம். இங்கு நல்மனம், நற்புத்தி கொண்டவர், கல்வி கற்றவர், ஸ்ரீஹரியையே எப்போதும் நம்பும் பக்தரான மத்யகேஹ பட்டர், யோக்யளான, நற்குலத்தில் பிறந்தவரான வேதவதி என்னும் மனைவியுடன் வசித்து வந்தார். தர்மத்தில் நம்பிக்கை கொண்டவர், மகாபாரத மற்றும் புராணங்களின் ரகசியங்களை அறிந்தவராகையால் 'பட்ட' என்று அழைத்துக்கொண்ட இவரை மக்கள் 'மத்யகேஹ பட்டர்' என்று அழைத்தனர். மகாபாரத, ராமாயண புராணங்களில் சொற்பொழிவு ஆற்ற வல்ல மத்யகேஹ பட்டர், கோவிந்தனின் அழகான கதைகளினால் சஜ்ஜனர்களின் மனதை மகிழ்வுறச் செய்துவந்தார்.

சம்பூர்ண லக்ஷண சணம் நவ ராஜமான த்3வாராந்தரம் பரம சுந்த3ர மந்தி3ரம் தத் |
ராஜேவ சத்புரவரம் பு4வனாதி4 ராஜோ நிஷ்காசயன் பரமசௌ ப4க3வான் விவேஷ || (2-25)

அந்த கர்ப்பத்தில் இருந்து துக்கம் அனுபவித்துக் கொண்டிருந்த ஜீவனை வெளியே இழுத்து, ஸ்ரீநாராயணனின் பிரதிபிம்பரான வாயுதேவர், தான் உள்ளே பிரவேசித்ததும், அந்த ஜீவன் 32 லட்சணங்களைக் கொண்டதாயிற்று. அங்கிருந்த ஜீவனைச் (குபேரனின் சேவகனான மணிபத்ரன்) சேர்ந்தார். வாயுதேவருக்கு கர்ப்பவாசம் முதலான தோஷங்கள் இல்லை என்று அறியவேண்டும். பூமியில் இவர் அவதாரம் செய்த அந்த நாள் விஜயதசமி. (விளம்பி சம்வத்சரம் ஆஸ்வீஜ சுக்ல தசமி புதன் மதியம்).

ஸ்ரீமத்வரின் அவதார சந்தர்ப்பத்தை, ஸ்ரீஸ்ரீபாதராஜர், மத்வ நாமாவில் இவ்வாறு கூறுகிறார்.

ஞானி தா பவமான பூதளதொளுத்பவிஸி
மானநிதி மத்வாக்ய நெந்தெனிஸித ||23

சர்வக்ஞரில்லாத இன்னொருவரால் செய்யப்பட முடியாத வேலையை செய்வதற்கு, பூமியில் அவதரிக்க முடிவு செய்தார் வாயுதேவர். அப்போது, கர்மபூமியான பாரதத்தில் தெற்கு திசையில் பரம சாத்விகரான மத்யகேஹ என்னும் காரணப் பெயருடன் ஒரு தம்பதி வசித்து வந்தனர். ரஜதபீடபுரத்தின் (உடுப்பி) பக்கத்திலிருக்கும் பாஜக அவர்கள் வசித்த க்ஷேத்திரம். அந்த பிராமண தம்பதிகள் – வைஷ்ணவர்கள். மிகுந்த கடவுள் பக்தி கொண்ட அன்யோன்ய வாழ்கை வாழ்ந்து வந்தனர். தினமும் புராண, பிரவசனங்களை தவறாமல் செய்து வந்தார் மத்யகேஹர். உடுப்பியின் அனந்தாசனரின் சன்னிதியில், அவரின் சேவைக்காக நிலைத்திருந்த தேவதைகளின் இந்திரியங்க ளுக்கும் இவரது உபன்யாசம் திருப்திகரமாக இருந்தது.

அந்த தம்பதிகளில் ஸ்ரீலட்சுமி நாராயணரின் சன்னிதானம் வந்தது. சுப முகூர்த்தத்தில், கர்ப்பவதி ஆனார், வேதவதி என்னும் அந்தப் பெண்மணி. அடுத்த பத்தாவது மாதத்தில், பிரசவ காலம் நெருங்கிற்று. அந்த சமயத்தில் முக்ய பிராணதேவர் சரியாக பீமசேனராகி அவதரித்த ஒரு அம்சத்தினால் பூமிக்கு வந்தார். அனந்தாசனரின் முன்பக்கத்தில் இறங்கி அவரை வணங்கி,

மத்யகேஹரின் வீட்டுக்கு வந்தார். இதிலிருந்து வாயு தேவருக்கு கர்ப்பவாசாதி தோஷங்கள் (கஷ்டங்கள்) இல்லை என்று தெரியவருகிறது. அதுவரையில் அந்த கர்ப்பத்தில் இருந்து கஷ்டங்களை அனுபவித்த ஜீவனே வேறு. வாயு தேவர் அந்த ஜீவனை வெளியே எடுத்து, தான் உள்ளே பிரவேசித்தார்.

ஹரிகதாம்ருதஸாரத்தில், ஸ்ரீஜகன்னாததாசர், மங்களாசரண சந்தியில், தாரதம்யத்தில் ஸ்ரீமத்வரைப் பற்றி சொல்லும்போது, இவ்வாறு கூறுகிறார்.

க்ஷிதியொளகெ மணிமந்தமொதலா
ததிதுராத்மரு ஒந்ததிக விம்
ஷதி குபாஷ்யவ ரசிஸெ நடுமனெயெம்ப பிராம்மணன |
சதிய ஜடரதொளவதரிஸி பா
ரதிரமண மத்வாபிதானதி
சதுரதஷ லோகதொலி மெரெதப்ரதிமகொந்திசுவெ ||8

மணிமந்தன் முதற்கொண்டு தமோ யோக்யரான தைத்யர்கள் பூமியில் பிறந்து, பிரம்மசூத்திரத்திற்கு 21 குபாஷ்யங்களை இயற்ற, பாரதிபதியான வாயுதேவர், மத்யகேஹ பட்டர் என்னும் பிராமணரின் மனைவியின் வயிற்றில் பிறந்த குழந்தையின் தேகத்தில் பிரவேசித்து, மத்வாசார்யர் என்னும் பெயரால் 14 உலகங்களிலும் புகழடைந்தார். ஒப்புமை இல்லாத (அவரை) வணங்குகிறேன்.

மத்வ விஜய இரண்டாம் சர்க்கத்தைப் பற்றியும், இந்த சர்க்கத்தைப் படிப்பதால் வரும் பலன்களைப் பற்றியும் மாதனூரு ஸ்ரீவிஷ்ணு தீர்த்தர், தமது ஸ்ரீமத் ஸுமத்வவிஜய ப்ரமேய பல மாலிகா கிருதியில் இவ்வாறு கூறுகிறார்.

ஸச்சாஸ்த்ரே தூ$^3$ஷிதே த்$^3$ருஷ்ட்யை: ஸுரப்ரார்த்த$^2$னயா ஹரே:
ஆக்ஞயா ஜாவதீர்ணஸ்ய த்$^3$விதீயே பா$^3$ல்ய ஸத்கதா$^2$: ||3||

துஷ்ட மக்களிடமிருந்து நற்சாஸ்திரங்கள் அழிந்து வந்த நிலையில், தேவதைகளால் பிரார்த்தனை செய்யப்பட்டு, பகவந்தனின் ஆணைப்படி, வாயுதேவர், பூலோகத்தில் அவதரித்தார்.

இரண்டாம் சர்க்கத்தில், அனேக பால்ய நற்கதைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. கொள்ளு தானியத்தைத் தின்றது; கடன்கொடுத்தவருக்கு புளியங்கொட்டைகளைக் கொடுத்து, கடனிலிருந்து தந்தையை மீட்டது – ஆகிய விஷயங்கள் வர்ணிக்கப்பட்டிருக்கின்றன.

இரண்டாம் சர்க்கம் படிப்பதால் வரும் பலன் : நற்குணங்கள் வளர்தல்.

மத்வ விஜயத்தின் இரண்டாம் சர்க்கத்தின் விஷயத்தை, அடுத்த ஸ்லோகத்திலும் தொடர்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

**[ஸ்லோகம் 6]**
அஸம மூவத்தெரடு$^{3}$ லக்ஷண
**ஶிஶு ஶ**ரீரவ பொக்கனாக்ஷண
பி$^{3}$ஸுட$^{1}$னா பரஜீவவனு அஸுபதியு தா ஹொரகெ$^{3}$ **|**
அஸுரநிகரகெ$^{1}$ கே$^{2}$த$^{3}$ ஸு$^{2}$கஸந்
தஸவு ஸஜ்ஜனததிகெ$^{3}$ ஈ பரி
ஸுஸமயவிதெ$^{3}$ம்பு$^{3}$த$^{3}$ நுடி$^{3}$யிது$^{3}$ தே$^{3}$வது$^{3}$ந்து$^{3}$பி$^{4}$யு **||6**

அஸம – எதனுடனும் ஒப்பிடமுடியாத; மூவத்தெரடு லக்ஷண – 32 லட்சணங்களைக் கொண்ட; ஷிஷு – அந்தக் குழந்தை; ஷரீரவ – அந்த தேகத்தில்; பொக்கனாக்ஷண – நுழைந்த அந்த சமயத்தில்; பரஜீவவனு – ஏற்கனவே அங்கு இருந்த ஜீவனை; அஸுபதியு – பிராணதேவர்; தா – தான்; ஹொரகெ – வெளியே; பிஸுடனா – இழுக்க, (அந்த சமயமானது); சஜ்ஜனததிகெ – சஜ்ஜனர்களின் கூட்டத்திற்கு; ஸுக ஸந்தஸவு – நற்காலம் என்னும் நம்பிக்கையையும்; அஸுர நிகரகெ – அசுரர்களின் கூட்டத்திற்கு; கேத – கெட்ட காலம்; ஈ பரி – இப்படியான; ஸுஸமயவிதெம்புத – காலங்கள் இப்போது வந்திருக்கின்றன என்பதாக; தேவதுந்துபியு – தேவலோகத்தில் வாத்தியங்கள்; நுடியுது – முழங்கின;

மத்வ அவதார சமயத்தை, ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர் இவ்வாறு விளக்குகிறார். எதனுடனும் ஒப்பிடமுடியாத 32 லட்சணங்களைக் கொண்ட அந்தக் குழந்தை, அந்த தேகத்தில் நுழைந்த அந்த சமயத்தில், ஏற்கனவே அங்கிருந்த ஜீவனை, பிராணதேவர் தான்

வெளியே இழுக்க, அந்த சமயத்தில், சஜ்ஜனர்களின் கூட்டத்திற்கு நற்காலம் என்னும் நம்பிக்கையையும், அசுரர்களின் கூட்டத்திற்கு கெட்ட காலம் வந்திருக்கின்றன என்பதாக, தேவலோகத்தில் வாத்தியங்கள் முழங்கின.

மத்வ அவதார சமயத்தை, மத்வவிஜயம் இவ்வாறு வர்ணிக்கிறது.

ஸந்துஷ்யதாம் ஸகல ஸன்னிகரைரஸத்$^{3}$பி$^{4}$:
கி$^{2}$த்$^{3}$யேத வாயுரயமாவிரபூ$^{4}$த் ப்ருதி$^{2}$வ்யாம் |
அரவ்யானிதீவ ஸுர து$^{3}$ந்து$^{3}$பி மந்த்ரனாத$^{3}$:
ப்ராஸ்ராவி கௌதுக வஷௌரிஹ மானுஷைஸ்ச || (2-26)

ஸ்ரீவாயுதேவர் அவதரித்துவிட்டார். இதனால் சஜ்ஜனர்கள் மகிழ்ச்சியடைந்தனர். துர்ஜனர்கள் துக்கமடைந்தனர். இதனை அறிவிப்பது போல, தேவலோகத்தில் இருக்கும் துந்துபி வாத்தியங்கள் முழங்கின.

குழந்தையின் அவதாரத்தை இங்கு கூறிய ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர், (வாசுதேவனின்) பால லீலைகளை அடுத்த ஸ்லோகத்திலிருந்து துவக்குகிறார்.

**[ஸ்லோகம் 7]**
கோ$^{3}$ப்ரதா$^{3}$யக விப்ரவர்யகெ$^{3}$
க்ஷிப்ரத$^{3}$லி ஸுப்ரக்$^{3}$ஞெயித்தனு
ஸ்வப்ரபா$^{4}$வதி$^{3}$ நிஜஜனர க்$^{3}$ரஹப$^{4}$யவ நீகி$^{3}$ஸுத **|**
விப்ரஸதி ஹொரகி$^{3}$ரலு ரோத$^{3}$ன
தப்பிஸலு நிஜ ஸஹஜெயுணிஸித$^{3}$
ப்ரப்ரபக்வ குலித்த$^{2}$ பு$^{4}$ஜிஸி ஜீர்ணிஸித$^{3}$ க்ஷணதி$^{3}$ **||7**

கோப்ரதாயக - (குழந்தைக்கு பால் குடிப்பதற்காக) பசு கொடுத்த; விப்ரவர்யகெ - பிராமணருக்கு; க்ஷிப்ரதலி - விரைவில் (அடுத்த பிறவியில்); ஸுப்ரக்ஞெயித்தனு - ஆசார்யரின் சாஸ்திர ஞானத்தை அளித்தான்; ஸ்வப்ரவாவதி - தன்னுடைய சக்தியால்; நிஜஜனர - தன் குடும்பத்தினரை; க்ரஹபயவ - பூதத்தின் பயத்தினை; நீகிஸுத - போக்கியவாறு; விப்ரஸதி - மத்யகேஹ பட்டரின் மனைவி; ஹொரகிரலு - வேலை விஷயமாக வெளியே சென்றிருக்கையில்; ரோதன - அழுகையிலிருந்து; தப்பிஸலு -

தப்பிப்பதற்கு; நிஜ ஸஹஜெயுணிஸித - தன் அக்கா உண்ணச் செய்த; ப்ரப்ரபக்வ - நன்றாக வெந்த; குலித்த - கொள்ளு; புஜிஸி - உண்டு; ஜீர்ணிஸித க்ஷணதி - நொடியில் அதனை ஜீர்ணம் செய்தான்;

பாலகன் வாசுதேவனின் பால லீலைகளை இங்கு சொல்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர். குழந்தை பால் குடிப்பதற்காக, ஒரு பசுவை தானம் அளித்த பிராமணருக்கு, விரைவில் ஆசார்யரின் சாஸ்திர ஞானத்தை அளித்தான். தன்னுடைய சக்தியால் தன் குடும்பத்தினரை, பூதத்தின் பயத்தினை போக்கினான். மத்யகேஹ பட்டரின் மனைவி (வாசுதேவனின் தாய்), வேலை விஷயமாக வெளியே சென்றிருக்கையில், அழுகையிலிருந்து தப்புவதற்காக, தன் அக்கா கொடுத்த நன்றாக வெந்த கொள்ளினை உண்டு, நொடிப்பொழுதில் அதனை ஜீர்ணம் செய்தான்.

பாதும் பயாம்ஸி ஷிஷவே கில கோ$^3$ பிரதோ$^3$ஸ்மை
பூர்வாலய: ஸ்வ ஸுத ஸூனுதயா ப்ரஜாத: |
நிர்வாண ஹேதுமலபி$^4$ஷ்ட பராத்ம வித்$^3$யாம்
தா$^3$னம் த்$^4$ருவம் ப$^2$லதி பாத்ர கு$^3$ணானுகூல்யாத் ||2-30

மடில்லாயா என்னும் பிராமணர் குழந்தை பால் குடிப்பதற்காக, மத்யகேஹ பட்டருக்கு, ஒரு பசுவை தானம் அளித்தார். இத்தகைய நற்செயலால், அவர் மறுபடி அவருடைய மகனுக்கே பிறந்து, ஸ்ரீமதாசார்யரின் சாஸ்திரங்களை கற்றறிந்தார். தகுந்தவருக்கு கொடுத்த தானமானது, அதிக பலன்களைத் தரும் என்னும் 'ஸத் பாத்ர தான' விஷயத்தை இந்த ஸ்லோகம் விளக்குகிறது.

ஆவிஷ்ய பூருஷ$^2$முவாச மஹா க்$^3$ரஹோ஽ஸௌ
அஸ்மத் விஹார ஸமயோப க$^3$தான் ஸமஸ்தான் |
யச்சக்தி கு$^3$ப்தி ரஹிதானலமஸ்மி ஹந்தும்
லோகேஷ்வர: ஸ ப$^3$த பா$^3$ல தம: கிலேதி ||2-34

இந்த குழந்தையினாலேயே நீங்கள் தப்பித்தீர்கள். இது சத்தியம். நீங்கள் அனைவரும் உயிர் பிழைத்திருப்பது, இந்த குழந்தை செய்த புண்ணியத்தாலேயே. இவன் சாதாரண குழந்தையல்ல. உலகத்தை

காப்பவன், உலகத்தின் பிராணநாதன் இவனே – என்று இவர்களை தாக்க வந்த பூதத்தின் குரல் கேட்டது.

கர்தவ்ய மௌட்4யமபி4 பத்3ய நிரூப்ய ஸா தம்
ப்ராபோ4ஜயத் கலு2 குலஸ்த2 குலம் ப்ர பக்வம் | 2-38

குழந்தையின் அழுகையை நிறுத்தமுடியாத அந்த சிறுமி, அங்கு வைத்திருந்த கொள்ளினை அக்குழந்தைக்கு கொடுத்தாள்.

ஆரோக்3ய ஷாலினி புரேவ ததா3பி பு1த்ரே
விஸ்மேரதாமுப ஜகா3ம ஜனன்யமுஷ்2ய | 2-41

மகனை நினைத்தவாறு வீட்டிற்கு விரைவாக வந்த தாய், குழந்தை நிரம்பிய வயிறுடன் விளையாடிக் கொண்டிருப்பதைக் கண்டு வியப்படைந்தாள்.

குழந்தை வாசுதேவனின் பாலலீலைகளை அடுத்த ஸ்லோகத்திலும் தொடர்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

**[ஸ்லோகம் 8]**
ம்ருது3ள கலபா4ஷணதி3 ஸ்வஜனகெ
முத3வனீயுதலொந்து3 தி3ன
வைதி3த3னு வனவனு வ்ருஷப4 பா3லவ பிடி3து3 ஸந்தஸதி3 |
பெத3ரிஸித3 ருணகொட்ட த4னிகன
ஹ்ருத3ய கரகு3வ தெரதி3 ஸுந்த3ர
வத3ன த3ர் ஶனவித்த வாயுகுமார ரக்ஷிஸலி ||8

ம்ருதுள – அழகான / கொஞ்சும்; கலபாஷணதி – மழலை மொழியில்; ஸ்வஜனகெ – தன் குடும்பத்தவர்க்கு; முதவனீயுத – மகிழ்ச்சியைக் கொடுத்தான்; ஒந்து தின – ஒரு நாள்; வ்ருஷப பாலவ பிடிது – எருதின் வாலினைப் பிடித்துக் கொண்டு; ஸந்தஸதி – மகிழ்ச்சியுடன்; வனவனு – காட்டினை நோக்கி; ஐதிதனு – சென்றான்; பெதரிஸித – கோபத்துடன் மிரட்டிய; ருணகொட்ட – கடன் கொடுத்த; தனிகன – செல்வந்தனின்; ஹ்ருதய கரகுவ – இதயம் உருகுமாறு; ஸுந்தர வதன – தன் இன்முகத்தினை; தர்ஷனவித்த – தரிசனம் கொடுத்த; வாயுகுமார – வாயுகுமாரர்; ரக்ஷிஸலி – நம்மை காக்கட்டும்.

குழந்தை வாசுதேவனின் பால லீலைகளை ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர் இவ்வாறு தொடர்ந்து சொல்கிறார்.

அழகான கொஞ்சும் மழலை மொழியில், வாசுதேவன் தன் குடும்பத்தவர்க்கு மகிழ்ச்சியைக் கொடுத்தான். ஒரு நாள், எருதின் வாலைப் பிடித்துக் கொண்டு மகிழ்ச்சியுடன் காட்டிற்குச் சென்றான். கோபத்துடன் மிரட்டிய கடன் கொடுத்த செல்வந்தனின் இதயம் உருகுமாறு, தன் இன்முகத்தினை தரிசனம் அளித்த வாயுகுமாரர், நம்மை காக்கட்டும்.

தே$^3$வாதி$^3$ ஸத்$^3$பி$^4$ரனு பாலிதயாssத$^3$ரேண
தே$^3$வ்யாssத்மனேவ விலஸத்$^3$ பத$^3$யா நிதாந்தம் ।
அவ்யக்தயா ப்ரத$^2$மதோ வத$^3$னேsஸ்ய வாண்யா
ஷாலீனயேவ பு$^4$வனார்ச்சிதயா விஜஹ்ரே ।। 2-43

உலகத்தின் செயல்கள் யாரினால் நடைபெறுகிறதோ அத்தகைய வாயுதேவர், வாசுதேவனாக ஒரு சாதாரண குழந்தையைப் போல தன் மழலைப் பேச்சினைத் துவக்கினார். பிஞ்சுக் கால்களால் நடந்தார். மெதுவாக எழுந்து நின்றார். நடக்கத் துவங்கினார்.

புச்சாந்தமச்சமவ லம்ப்ய கதா$^3$ சிதே$^3$ஷ$^2$:
ப்ராதர்வ்ரஜாத்வ வ்ரஜத ஏவ நிஜர்ஷ$^2$ப$^4$ஸ்ய ।
ப்ராயாத் ப்ரியஸ்ய ஸஹஸா ஸ்வ ஜனைரத்ருஷ்டோ$^2$
நானா வனேஷு சரதஷ்சரதஸ்த்ருணானி ।।2-45

ஒரு நாள் காலை வேளை. மத்யகேஹ பட்டரின் எருது, மேய்வதற்குக் கிளம்பியது. இந்தச் சிறுவன் அதன் வாலினைப் பிடித்து, யாரும் பார்க்காதபோது அதனுடனே புறப்பட்டான். இதை அறியாத பெற்றோர், உறவினர் நண்பர்கள் அனைவரும், பட்டரின் ஒரு வயதுக் குழந்தையை காணவில்லை என்று வருத்தத்துடன் தேடத் துவங்கினர். குழந்தையை எருதுடன் காட்டில் பார்த்தேன் என்று ஒருவர் சொன்னதை, மாலையில் திரும்பி வந்த குழந்தையைக் கண்டதும் நம்பினர்.

லீலா கரேண ஸ கரேண ஸு கோமலேன பீ$^3$ஜாந்தராணி கில கானி சிதா$^3$ஷு தஸ்மை ।

ஸ்மித்வாsர்பகோsபி$^{4}$மத நிஷ்$^{2}$கபதே$^{3}$ யதா$^{3}$sதா$^{3}$த்$^{3}$ ஆத$^{3}$த்த தா$^{3}$னி த$^{4}$னிகோ ப$^{3}$ஹுமான பூர்வம் ||2-51

ஒரு நாள், மத்யகேஹ பட்டருக்கு எருதினை விற்ற வியாபாரி, அதற்கான பணத்தைப் பெறவேண்டி அவர் வீட்டிற்கு வந்தான். அப்போது விளையாடிவிட்டு திரும்பிய வாசுதேவன், தந்தையை உணவு உண்பதற்கு அழைத்தான். வியாபாரிக்கு பணம் கொடுக்கும்வரை தான் உண்பதில்லை என்று கூறி, வாசுதேவனை உணவுண்ணச் சொன்னார் பட்டர். அந்த வியாபாரிக்குக் கொடுக்கவேண்டிய பணத்திற்கு பதிலாக, தன் கை நிறைய புளியங்கொட்டைகளை எடுத்துக் கொடுத்தான் வாசுதேவன். அந்த வியாபாரியும் மிகவும் மகிழ்ச்சியுடன் அதையே பெற்றுச் சென்றான்.

இத்தகைய வாயுகுமாரர், நம்மை காக்கட்டும் என்று சொல்லி, சிறுவன் வாசுதேவனின் பாலலீலைகளை அடுத்த ஸ்லோகத்திலும் தொடர்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

இத்துடன் மத்வவிஜயத்தின் இரண்டாம் சர்க்க விஷயங்கள் முடிந்தன.

**[ஸ்லோகம் 9]**
ஜனனிஜனகர ஸஹித பா$^{3}$ந்த$^{4}$வ
ஜனர க்$^{3}$ருஹகொ$^{3}$ந்து$^{3}$ தி$^{3}$ன தெரளித$^{3}$
ஜனதெ$^{1}$யதி$^{1}$ ஸம்ப்$^{4}$ரமத$^{3}$லிருதிரெ தரள ஹொரஹொரட **|**
வனவனவ ஸஞ்சரிஸியல்லிஹ
வனஜனாப$^{4}$ன மந்தி$^{3}$ரக$^{3}$ளலி
த$^{3}$ணிவு காணதெ$^{3}$ ஹரிய நமிஸுத ஸிக்கித$^{3}$னு பி$^{1}$தகெ$^{3}$ **||9**

ஜனனி – தாய்; ஜனகர ஸஹித – தன் குடும்பத்தினருடன்; பாந்தவ ஜனர – தன் உறவினர்களின்; க்ருஹகெ – வீட்டிற்கு; ஒந்து தின – ஒரு நாள்; தெரளித – சென்றான்; ஜனதெ – அனைவரும்; அதி ஸம்ப்ரமதலிருதிரெ – ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டு மகிழ்ந்திருக்க; வனஜனாபன – பத்மனாபனின்; மந்திரகளலி – கோயில்களில்; தணிவு காணதெ – சோர்வு இல்லாமல்; ஹரிய

நமிஸுத - ஹரியை வணங்கிக் கொண்டிருந்த வாசுதேவன்; பிதகெ – தந்தைக்கு; ஸிக்கிதனு – கிடைத்தான்.

சிறுவன் வாசுதேவனின் பாலலீலைகளை ஶ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர் தொடர்ந்து விளக்குகிறார்.

வாசுதேவன், தன் தாய், மற்றும் குடும்பத்தினருடன், தன் உறவினர்களின் வீட்டிற்கு ஒரு நாள் சென்றான். அங்கு அனைவரும் ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டு மகிழ்ந்திருக்க, வாசுதேவன் வெளியேறினான். பிறகு, பத்மனாபனின் கோயிலில் வணங்கிக் கொண்டிருந்தபோது, தந்தைக்கு கிடைத்தான்.

மத்வ விஜயத்தில் இந்த சம்பவம் மூன்றாம் சர்க்கத்தில் 1ம் ஸ்லோகங்கத்திலிருந்து 15ம் ஸ்லோகம் வரை வர்ணிக்கப்பட்டுள்ளது.

அத$^{2}$ கதா$^{3}$சன ஸூந்த$^{3}$ர நந்த$^{3}$னஸ்மித
முகே$^{2}$ந்து$^{3}$ த்$^{3}$ருஷாம் த$^{3}$யிதௌ ந்ருணாம் || 3-1

நளினனாப$^{4}$ நிபா$^{4}$லன ஸம்மதா$^{3}$க$^{3}$ம
விகஸ்வர பா$^{4}$ஸ்வர லோசன: ||3-5

அயி ஸூதேத$^{3}$முதா$^{3}$ ஹர தத்வதோ
நனு ஸமா கத$^{3}$வானஸி ஸாம்ப்ரதம் || 3-11

ஒருமுறை ஒரு திருமண நிகழ்ச்சிக்காக நடுவைரி என்னும் கிராமத்திற்கு அனைவரும் புறப்பட்டனர். அங்கு உற்சவத்தின் கொண்டாட்டம், குதூகலத்தில் தாய் மூழ்கினாள். வாசுதேவனுக்கு நேரம் போகவில்லை. த்ருவனைப் போல் வெளியே புறப்பட்டான். மூன்று வயதுக் குழந்தை தனியாகப் போவதைக் கண்டவர்களின் கேள்விக்கு 'ஸ்மிதமனாகுலம் உத்தரமாதனோத்' (3-3), கம்பீரமான சிரிப்பே பதிலாயிற்று. குடுமூரு என்னும் ஹரனின் கோயிலுக்குப் போய் வணங்கி, அங்கிருந்து தாளெகுட என்னும் கோயிலுக்கு வந்து நாராயணனை வணங்கினான்.

பிறகு 'ரஜதபீடபுரம் பிரயயாவஸௌ' (3-5) ரஜதபீடபுரம் (உடுப்பி) போய்ச் சேர்ந்தான். அங்கு அனந்தேஸ்வரனை சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினான். இது 10 அஸ்வமேத யாகங்களைச் செய்த பலன்களை விட அதிக பலன்களைக் கொடுப்பதாக இருந்தது என்று தேவர்களும் பிராமணர்களும் கருதினர்.

தன் மகனே தன்னுடைய உலகம் என்றிருந்த மத்யகேஹர், அவனைக் காணாமல் வருந்தி தேடத் துவங்கினர். வழியில் கண்டவர்களிடம் கேட்டவாறு நடந்தார். நறுமணத்தைக் கண்ட தும்பி எவ்வளவு ஆனந்தப்படுமோ அப்படி தன் மகனின் சிரித்த முகத்தைக் கண்டதும் மத்யகேஹர் மகிழ்ச்சியடைந்தார். இதே சம்பவத்தை அடுத்த ஸ்லோகத்திலும் தொடர்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

மத்வ விஜய மூன்றாம் சர்க்கத்தைப் பற்றியும், இந்த சர்க்கத்தைப் படிப்பதால் வரும் பலன்களைப் பற்றியும் மாதனூரு ஸ்ரீவிஷ்ணு தீர்த்தர், தமது ஸ்ரீமத் ஸுமத்வவிஜய ப்ரமேய பல மாலிகா கிருதியில் இவ்வாறு கூறுகிறார்.

உபனீத: ஸுவிதி$^{4}$னா ஸ்வபித்ராsதீ$^{4}$தவான் த்$^{3}$விஜாத் |
ப$^{3}$ஹூன் வேதா$^{3}$ன் க்ஷணேனைவ த்ருதீயே கதி$^{2}$தம் த்வித$^{3}$ம் ||4|

மூன்றாம் சர்க்கத்தில், சிறந்த பிராமணரான, தந்தையான, மத்யகேஹ பட்டர் மூலமாக, விதிப்படி, சிறப்பாக, உபநயன சம்ஸ்காரத்தைப் பெற்று, குருகுலவாசம் செய்து, மிகக் குறைந்த காலத்திலேயே அனேக வித வேதங்களின் அத்யயனத்தை செய்து, குருகளுக்கு ஐதரேய உபநிஷத்தின் அனேக ரகசிய ப்ரமேயங்களைக் கூறி, குருதட்சிணையாகக் கொடுத்தார்.

மூன்றாம் சர்க்கம் படிப்பதன் பலன் : ஸ்வரூப ஞானம் அடைதல்.

**[ஸ்லோகம் 10]**
யாரு நினகெ$^{3}$ ஸஹாயகரு ஈ
கோ$^{4}$ரவனத$^{3}$லி பேளெனலு தா
தோரித$^{3}$னு வனஸத$^{3}$னவல்லப$^{4}$ மாரஜனகனனு |
ஸூரி **ஶி**வனனு கெ$^{3}$லிது$^{3}$ ஸபெ$^{4}$யலி

சாருவடுவெனிஸித$^3$ ஸகாலதி$^3$
மாருதன மூரனெய ரூபவு **ஶ்**ரேயவனு கொட$^3$லி **||10**

கோரவனதலி - இந்த அடர்ந்த காட்டினில்; யாரு நினகெ - உனக்கு யார்; ஸஹாயகரு - உதவினார்கள்?; பேளெனலு - சொல் என்று கேட்க; வனஸதனவல்லப - காட்டில் இருந்த தலைவனான; மாரஜனகனனு - மாரஜனகனான ஸ்ரீஹரியை; தோரிதனு - காட்டினான்; ஸூரி ஷிவனனு - கற்றறிந்த சிவ பிராமணர் ஒருவரை; கெலிது - வென்று; ஸபெயலி - மக்கள் நிறைந்த சபையில்; சாருவடுவெனிஸித - திறமையான சிறுவன் எனப்பட்ட; மாருதன மூரனெய ரூபவு - வாயுதேவரின் மூன்றாம் ரூபமான இவர்; ஸகாலதி - தக்க சமயத்தில்; ஸ்ரேயவனு - வளமையை (வளர்ச்சியை); கொடலி - கொடுக்கட்டும்.

சிறுவன் வாசுதேவன் தொலைந்து போய், மறுபடி கிடைத்த சம்பவத்தை தொடர்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

இந்த அடர்ந்த காட்டினில் உனக்கு யார் உதவினார்கள் என்று தந்தை கேட்க, காட்டில் இருந்த தலைவனான, மாரஜனகனான ஸ்ரீஹரியை காட்டினான் வாசுதேவன். கற்றறிந்த சிவ பிராமணர் ஒருவரை வென்று, மக்கள் நிறைந்த சபையில் திறமையான சிறுவன் எனப்பட்டார். வாயுதேவரின் மூன்றாம் அவதாரமான இவர், தக்க காலத்தில் நமக்கு வளமையைக் கொடுக்கட்டும்.

அயி ஸுதேத$^3$முதா$^3$ ஹர தத்வதோ
நனு ஸமா க$^3$தவானஸி ஸாம்ப்ரதம் | 3-11

வருத்தத்தில் வந்த கண்ணீரை அடக்கிய தந்தை, மகனைக் கண்டதும் வந்த ஆனந்தக்கண்ணீரை மறுபடி அடக்கினார். 'எப்படி யாருடன் வந்தாய்?' என்று கேட்டார். 'அப்பா, தாளெகுடத்து நாராயணனே என்னுடன் வந்தான்' என்ற சிறுவன் கூறினான்.

சிறுவன் வாசுதேவன், சிவ பிராமணருடன் வாதம் செய்து வென்ற மகிமை, மத்வ விஜயத்தில் 3-22 முதல் 3-27 வரை ஆறு ஸ்லோகங்களில் வர்ணிக்கப்பட்டுள்ளது.

பரிஷ2தா நிதராம் பரிவாரித:
ஷிவபத3: கில தௌ4த படோத்ப4வ: |
இஹ கதா2ம் கத2யன் த3த்3ருஷே
தத: ப்ருது2 தி4யா ப்ருது2காக்ருதினாऽமுனா ||3-22

அத2 கத2ம் கத2யேதி ததா ஜனே க3தி3தவத்யுசிதார்த்த2 முதா3ஹரன் |
ஸ ஸமலாஹ்யத விஸ்மயிபி4னரை: அபி ஸுரைர்விஜயாங்குர பூஜகை: ||3-25

ஒரு முறை வாசுதேவன், தன் தாயுடன் ஒரு உற்சவத்திற்குச் சென்றான். அங்கு ஒரு நிகழ்ச்சி. த்யௌதபட வம்சத்தின் சிவபிராமணர் ஒருவரால் புராண சொற்பொழிவு நடந்துகொண்டிருந்தது. வாசுதேவன் தன் சந்தேகத்தைக் கேட்டான். ’ஹே பிராமணரே! நீங்கள் சொல்வது வியாச ஸுகர்களுக்கு ஒப்புவதில்லை’ என்றான். மக்கள் அந்த சொற்பொழிவை புறக்கணித்து, சிறுவனின் திறமையை புகழ்ந்தனர். புலிக்குட்டி கர்ஜிக்கும்போது, நரியின் கூக்குரலை யார் கேட்பார்கள்? மக்களின் வேண்டுகோளுக்கிணங்க, சரியான பதிலையும் கொடுத்தான். அங்கிருந்த மக்களின் மகிழ்ச்சியும், வாயுதேவரின் வெற்றியைக் கொண்டாடிய தேவர்களின் மகிழ்ச்சியும் ஒன்றானது. வாசுதேவனை அனைவரும் பாராட்டினர். பிறகு வீட்டிற்குத் திரும்பிய வாசுதேவன், அனைத்தையும் தந்தைக்கு தெரிவித்தான். யார் சொன்னது சரி என்று கேட்டான். சரியான விளக்கத்தைக் கொடுத்த மகனின் பதிலே சரி என்றதோடல்லாமல், இது தனது தலைவனான அனந்தேஸ்வரனின் மகிமையாலேயே ஆனது என்று நினைத்தார்.

இத்தகைய மகிமைகளைக் கொண்ட ஸ்ரீவாயுதேவரின் மூன்றாம் அவதாரம், நமக்கு நன்மைகளைக் கொடுக்கட்டும் என்று வாசுதேவனின் பாலலீலைகளை மேலும் அடுத்த ஸ்லோகத்தில் தொடர்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

**[ஸ்லோகம் 11]**
ஸரிது3 ப3ருதிரெ கொ1ல்லலோஸுக3
உரக3ரூபிய தை3த்யனனு வர

சரணகமலத[3] லீலெயலி ஸம்ஹரிஸித[3]னு க்ஷணதி[3] |
ஸுரவரார்ச்சித சரணநாத[3]ரு
த[4]ரணிஸுரனனு நமிஸி வேத[3]வ
நரியுவந்த[3]தி[3] நட[1]னெ மாடி[3]த[3] லோக **ஶி**க்ஷகனு **||11**

கொல்லலோஸுக – தன்னை கொல்வதற்காக; ஸரிது பருதிரெ – பாய்ந்து வந்த; உரகரூபிய – பாம்பு வடிவிலான; தைத்யனனு – அசுரனை; வர சரணகமலத – தன் அழகான கால்களால்; லீலெயலி – விளையாட்டாக; க்ஷணதி – நொடிப்பொழுதில்; ஸம்ஹரிஸிதனு – வாசுதேவன் கொன்றான்; ஸுரவரார்ச்சித சரணநாதரு – தேவதைகளின் கூட்டத்தினால் வணங்கப்படும் சரணங்களைக் கொண்டவன் என்றாலும்; தரணிஸுரனனு நமிஸி – பூமியில் கற்றறிந்தவரான குருகளின் பாதங்களில் வணங்கி; வேதவ நரியுவந்ததி – வேதங்களை கற்க வந்திருப்பதாக; லோகஷிக்ஷகனு – உலகத்தையே திருத்துபவன்; நடனெ மாடித – நாடகம் ஆடினான்.

வாசுதேவனின் பாலலீலைகளை மேலும் விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

தன்னை கொல்வதற்கு பாய்ந்து வந்த பாம்பு வடிவிலான அசுரனை, வாசுதேவன் தன் அழகான கால்களால் விளையாட்டாக நொடிப்பொழுதில் கொன்றான். தேவதைகளின் கூட்டத்தினால் வணங்கப்படும் சரணங்களைக் கொண்டவன் என்றாலும், பூமியில் கற்றறிந்தவரான குருகளின் பாதங்களில் வணங்கி, வேதங்களை கற்க வந்திருப்பதாக, உலகத்தையே திருத்துபவன், நாடகம் ஆடினான்.

வாசுதேவன், பாம்பினைக் கொன்ற மகிமை, மத்வ விஜயத்தில் 3-38, 39, 40 ஆகிய ஸ்லோகங்களில் வர்ணிக்கப்பட்டுள்ளது.

அவிரளைர்கரளோஷ்[2]மபி[4]ராகுலீ
க்ருத ஸமஸ்த ஜனோ விசசார ய: |
க்வசித[3]ரும் நிஜிகா[4]ம்ஸுரஷாந்தி மான்
உப ஸஸர்ப ஸ ஸர்ப மயோऽஸுர: ||3-38
க[3]ருட துண்ட[3]மிவ ப்ரதி பன்னவான்
த்[3]விஜ குமார பத[3]ம் ச மமார ச ||3-40

மணிமந்தன் என்னும் அசுரன் பாம்பின் வடிவில் வந்து 'சர்வமயோऽசுர:', தன் விஷ ஜுவாலையினால் மக்களை அச்சுறுத்தி பயங்கரமாக உலவி வந்தான். ஒரு நாள் இந்த அசுரன், ஆகணாஷ்மசமரான (யாராலும் வெல்லப்பட முடியாதவர்) வாசுதேவனைக் கொல்லவேண்டி அவனின் காலைக் கடித்தான். அப்போது வாசுதேவன் தன் அழகான கால் கட்டைவிரல்களினால் அவனை மிதித்தான். அசுரன் மடிந்தான். இந்தச் செயல் வாயுதேவரால் சாத்தியமாகி, சஜ்ஜனர்களுக்கு பிரியமானதாக இருந்தது. தேவதைகள் மகிழ்ச்சியடைந்தனர்.

கர தளே க2லு கந்துக3 வத் ஸதா3
ஸகலயா கலயா ஸஹ வித்3யயா |
அரி த4ரேண ஸமம் ஸ்புரிதம் கு3ரோ:
மனஸி தஸ்ய விட3ம்பயதோ ஜனான் ||3-42

வேதங்களால் புகழப்படும் இந்த எதிர்கால-பிரம்மன், உபநயன காரியத்தால் வேதங்களைப் படிக்கும் அதிகாரத்தைப் பெற்றார். ருத்ர, ப்ருஹஸ்பதி, இந்திர ஆகிய தேவதைகளால் எந்நேரமும் பூஜிக்கப்படலானார். ஆனால், மனித வடிவில் இருந்ததால் குருகளில் பாதங்களில் விழுந்து, பாடத்தைத் துவங்கினார். சாதாரணரைப் போல பாடத்தைப் படித்த வாசுதேவனின் மனதில் அனைத்து வித்யைகளும், அனைத்து பாடங்களும் கையிலிருக்கும் பந்து போல தெள்ளத் தெளிவாகத் தெரிந்தன. ஞானஸ்வரூபரான வாயு அவதாரத்திற்கு, குருகுலவாசம் என்பது முரணாகத் தெரிந்தது.

சிறுவன் வாசுதேவனின் மகிமைகளை ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர் மேலும் அடுத்த ஸ்லோகத்தில் தொடர்கிறார்.

**[ஸ்லோகம் 12]**
பா3லலீலெக3ளல்லி ப3ஹுதர
காலவனு களெயுத வினோத3தி3
பா3லனொப்3ப3ன சிரதனத3 யாதனெய பரிஹரிஸி **|**
ஆலயகெ தெரளுவ மொத3லு கு3ண
**ஶா**லி கு3ருவனு நமிஸி தன்ன க்ரு
பாலவதி3 பரலோக ஸாத4க ஹரி ப4குதியித்த **||12**

பாலலீலெகளல்லி – தன்னுடைய பால லீலைகளில்; பஹுதர – இப்படியான பல; காலவனு களெயுத – காலங்களை கழித்தவாறு; பாலனொப்பன – தன் நண்பன் ஒருவனின்; சிரதனத யாதனெய – நீண்ட காலமாக இருந்த பிரச்னையை; வினோததி – மிகவும் சாதாரணமாக; பரிஹரிஸி – பரிகரித்து; ஆலயகெ தெரளுவ மொதலு – தான் குருகுலத்திற்கு புறப்படும் முன்னர்; குணஷாலி குருவனு நமிஸி - குணசாலியான குருகளை வணங்கி; தன்ன க்ருபாலவதி – தன் கருணையால்; பரலோக ஸாதக – பரலோகத்திற்கு சாதனமான; ஹரி பகுதியித்த – விஷ்ணு பக்தியை வளர்த்தான்.

சிறுவன் வாசுதேவனின் மகிமைகளை ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர் மேலும் இந்த ஸ்லோகத்தில் தொடர்கிறார்.

தன்னுடைய பால லீலைகளில், இப்படியான பல காலங்களை கழித்தவாறு, தன் நண்பன் ஒருவனின் நீண்ட காலமாக இருந்த பிரச்னையை, மிகவும் சாதாரணமாக பரிகரித்தான் வாசுதேவன். தான் குருகுலத்திற்கு புறப்படும் முன்னர், குணசாலியான குருகளை வணங்கி, தன் கருணையால், பரலோக ஸாதனமான விஷ்ணு பக்தியை வளர்த்தான்.

தன் நண்பனின் பிரச்னையை வாசுதேவன் தீர்த்து வைத்த மகிமை, மத்வ விஜயத்தில் 3-53 ஸ்லோகத்தில் வர்ணிக்கப்பட்டுள்ளது.

ப்ரியவயஸ்ய ஷிரோ கு[3]ரு வேத[3]னாம்
அஷமயத் ஸஹஜாமபி து[3]ஸ்ஸஹாம் |
ஸ விபினே விஜனே முக[2] வாயுனா
ஸ்ரவண கோசரிதேன கதா[3] சன ||3-53

ஒரு முறை வாசுதேவன், குருவின் மகனுடன் காட்டிற்குச் சென்றிருந்தான். நண்பனுக்கு பிறப்பிலிருந்தே இருந்த தலைவலி அப்போது மிகவும் கடுமையாயிற்று. அப்போது வாசுதேவன் தன் நண்பனின் காதுகளில் தன் வாயை வைத்து ஊதினான். உடனடியாக அந்த தலைவலி பிரச்னை தீர்ந்துபோனது. பிறகு அது வரவேயில்லை. இப்படியாக தன் குருவின் மகனுக்கு அருளினார்.

சாக்ஷாததோ2ப நிஷ2தோ3 விபு4ரைதரெய்யா:
பாட2ச்சலேன விஜனோர்த2ரசம் ப்3ருவாண: |
அத்4யாபகாய விததார விமோக்ஷ பீஜம்
கோ3விந்த ப4க்திமுசிதாம் கு3ருத3க்ஷிணாம் ஸ: | (3-55)

ஒருமுறை தன் குருவினிடம் ஐதரேய உபநிஷத் படிக்கும் சந்தர்ப்பத்தில், தனிமையில், மிகச் சிறந்த, மோட்சத்திற்கான வழியான, சிறப்பு அர்த்தங்களைக் கூறி விஷ்ணுபக்தியினை அவரிடம் வளர்த்தார். இதுவே சிறுவன் குருவிற்கு அளித்த குருதட்சிணை ஆகும். பிறகு தேவதைகள் வாசுதேவனை 'ஸ்வாமி, துஷ்டர்களை திருத்துங்கள், ஸ்ரீஹரியின் குணங்களை தெரியப்படுத்துங்கள், சஜ்ஜனர்களை காப்பாற்றுங்கள்' என்று வேண்ட, மூன்று உலகத்திற்கும் குருவான இவர், தம் குருவினிடமிருந்து ஒப்புதல் பெற்று, குருகுலத்திலிருந்து புறப்பட்டார்.

இத்துடன் மத்வ விஜயத்தின் மூன்றாம் சர்க்கத்தின் விஷயங்கள் முடிவடைந்தன. அடுத்த ஸ்லோகத்திலிருந்து நான்காம் சர்க்கத்தின் விஷயங்களை விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

**[ஸ்லோகம் 13]**
த4ரணிப4வ தி3திஸுதர த3ண்டி3ஸெ
பரமஹம்ஸா **ஶ்**ரமவ படெ3யலி
கு3ருக3ளனு ஹுடு3குதலி ஹொரட1னு ஸகலவ த்யஜிஸி **|**
பரமமங்க3ள வேதி3ஜெய கர
ஸரஸிஜதி3 தொ3ரெதுது3த3 பு4ஞ்சிஸி
கரண **ஶு**த்3தி4யல்லித்த யதிவரனோலக3கெ1 ப3ந்த3 **||13**

தரணிபவ – பூமியில் வந்து பிறந்துள்ள; திதிஸுதர – திதியின் மக்களான அசுரர்களை; தண்டிஸெ – தண்டிப்பதற்கு; பரமஹம்ஸாஸ்ரவம படெயலி – யதி ஆசிரமத்தைப் பெறுவதற்காக; குருகளனு – ஒரு தக்க குருவை; ஹுடுகுதலி – தேடி; ஹொரடனு – புறப்பட்டான்; ஸகலவ த்யஜிஸி – அனைத்தையும் துறந்துவிட்டு; பரமமங்கள – மிகவும் பவித்ரமான; வேதிஜெய – திரௌபதியின்; கர ஸரஸிஜதி – அவளின்

கரங்களால்; தொரெதுதுத – கிடைத்ததை; புஞ்சிஸி – உண்டதால்; கரண ஷுத்தியல்லித்த – சுத்தமான மனதினைக் கொண்டிருந்த; யதிவரனோலககெ – யதி வரேண்யரின்; ஓலககெ – சபைக்கு; பந்த – வந்தான்.

மத்வ விஜயத்தின் நான்காம் சர்க்கத்தின் விஷயங்களை விளக்கத் தொடங்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

பூமியில் வந்து பிறந்துள்ள, திதியின் மக்களான அசுரர்களை தண்டிப்பதற்கு, யத்யாஸ்ரமத்தை பெறுவதற்காக, ஒரு தக்க குருவைத் தேடி, வாசுதேவன் புறப்பட்டான். அனைத்தையும் துறந்து, (சென்ற பிறவியில்) திரௌபதியின் கரங்களால் கிடைத்ததை உண்டதால், சுத்தமான மனதினைக் கொண்டிருந்த யதிவரேண்யரின் சபைக்கு வந்தான்.

மத்வ விஜயத்தின் 4-2ம் ஸ்லோகம் இதை இவ்வாறு வர்ணிக்கிறது.

அனன்ய சங்கா3த்3 கு3ணசங்கிதா ஹரே: ஜனஸ்யமான் து விசிஷ்2ட சேஷ்2டிதம் |
அசங்கமஸ்மாத் ப்ரகடி கரோம்யஹம் நிஜம்ப4ஜன் பாரமஹம்ஸ்யமாஸ்ரமம் || (4-2)

சஜ்ஜனர்களின் மேலுள்ள கருணையினால், தேவதைகளுக்கு தவறான அர்த்தங்களைக் கற்பித்து மக்களைக் குழப்பும் மாயாவாதிகளைக் கண்டித்து, சஜ்ஜனர்களுக்கு சத்வைஷ்ணவ சித்தாந்தத்தை போதித்து உதவுவதற்கு அவதரித்த வாசுதேவன், மேற்கொண்டு செய்யவேண்டியதை யோசித்தான்.

ஸ்ரீஹரியிடம் பக்தி பெருகுவதற்கு உலகத்தின் மேல் விரக்தி வேண்டும். தேவனிடத்தில் அன்பு வருவதற்கு, தற்காலிக விஷயங்களின் மேல் வெறுப்பு வரவேண்டும். சஜ்ஜனர்கள் இவற்றை தங்கள் நடைமுறைக்கு கொண்டுவருவர். ஆகையால், தானும் வைராக்கியத்தைக் காட்டி சன்யாசி ஆவேன் என்றான் வாசுதேவன்.

புரைஷ2 கிருஷ்ணாகர ஸித்3த4 ஷுத்3தி4மத்3
வரான்ன பு4க்த்யா கி1ல பாண்ட3வாலயே |
விஷோதி4தாத்மா மது4க்ருத் ப்ரவ்ருத்திமான்
சசார கான்ஸ்சித் பரி வத்ஸரான் முதா3 || 4-7

விரக்தி கொண்ட ஒரு சன்யாசி. எப்போதும் அச்யுதனையே வணங்கியதால் அச்யுதப்ரேக்ஷர் என்று அழைக்கப்பட்டார். ஹம்ஸ நாமக பரமாத்மாவின் பரம்பரையில் வந்த மஹானுபாவர். இவர் முந்தையபிறவியில், பிக்ஷை பெற்று உண்ணும்போது, திரௌபதியின் கையில் தயாரான சுத்தமான அன்னத்தைப் பெற்று உண்ட சன்யாசி. ஆகையால் சுத்தமான மனது உடையவராக இருந்தார்.

வாசுதேவன் அச்யுதப்ரேக்ஷரின் வந்து சேர்தல்

ப்ரதீக்ஷமாணம் தமனுக்3ரஹம் முதா3
நிஷே2வமாணம் புனரம்புஜேக்ஷணம் |
ஸதாம் கு3ரு: காரண மானுஷா2க்ருதி:
பதிம் ப்ரஷாந்தம் தமுபா ஸஸாத3 ஸ: ||4-14

பக்தரான அச்யுதப்ரேக்ஷருக்கு, பக்தவத்ஸலான ஸ்ரீஹரி இன்னொருவர் மேல் ஆவேசம் கொண்டு ஒரு செய்தியைக் கூறினார். ‘ஒரு சிஷ்யர் கிடைப்பார், அவன் மூலமாக என்னை அறி’. பொறுமையுடன் காத்திருந்த அச்யுதப்ரேக்ஷரிடம், சர்வக்ஞரான வாயுதேவர் சிஷ்யராக சேர்வதற்கு வந்து சேர்ந்தார்.

மத்வ விஜய நான்காம் சர்க்கத்தைப் பற்றியும், இந்த சர்க்கத்தைப் படிப்பதால் வரும் பலன்களைப் பற்றியும் மாதனூரு ஸ்ரீவிஷ்ணு தீர்த்தர், தமது ஸ்ரீமத் ஸுமத்வவிஜய ப்ரமேய பல மாலிகா கிருதியில் இவ்வாறு கூறுகிறார்.

துர்யாஷ்ரம மனுப்ராப்ய வேதா3ந்த நிரதோऽப4வத் |
ஷிஷ்யானத்4யாப யாமாஸ ஸம்ப்ரதா3ய மஹாபயன் ||5||

முந்தைய பிறவியில், பாரதிதேவியரின் அவதாரரான த்ரௌபதி தேவியரின் பவித்ர கைகளால் உணவு உண்டு, சுத்தாந்தகரணரான

ஸ்ரீஅச்யுதப்ரேக்ஷர் மூலமாக சன்யாச ஆசிரமத்தை ஏற்றுக்கொண்டு, வேதாந்தத்தில் தன்னுடைய விருப்பத்தைக் காட்டினார். அதாவது, உத்தம ரீதியில் சன்யாச தர்மத்தை பின்பற்றினார். சன்யாசிகளின் முக்கிய கடமைகளான அத்யயனம், பிரவசனங்களை சம்பிரதாயத்திற்கேற்ப பின்பற்றினார்.

நான்காம் சர்க்கம் : நற்சாதனையால் புகழ்

வாசுதேவன் சன்யாசம் ஏற்றுக் கொள்வதான விஷயங்களை அடுத்த ஸ்லோகத்தில் விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

**[ஸ்லோகம் 14]**
தாளித$^{3}$ரெ யத்யா **ஶ்**ரமவ நீ
பா$^{1}$லகரு யாரெமகெ$^{3}$ பு$^{4}$வியலி
லாலிஸெம்மய வசனவெந்த$^{3}$ரு ஜனகஜனனியரு **|**
பாலிஸுவனென்னனுஜ நிம்மனு
கேளிதி$^{3}$த்$^{3}$த$^{3}$ரெ என்ன நுடி$^{3}$யனு
தாளலாரிரி ஸதத து$^{3}$க்க$^{2}$வனெந்து$^{3}$ த்$^{3}$ருட$^{4}$மனதி$^{3}$ **||14**

நீ – நீ; யத்யாஸ்ரமவ – யதி ஆசிரமத்தை; தாளிதரெ – ஏற்றால்; புவியலி – இந்த பூமியில்; பாலகரு – காப்பாற்றுபவர்கள்: யாரமகெ – எங்களுக்கு யார் இருக்கிறார்கள்?; எம்மய வசன – எங்கள் பேச்சை; லாலிஸு – கேள்; எந்தரு – என்றனர்; ஜனகஜனனியரு – பெற்றோர்; நிம்மனு – உங்களை; என்னனுஜ – என் தம்பி; பாலிஸுவ – காப்பாற்றுவான்; என்ன நுடியனு – என் பேச்சை; கேளிதித்தரெ – கேட்கவில்லையென்றால்; ஸதத துக்கவ – நிரந்தரமான துக்கத்தை; தாளலாரிரி – தாங்க மாட்டீர்கள்; எந்து – என்றான்; த்ருடமனதி – திடமான மனதினால்.

வாசுதேவனின் சன்யாச ஆசிரம ஸ்வீகரிக்கும் பகுதியை விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

நீ யதி ஆசிரமத்தை ஏற்றால், இந்த பூமியில் எங்களை காப்பாற்றுபவர்கள் யார் இருக்கிறார்கள்? எங்கள் பேச்சைக் கேள் – என்றனர் வாசுதேவனின் பெற்றோர். ஆனால் வாசுதேவனோ, உங்களை என் தம்பி காப்பாற்றுவான். என் பேச்சை நீங்கள்

கேட்கவில்லையென்றால், வரும் நிரந்தரமான துக்கத்தை தாங்க மாட்டீர்கள் என்று திட மனதுடன் கூறினான்.

மத்வவிஜயத்தில் இந்த படலம் 4-15 ஸ்லோகத்திலிருந்து வர்ணிக்கப்பட்டுள்ளது.

ஸுதம் யதீந்த்3ரானு சரம் விராகி3ணம்
நிஷம்ய ஸன்யாஸ நிஷண்ண மானஸம் |
ஸுவத்1ஸலௌ ரூப்ய தளாலயா ஸ்திதம்
வியோக3 தாந்தௌ பிதரௌ ஸமீயது: ||4-15

தங்கள் மகனான வாசுதேவன் அச்யுதப்ரேக்ஷரின் சிஷ்யன் ஆகிவிட்டதையும், சன்யாசி ஆகப்போவதையும் கேட்டு, பாசம் மிக்க பெற்றோர், அவனைப் பார்க்க உடுப்பிக்கு விரைந்தனர்.

வராஸ்ரமாப்திம் மம ஸம்வதஸ்வ
மாம் கதா3சிதப்யம்ப3 யதீச்சஸீக்ஷிதும் |
யதன்யதா2 தே3ஷமிமம் பரித்யஜன்
ந ஜாது த்3ருஷ்டேர்2விஷயோ ப4வாமி வ: ||4-28

அம்மா, என்னை எப்போதாவது பார்க்க வேண்டும் என்றால், நான் சன்யாசி ஆவதற்கு ஒப்புதல் கொடுங்கள். அனுமதி இல்லையெனில், இந்த தேசத்தையே விட்டு, அடுத்து உங்கள் கண்ணிலேயே தென்படமாட்டேன் - என்றான் வாசுதேவன்.

வாசுதேவன் சன்யாச ஆசிரமம் ஏற்று பூர்ணபோதர் ஆனதை, அடுத்த ஸ்லோகத்தில் விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

**[ஸ்லோகம் 15]**
கு3ருவரேண்யர கரஸரோஜதி3
பரம ஹம்ஸா **ம்**ரமவ பொந்து3த
கரெத3ராத1கெ3 த4ரெஸுரரு வரநியகமக3ள ததிய **|**
ஹருஷத3லி வர பூர்ணபோ3தா4
பி4த3தி3 கு3ணக3ளனரிது ஜீவர
வரவர பரிமித மாத்ர ப்ரணவ ஜபாதி4காரிக3ளு **||15**

குருவரேண்யர - தனது குருகளின்; கரஸரோஜதி - திருக்கரங்களால்; பரம ஹம்ஸாஸ்ரமவ - யதி ஆசிரமத்தை; பொந்துத - பெற்று; ஹருஷதலி - மகிழ்ச்சியுடன்; கரெதராதகெ - அவரை அழைத்து; வரநியமகள ததிய - சிறந்த வேதராசிகளில் சொல்லப்பட்டிருக்கும் விதிகளின்படி; தரெஸுரரு - விஷ்ணுவின் தேவதைகள்; வர - வணங்குபவருக்கு; ஜீவரவரவர - (காலம் காலமாக) ஜீவர்கள் அவரவர்களின்; பரிமித மாத்ர - தகுதிக்கேற்ப மட்டுமே சொல்லும்; ப்ரணவ - பிரணவ மந்திரத்தை; பூர்ணபோதாபிததி - பூர்ணபோத என்று பெயர் சூட்டி; ஜபாதிகாரிகளு - பிரணவ மந்திரத்திற்கு ஜபாதிகாரிகள் ஆனவருக்கு உபதேசித்தார்.

வாசுதேவன் சன்யாச ஆசிரமத்தை ஏற்கும் படலத்தை விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

தனது குருகளின் திருக்கரங்களால், யதி ஆசிரமத்தைப் பெறுகிறார் வாசுதேவன். குருவானவர், விஷ்ணுவின் தேவதைகளே வணங்குபவரான அவரை மகிழ்ச்சியுடன் அழைத்து, சிறந்த வேதராசிகளில் சொல்லப்பட்டிருக்கும் விதிகளின்படி, காலம்காலமாக ஜீவர்கள் அவரவர்களின் தகுதிக்கேற்ப மட்டுமே சொல்லும் பிரணவ மந்திரத்தை, பூர்ணபோத என்னும் பெயரைச் சூட்டி, பிரணவ மந்திரத்திற்கு ஜபாதிகாரிகள் ஆனவருக்கு உபதேசித்தார்.

வாசுதேவன் பூர்ணப்ரக்ஞர் ஆன சுபமுஹூர்த்தத்தை மத்வ விஜயம் 4-33ம் ஸ்லோகத்தில் பார்க்கலாம்.

கு$^{3}$ணானு ரூபோன்னதி பூர்ணபோ$^{3}$த$^{4}$ இத்யமுஷ்$^{2}$ய நாம த்$^{3}$விஜவ்ருந்த$^{3}$ வந்தி$^{3}$த: |
உதா$^{3}$ஹரத்$^{3}$ பூ$^{4}$ரி யஷாஹி கேவலம் ந மன்னவர்ண: ஸ ச மன்ன வர்ணக: ||4-33

வேதங்களில் சொல்லப்பட்டிருக்கும் விதிகளை அனுசரித்து, பொருத்தமான பெயரான, பூர்ணபோத (பூர்ணப்ரக்ஞ) என்னும் பெயரை, அச்யுதப்ரேக்ஷர் வைத்தார்.

நிரங்கராக3ம் முக2ராக3 வர்ஜிதம் விபூ4ஷணம் விஷ்2டப பூ4ஷணாயிதம் |
அமும் த்4ருதாஷாடமவேக்ஷ்ய மேனிரே ஸ்வபாவ4 ஷோபா4னுபமேபி ஜந்தவ: || (4-34)

அனைத்து தேவதைகளாலும் வணங்கப்படும் பூர்ணப்ரக்ஞர், தமது குருகளை சாஷ்டாங்கமாக வணங்கினார். சரியான நியமத்தை பின்பற்றுவது பற்றி உலகத்திற்கு எடுத்துக் காட்டினார்.

வாசுதேவன் சன்யாச ஆசிரமத்தை ஏற்கும் படலத்தை தொடர்ந்து அடுத்த ஸ்லோகத்திலும் விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

**[ஸ்லோகம் 16]**
ரஜதபுரவல்லப4ன ஸேவெகெ3
விஜயவெம்பு3வ தோருவந்த3தி3
பு4ஜபிடி3து3 தா கொட்டநீத1னு அச்யுதேக்ஷரிகெ3 |
அஜிதனாக்3ஞெய படெ3த3 ஸுரநதி3
பிஜயிஸித3ளாஸ்த2ளகெ கீர்த்திய
த்4வஜவு ஹாரிது1 வாத3த3லி ஸுஜனார்த்தி1 மரெயாய்து1 ||16

ரஜதபுர வல்லபன - உடுப்பியின் தலைவனான அனந்தேஸ்வரனுக்கு; ஸேவெகை - செய்த சேவைக்கு; விஜயவெம்புவ தோருவந்ததி - தக்க பலன் கிடைத்தது என்பதைப் போல; அச்யுததேக்ஷரிகெ - அச்யுதப்ரேக்ஷரின்; புஜபிடிது - தோள்களைப் பிடித்து; தா கொட்டநீதனு - இவனை நான் கொடுத்தேன்; அஜிதனாக்ஞெய படெத - ஸ்ரீஹரியின் ஆணையைப் பெற்ற; ஸுரநதி - கங்கை; பிஜயிஸிதளாஸ்தளகெ - அனந்த ஸரோவரத்தில் பாய்ந்தாள்; வாததலி - வாதங்களில்; ஸுஜனார்த்தி - சஜ்ஜனர்களின் சந்தேகங்கள் / குழப்பங்கள்; மரெயாய்து - மறைந்தன; கீர்த்திய த்வஜவு - வெற்றிக்கொடி; ஹாரிது - பறந்தது.

வாசுதேவன் பூர்ணபோதர் ஆன சமயத்தில் நடந்த விஷயங்களை இங்கே விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

உடுப்பியின் தலைவனான அனந்தேஸ்வரனுக்கு செய்த சேவைக்கு தக்க பலன் கிடைத்தது என்பதைப் போல, அச்யுதப்ரேக்ஷரின்

தோள்பிடித்து, இவனை நான் உனக்குக் கொடுத்தேன் (என்று ஒரு பிராமணர் மூலம் சொல்ல வைத்தான்). ஶ்ரீஹரியின் ஆணையைப் பெற்ற கங்கை, அனந்த ஸரோவரத்தில் பாய்ந்தாள். வாதங்களில் சஜ்ஜனர்களின் சந்தேகங்கள் / குழப்பங்கள் மறைந்தன. பூர்ணபோதரின் வெற்றிக்கொடி எங்கும் பறந்தது.

இந்த சந்தர்ப்பத்தை மத்வவிஜயத்தில் 4-37, 4-38 ஸ்லோகங்களில் பார்க்கலாம்.

ஸ ரூப்ய பீடா$^{2}$லய வாஸினே யதா$^{3}$
நனாம நாதா$^{2}$ய மஹா மதிர்முதா$^{3}$ ।
ததா$^{3}$sமுனாsக்3ராஹி நர ப்ரவேஷினா
பு$^{4}$ஜே பு$^{4}$ஜேனssஷு பு$^{4}$ஜங்க ஷாயினா ||4-37

சிராத் ஸு தத்வம் பு$^{3}$பு$^{4}$த்ஸுனா த்வயா
நிஷே$^{2}$வணம் மே யத$^{3}$காரி தத் ப$^{2}$லம் ।
இமம் த$^{3}$தா$^{3}$மீத்யபி$^{4}$தாய ஸோமுனா
ததா$^{3}$ பிரணீய ப்ரத$^{3}$தே$^{3}$sச்யுதாத்மனே ||4-38

(4-37) மிக்க மகிழ்ச்சியுடன் பூர்ணபிரக்ஞர் அனந்தாஸனனை விழுந்து வணங்கியபோது, அனந்தாஸனன் ஒரு பிராமணரில் புகுந்து, பூர்ணபிரக்ஞரை எழுப்பி, அவரை அச்யுதப்ரேக்ஷரிடம் ஒப்படைத்து, (4-38) பலகாலமாக எனக்கு நீங்கள் செய்த சேவையின் பலனாக இந்த தக்க பரிசினை நான் உங்களுக்கு அளிக்கிறேன் என்று கூறினான்.

அனந்த ஸரோவரத்தில் கங்கை பாய்ந்த விஷயம், மத்வவிஜயத்தில் 4-40, 41, 42 ஸ்லோகங்களில் வர்ணிக்கப்பட்டுள்ளது.

இதஸ்த்ருதீயே தி$^{3}$வஸே த்$^{3}$யு நிம்னகா$^{3}$
த்வதvர்த்த$^{2}$மாஸ்மாக தடாகமாவ்ரஜேத் ।
அதோ ந யாயா இதி தம் ததா$^{3}$sவத$^{3}$த்
ப்ரவிஷ்ய கஞ்சித் கருணா கரோ ஹரி: ||4-41

ஸ்ரீமன் நாராயணன் ஒரு பிராமணரில் புகுந்து, பூர்ணப்ரக்ஞரிடம் இவ்வாறு கூறினார். இன்றிலிருந்து மூன்றாம் நாள், பவித்ரளான கங்கை உங்களுக்காக இந்த ஸரோவரத்தில் பாய்வாள்.

ததா$^3$ஞுயோபாக$^3$த ஜான்ஹவி ஜலே
ஜனோऽத்ர ஸஸ்னௌ ஸஹ பூர்ண பு$^3$த்$^3$தி$^3$னா ।
தத: பரம் த்$^3$வாத$^3$ஷ வத்ஸராந்தரே
ஸதா$^3$ऽऽவ்ரஜேத் ஸா தத$^3$னுக்ர$^3$ஹாங்கி$^1$னீ ।।4-42

பகவந்தனின் வாக்கின்படி, அனந்த ஸரோவரத்தில் கங்கை பாய்ந்தபோது, பூர்ணப்ரக்ஞர் மற்றும் அவரைச் சார்ந்தவர்களும் அந்த ஸரோவரத்தில் ஸ்னானம் செய்தனர்.

இத்துடன் மத்வ விஜய நான்காம் சர்க்கம் முடிந்தது. அடுத்த ஸ்லோகத்தில் ஐந்தாம் சர்க்கத்தின் விஷயங்கள் துவங்குகின்றன.

பின், பூர்ணபோதர், ஆனந்ததீர்த்தர் ஆன விஷயத்தை அடுத்த ஸ்லோகத்தில் விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

**[ஸ்லோகம் 17]**
வேத$^3$வித்யா ராஜ்யத$^3$லி பர
மாத$^3$ரத$^3$லபி$^4$ஷேகவீதகெ$^3$
கெ$^3$ய்த$^3$ரச்யுத மதிய தீமத்$^3$ரரொந்து$^3$ தி$^3$ன **।**
பா$^3$த$^4$பா$^3$ரத$^3$ மோத$^3$வனு தி$^3$ன
ஸாதி$^4$ஸுவ **ஶா**ஸ்த்ரக$^3$ளானு ரசிஸலு
மோத$^3$தீர்த்த$^2$ ஸுனாமவிவரிகெ$^3$ ஸார்த்த$^2$கவாயிது **।।17**

ஒந்து தின – ஒரு நாள்; அச்யுதமதி யதி – அச்யுதப்ரேக்ஷர்; ஈதகெ – பூர்ணபோதருக்கு; வேதவித்யா ராஜ்யதலி – வேதாந்த சாம்ராஜ்யத்தில்; பரமாதரதலி – மிகவும் பக்தி / மரியாதையுடன்; அபிஷேக கெய்தரு – பட்டாபிஷேகம் செய்தார்; பாதபாரத – சந்தேகம் வராத; மோதவனு – மகிழ்ச்சியை; தின ஸாதிஸுவ – தினமும் கொடுக்கக்கூடிய; சாஸ்த்ரகளானு – சாஸ்திரங்களை இவர்; ரசிஸலு – இயற்றுவதற்கு; மோததீர்த்த – மோத தீர்த்த / ஆனந்ததீர்த்த; ஸுநாமவிவரிகெ – என்னும் நற்பெயர் இவருக்கு; ஸார்த்தகவாய்து – பொருத்தமாகவே அமைந்தது.

சன்யாச ஆசிரமம் ஏற்றுக்கொண்டு பூர்ணபோதர் ஆனவர், பட்டத்தில் ஏறி ஆனந்ததீர்த்தர் ஆனதை இங்கு விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

ஒரு நாள், அச்யுதப்ரேக்ஷர் பூர்ணபோதருக்கு வேதாந்த சாம்ராஜ்யத்தில் மிகவும் பக்தி மரியாதைகளுடன் பட்டாபிஷேகம் செய்தார். சந்தேகமற்ற, தினமும் மகிழ்ச்சியைக் கொடுக்கக்கூடிய சாஸ்திரங்களை இவர் இயற்றுவதற்கு கொடுத்த ஆனந்ததீர்த்த என்னும் பெயர் பொருத்தமாகவே இருந்தது.

மத்வ விஜய 5ம் சர்க்கத்தின் துவக்கத்தில் – ஸ்ரீபூர்ணபிரக்ஞருக்கு வேதாந்த சாம்ராஜ்யத்தில் அபிஷேகம் செய்யப்பட்டது வர்ணிக்கப்பட்டுள்ளது.

வேதாந்த சாம்ராஜ்யத்தில் ஸ்ரீமன் மத்வாசார்யரை அதிபதி ஆக்கவேண்டுமென்று விரும்பிய அச்யுதப்ரேக்ஷர், அதனை நிறைவேற்றி அவருக்கு ‘ஆனந்ததீர்த்த’ என்று பெயரிட்டார்.

ஆனந்த$^{3}$ ரூபஸ்ய பரஸ்ய பாத்ரதீ$^{4}$: ஆனந்த சந்தாயிசு சாஸ்திர க்ருத்சயத் |
ஆனந்த$^{3}$ தீர்த்தே$^{2}$தி பத$^{3}$ம் குருதி$^{3}$தம் ப$^{3}$பூ$^{4}$வ தஸ்யாத்யனுரூப ரூபகம் || (5-2)

ஆனந்தத்தைக் கொடுக்கக்கூடிய சாஸ்திரங்களைப் படைக்கக்கூடியவர், ஆனந்தரூபியான ஸ்ரீஹரியிடம் எப்போதும் தியானத்தில் இருப்பவர் மற்றும் ஆனந்தரூபனான ஸ்ரீஹரிக்கு ப்ரியமானவர் – ஸ்ரீபூர்ணப்ரக்ஞர். ஆகையாலே, அச்யுதப்ரேக்ஷரால் கொடுக்கப்பட்ட ‘ஆனந்ததீர்த்த’ என்னும் பெயர் மிகப் பொருத்தமானதாகும். இது வேதங்களில் சொல்லப்பட்டிருக்கும் ‘மத்வ’ என்னும் பெயருக்கு சமமான பெயரே ஆகும்.

ஸ்ரீஸ்ரீபாதராஜர், மத்வ நாமாவில், மானநிதி மத்வாக்ய நெந்தெனிஸித (23) என்றார். அதாவது,

வாயுதேவர் மத்யகேஹரிடம் அவதரித்தபோது அவருக்கு வைத்த பெயர் ‘வாசுதேவ’. பிறகு சன்யாசம் வாங்கியபோது பெற்ற பெயர்

'பூர்ணப்ரக்ஞர்'. வேதாந்த சாம்ராஜ்யத்தில் அமர்ந்தபோது குரு கொடுத்த பெயர் 'ஆனந்ததீர்த்தர்'. உலகத்தில் புகழ்பெற்றது மத்வாசார்யர் என்ற பெயரினால். இதன் பின்னணி மற்றும் சிறப்பினையே ஸ்ரீஸ்ரீபாதராஜர் 'மானநிதி' மற்றும் 'மத்வாக்ய' என்னும் சொற்களைப் பயன்படுத்தி சொல்லியிருக்கிறார்.

மத்வ விஜய ஐந்தாம் சர்க்கத்தைப் படிப்பதால் வரும் பலன்களைப் பற்றி மாதனூரு ஸ்ரீவிஷ்ணு தீர்த்தர், தமது ஸ்ரீமத் ஸுமத்வவிஜய ப்ரமேய பல மாலிகா கிருதியில் இவ்வாறு கூறுகிறார்.

வியாக்யான பா4ஷ்யம் மாயிக்ருதம் ஞாபயன் தஸ்ய து3ஷ்டதாம்
ஸூசயன்னுத்தரம் பா4ஷ்யம் ஜிகா3ய ப்ரதிவாதி3ன: ||6||

ஸ்ரீசங்கராசார்யரால் இயற்றப்பட்ட பாஷ்யத்தை விளக்கியவாறு, அதில் இருந்த தவறான கருத்துகளை, பிழைகளை ஸ்ரீமதாசார்யர் சுட்டிக் காட்டினார். தாம் அடுத்து பிரம்மசூத்ரங்களுக்கு மிகப் பொருத்தமான பாஷ்யத்தை இயற்றப் போகிறோம் என்று குறிப்பிட்டவாறு, வாதத்திற்கு வந்த அனேக பிரதிவாதிகளை வென்றார்.

ஐந்தாம் சர்க்கம் : வேதாந்த சாம்ராஜ்யத்தில் அபிஷேகம்

சர்வக்ஞ பீடத்தில் ஏறிய ஸ்ரீமதானந்ததீர்த்தரின் வாதத் திறமைகளை அடுத்த ஸ்லோகத்தில் விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

**[ஸ்லோகம் 18]**
ஹேயவாதக3ளரித கெலரனு
ந்யாய**ஶா**ஸ்திரதி3 சதுரரனு ஹொஸ
ந்யாயக3ள தோருதலி கெ3த்3த3ரு அதிஸுலப4த3லெ **|**
ஜீயபூர்ணப்ரமதி1 த4ரெயொள
ஜீயரெனிஸித3 பு3த்3தி3ஸாக3ர
ப்ரேயனீதகெ3 வாதி3ஸிம்ஹன கெ3லிது3 தா மெரெத3 **||18**

ஹேயவாதகளரித கெலரனு - மாயாவாதங்களை அறிந்த சிலரை; ந்யாய ஷாஸ்திரதி சதுரரனு - நியாய சாஸ்திரங்களில் பண்டிதர்களை; ஹொஸ ந்யாயகள தோருதலி - புதிய

நியாயங்களை காட்டியவாறு; அதிஸுலபதலெ – மிகவும் சுலபமாக; கெத்தரு – (ஆனந்ததீர்த்தர்) வென்றார்; ஜீய – சர்வக்ஞரான; பூர்ணப்ரமதி – ஆனந்ததீர்த்தர்; தரெயொள ஜீயரெனிஸித – இந்த பூமியில் அறிஞர் எனப்படும்; புத்திஸாகர – புத்திஸாகர என்பவனை; ஈதகெ – இவருக்கு; ப்ரேய – நண்பனான; வாதிஸிம்ஹன – வாதிஸிம்மனை; கெலிது – வென்று; தா மெரெத – வெற்றி வாகை சூடினார்.

சர்வக்ஞ பீடத்தில் ஏறிய ஸ்ரீமதானந்ததீர்த்தரின் வாத திறமைகளை விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

மாயாவாதங்களை அறிந்த சிலரை, நியாய சாஸ்திரங்களில் பண்டிதர்களை, புதிய நியாயங்களைக் காட்டியவாறு, ஆனந்ததீர்த்தர் மிகவும் சுலபமாக வென்றார். சர்வக்ஞரான ஆனந்ததீர்த்தர், அறிஞர் எனப்படும் புத்திஸாகர என்பவனை மற்றும் இவனின் நண்பனான வாதிஸிம்மனை வென்று, வெற்றி வாகை சூடினார்.

பண்டிதர்களை, மாயாவாதிகளை ஸ்ரீமதானந்த தீர்த்தர் வாதத்தில் வென்றது மத்வ விஜயத்தில் 5-3 முதல் 5-7 வரை வர்ணிக்கப்பட்டுள்ளது.

கதா$^{3}$ சித$^{3}$த்$^{1}$ரோப யயௌ யதி: ஸகா$^{2}$
கோ$^{3}$விந்த$^{3}$: பு$^{3}$த்$^{3}$தே$^{4}$ர்ப$^{3}$ஹு சிஷ்$^{2}$ய ஸம்வ்ருத: |
அமுஷ்$^{2}$ய சிஷ்$^{2}$யா அனுமான சிக்ஷிதா:
ததா$^{3}$஽ஜிகீ$^{3}$ஷன் கு$^{3}$ரு பு$^{3}$த்$^{3}$தி$^{4}$முத்$^{3}$த$^{4}$தா: || 5-3

ஒருமுறை அச்யுதப்ரேக்ஷரின் நண்பரான சன்யாசி ஒருவர், தனது சிஷ்யர்களுடன் ரஜதபீடபுரத்திற்கு வந்தார். தர்க்க சாஸ்திரங்களில் வல்லவரான அவரது சிஷ்யர்கள் அதில் வாதம் செய்ய மத்வாசார்யரை அழைத்தபோது, ஜீவர்களில் காணப்படும் வேறுபாட்டினை வெறும் தர்க்கத்தினால் நிரூபிக்க முடியும் என்று, அதற்கு ஒரு உதாரணத்தையும் கூறினார். அதற்கு ஸ்ரீமதாசார்யர் ‘பேத சத்ய’ (வேறுபாடு உண்மை). ஆனால் வேத புராணங்களின் உதவியில்லாமல், தனியாக வேறுபாட்டினை நிரூபிப்பது சாத்தியம் இல்லை என்று சொல்லி, அவரது வாதங்களை கண்டித்தார்.

அதற்கு பதிலளிக்கமுடியாத வாதிகள் ‘உலகம் என்பது பொய். சிப்பிக்குள் முத்து என்பதுபோல’ என்று அடுத்த வாதத்தைத் துவக்க, ஸ்ரீமதாசார்யர் ‘உலகம் உண்மை. பானையைப் போல காண்பதினால்’ என்று பதிலளித்து அவரை முழுமையாக வாயடைக்கச் செய்தார். தர்க்கம் என்றும் சுதந்திரமான (தனியான) ஆதாரம் என்று ஏற்றுக்கொள்ள முடியாததால், வெறும் தர்க்கத்தினால் எதையும் நிரூபிக்கமுடியாது என்று சொல்லி ‘ஜகாம நாம்னாப்யனு மான தீர்த்ததாம் |’ (5-7) அனுமானத்தை (கேள்வி / தர்க்கம்) முழுமையான அறிந்தவராகையால் இவர் ‘அனுமான் தீர்த்தர்’ என்று அழைக்கப்படுவார் என்று அங்கிருந்த அறிஞர்கள் அபிப்ராயப்பட்டனர்.

புத்திசாகர மற்றும் வாதிசிம்மரை தோற்கடித்தல்
(மத்வ விஜயத்தில் 5-8 முதல் 5-16 வரை உள்ள ஸ்லோகங்கள்)

சமஸ்த வாதீ$^{3}$ந்த்$^{3}$ர க$^{3}$ஜ ப்ரப$^{4}$க்னத$^{3}$:
சரன்னவன்யாம் ப்ரதிபக்ஷ காங்க்ஷயா |
வேத$^{3}$த்$^{3}$விஷாம் ய: ப்ரத$^{2}$ம: ஸமாயயௌ
ஸ வாதி$^{3}$ஸிம்ஹோऽத்ர ஸ பு$^{3}$த்$^{3}$தி$^{4}$ஸாக$^{3}$ர: ||5-8

பௌத்தத்தில் சிறந்தவரான, வேதங்களை வெறுப்பவரான ‘வாதிசிம்ம’ என்பவர், ‘புத்திசாகர’ என்பவருடன் சேர்ந்து அச்யுதப்ரேக்ஷரிடம் வாதம் செய்வதற்கு வந்தனர். (பாவபிரகாசிகையில், வாதிசிம்மன் பௌத்த பண்டிதனான புத்திசாகரனுடன் வாதிட்டு தோற்று, அவனின் சிஷ்யர் ஆனவர் என்று இருக்கிறது). இருவரும் பூர்ணப்ரக்ஞரை தோற்கடிப்பதற்கு வந்தனர். மிகுந்த கர்வம் கொண்டிருந்த அவர்களை வெல்வதற்கு ஆசைப்பட்டு, சத்சித்தாந்தத்தில் சிறந்தவரான, வாதிகளை வெல்லக்கூடியவரான (வேறொரு மடத்தில் இருந்த) பூர்ணப்ரக்ஞரை, அச்யுதப்ரேக்ஷர் ரஜதபீடபுரத்திற்கு வரச்செய்தார்.

வாதத்தில் வல்லவரான பூர்ணப்ரக்ஞர், எதிராளியின் கதையை (Mace) அம்பினால் அழிப்பதுபோல சுலபமாக தன் வாதத்தின் மூலம் வாதிசிம்மனின் வாதங்களை வீழ்த்தினார். அடுத்து வாதிசிம்மன், ஆசார்யரின் திறனைப் பார்த்து பொறாமையில், வேறொரு

விஷயத்தைப் பற்றிய 18 மாற்று விஷயங்களைப் பற்றி பேசத்துவங்க, சூரியன் தனது கிரணங்களால் இருட்டினை விலக்குவதுபோல, ஸ்ரீமதாசார்யர் மிகச்சுலபமாக, அந்த எல்லா விஷயங்களையும் வியாசரின் வாக்கியங்களினால் கண்டித்தார். பண்டிதனும், கர்வம் கொண்டவனுமான புத்திசாகரனையும் இதே போல வென்றார். (இந்த சம்பவம், ஸ்ரீமதாசார்யர் பீடாதிபதியாகி சில மாதங்களிலேயே நடந்ததாகும்).

வாதிசிம்மன் மற்றும் புத்திசாகரன், வேறு வழி இல்லாமல் வாதம் நாளை தொடரட்டும் என்றனர். அதற்கு ஸ்ரீமதாசார்யர் - உங்களுக்கு பதில் தெரிந்திருந்தால் இப்போதே சொல்லவும் எனவும், அதற்கு பதிலளிக்க முடியாமல் வாயடைத்துப் போயினர். அவர்கள் இருவரும் இரவோடு இரவாக ஊரைவிட்டு ஓடிப்போயினர். இதை அறிந்த ஊர் மக்கள், ஆசார்யரே வென்றார் என்று அறிந்தனர். ஸ்ரீமதாசார்யரின் வாக்-சாதுர்யம், பாண்டித்யம் ஆகியவற்றைக் கண்டு அனைவரும் மெய் மறந்தனர்.

ஸ்ரீமதானந்ததீர்த்தரின் வாதத் திறமைகளை அடுத்த ஸ்லோகத்திலும் தொடர்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

**[ஸ்லோகம் 19]**
அகு3ணனீ**ப்**வர ஈஷஜீவரு
விக3தபே4த3ரு ஜக**3**தி**3**ந்தெனிது1
பொக3ளுதிஹ மாயிக3ள பா4ஷ்யத3 தோ3ஷக3ள தோரி **|**
ஸுக3ம ஸூத்ரார்த்த2க3ள விவரிஸி
ஸ்வகு3ருஸஹிததி3 ஹொரடு த3க்ஷிண
தி3க3னு ஸஞ்சரிஸுத ப3ந்த3ரு விஷ்ணுமங்க3ளகெ **||19**

அகுணனீஷ்வர - ஈஷ்வரன் நிர்குணன்; ஈஷஜீவரு - ஈஷ ஜீவர்கள்; விகதபேதரு - பேதம் இல்லாதவர்கள்; ஜகதிந்தெனிது - உலகம் பொய் என்று; பொகளுதிஹ - (என்று) தவறாக வாதிட்ட; மாயிகள - மாயாவாதிகளின்; பாஷ்யத தோஷகள - பாஷ்யத்தில் உள்ள தோஷங்களை; தோரி - எடுத்துக் காட்டி; ஸுகம - சரியான (தெளிவான) ; ஸூத்ரார்த்தகள - ஸூத்திர அர்த்தங்களை; விவரிஸி - விவரித்து; ஸ்வகுருஸஹிததி - தன்னுடைய குருவுடன்; தக்ஷிண திகனு - தெற்கு திசை நோக்கி; ஹொரடு -

புறப்பட்டு; ஸஞ்சரிஸுத - சஞ்சாரம் செய்தவாறு; விஷ்ணுமங்களக்கெ - விஷ்ணுமங்களத்திற்கு; பந்தரு - வந்தார்;

ஸ்ரீமதானந்ததீர்த்தரின் வாதத் திறமைகளை இந்த ஸ்லோகத்திலும் தொடர்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

ஈஷ்வரன் நிர்குணன், ஈஷ ஜீவர்கள் பேதம் இல்லாதவர்கள், உலகம் பொய் என்று தவறாக வாதிட்ட மாயாவாதிகளின் பாஷ்யத்தில் உள்ள தோஷங்களை எடுத்துக்காட்டி, அதன் தெளிவான ஸூத்திர அர்த்தங்களை விவரித்து, தன்னுடைய குருவுடன், தெற்கு திசை நோக்கி புறப்பட்டு சஞ்சாரம் செய்தவாறு, விஷ்ணுமங்களத்திற்கு வந்தார் ஸ்ரீமதானந்த தீர்த்தர்.

ஸ்ரீமதாசார்யரினால் பிரம்மசூத்ர பாஷ்யத்தின் உபதேசம் - மத்வ விஜயத்தில் 5-17 ஸ்லோகத்திலிருந்து துவங்குகிறது.

வ்யாக்[2]யான் கதா[3] சின்மணிமத் வினிர்மிதம்
பா[4]ஷ்யம் ஜனைஸ்தர்க்க விஷாரதைர்வ்ருத: |
உவாச வாசம் பரிஹாஸ ஹாஸவான்
ஸம்மோத[3] தீர்த்த[2]: ஸுரமோத[3] தா[3]னினீம் || 5-17

வியாசரினால் இயற்றப்பட்ட பிரம்மசூத்ரத்தின் பொருளுக்கும், சங்கராசாரியர் இயற்றிய பிரம்மசூத்ர பாஷ்யம் சொல்லும் விஷயத்திற்கும் சம்பந்தமே இல்லாததைக் கண்ட ஸ்ரீமதாசாரியர், அதனை தகுந்த ஆதாரங்களுடன் நிரூபித்தார். 'மான்யோன் வயோன்யோன்யமஹோ ந த்ருஷ்யதே' (5-18) - அந்த பாஷ்யத்தின் குறைகளை சஜ்ஜனர்களுக்கு நிரூபித்துக் காட்டினார்.

ஸ்ரீவியாசரினால் இயற்றப்பட்ட பிரம்மசூத்ரத்தில், விஷ்ணு சர்வோத்தமத்வம், தோஷங்கள் இன்மை, உலகம் உண்மை, ஜீவ-ஈச பேதம் ஆகியவை விளக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் சங்கராசார்யரின் பாஷ்யத்தில், பிரம்மன் நிர்குணன், அருவம், ஜீவ-ஈசரில் வேறுபாடு இன்மை, உலகம் பொய் ஆகியவற்றை உரைத்துள்ளார். இவை வேதங்களுக்கும், வேதவியாசருக்கும் சம்மதம் இல்லாதவை என்று சொல்லி, அதிலிருந்த குறைகளை

எடுத்துக் காட்டினார். இந்தக் குறைகளுக்கு அங்கிருந்த பண்டிதர்களால் பதிலளிக்க முடியவில்லை.

ஆகையால், சூத்ரத்திற்கு எதிரான விஷயங்களை தமது பாஷ்யத்தில் எழுதினால் அதை எப்படி ஆதாரமாகக் கொள்ளமுடியும் என்று, அதிலிருந்த குறைகளை ஸ்ரீமதாசார்யர் எடுத்துச் சொன்னபோது, அச்யுதப்ரேக்ஷர் மற்றும் அங்கிருந்த பண்டிதர்கள் அனைவரும் வியாசரின் சூத்திரங்களுக்கு உண்மையான பொருளைத் தரக்கூடிய பாஷ்யத்தை இயற்றுமாறு ஸ்ரீமதாசார்யரை வேண்டினர். அப்போதே ஸ்ரீமதாசார்யர், வேத புராணங்களின் அடிப்படையில், வியாசருக்கு சம்மதமான, ஸ்ரீஹரியின் சர்வோத்தமத்வம், தோஷங்கள் இன்மை, உலகம் உண்மை, ஜீவ-ஈச பேதம் ஆகிய விஷயங்களை சரளமாக விளக்கினார். இதுவே பின்னர் அவர் இயற்றப்போகும் சூத்ர பாஷ்யத்திற்கு முன்னுரையாயிற்று.

ஜ்யேஷ்யன் கதா3சித் கிலகால பா2லிதாம்
தி3ஷம் ப்ரயாதோऽச்யுத பு3த்3தி4னா ஸஹ ।
ஸமக்3ர தீ4ர்மண்டி3த விஷ்2ணு மங்க3ளம்
விஷ்ணும் ஜக3ன்மங்க3ள மானனாம ஸ: || 5-30

பிறகு மத்வாசார்யர், அச்யுதப்ரேக்ஷருடன் தெற்கு திசையில் பயணப்பட்டு விஷ்ணுமங்களத்திற்கு தலைவனான விஷ்ணுவை பக்தியுடன் வணங்கினார்.

விஷ்ணுமங்களத்தில் ஸ்ரீமதானந்த தீர்த்தர் நடத்திக்காட்டிய மகிமைகளை அடுத்த ஸ்லோகத்தில் விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

**[ஸ்லோகம் 20]**
மங்க3ளாங்க3ன சரணகெரகு3த
அங்கு3டத3 ஜாட2ர ப்ரபா4வதி3
துங்க3கத3லீனிகரகள பு4ஞ்சிஸுத பி4க்ஷெயலி **|**
அங்க3ஸரஸிஜநாப4ஸ்ரீ
ரங்க3ரமணன நமிஸி பூ4ஸுர
ஸங்க3தி3ந்தா3த3ரவ படெ3யுத மெரெத3 ஸபெ4க3ளலி **||20**

மங்களாங்கன - விஷ்ணுமங்களத்தின் தலைவனான விஷ்ணுவை; சரணகெரகுத - வணங்கியவாறு; அங்குடத - கட்டைவிரல் அளவிலான; ஜாடர - ஜடராக்னியின்; ப்ரபாவதி - உதவியினால்; பிக்ஷெயலி - பக்தர் அளித்த பிக்ஷையில்; துங்ககதலீ நிகரகள - மலை வாழைப்பழக் குலையை; புஞ்சிஸுத - உண்டார்; ஸரஸிஜநாப; அனந்தபத்மனாபனை; அங்க - பயணத்தில் தொடர்ச்சியாக; ஸ்ரீரங்கரமணன - ஸ்ரீரங்கநாதனை; நமிஸி - வணங்கி; பூஸுர - பிராமணர்களின்; ஸங்கதிந்த - சங்கத்தினால் (சந்திப்பினால்); ஆதரவ படெயுத - (அவர்களிடமிருந்து) மரியாதைகளை பெற்றவாறு; ஸபெகளலி - சபைகளில்; மெரெத - சஞ்சரித்தார்.

விஷ்ணுமங்களத்தில் ஸ்ரீமதானந்த தீர்த்தர் நடத்திக்காட்டிய மகிமைகளை இந்த ஸ்லோகத்தில் விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

விஷ்ணுமங்களத்தின் தலைவனான விஷ்ணுவை வணங்கியவாறு, பக்தர் அளித்த பிக்ஷையில், கட்டைவிரல் அளவிலான ஜடராக்னியின் உதவியினால், மலை வாழைப்பழக் குலையை ஸ்ரீமதானந்த தீர்த்தர் உண்டார். பிறகு, தனது பயணத்தில் தொடர்ச்சியாக, அனந்தபத்மனாபனை, ஸ்ரீரங்கநாதனை வணங்கி, பிராமணர்களின் சங்கத்தினால், அவர்களிடமிருந்து மரியாதைகளை பெற்றவாறு, சபைகளில் சஞ்சரித்தார்.

விஷ்ணுமங்களத்தில் பக்தர் அளித்த பிக்ஷை சம்பவம், மத்வ விஜயத்தில் 5-31 ஸ்லோகத்தில் வர்ணிக்கப்பட்டுள்ளது.

பி4க்ஷா ப்ரதா3த்ராsத்ர பரீக்ஷிதும் முஹ:
த3த்தே ப்ரபு4க்தே கத3ளீ பலோச்சயே ।
அனேன நிர்யத்னமவார்ய விஸ்மய:
தமார்யவர்யம் விஜனேsவத3த்3 கு3ரு: || 5-31

ஒரு கிருகஸ்தர் ஸ்ரீமதாசார்யரை சோதிப்பதற்காக, உணவிற்குப் பிறகு ஒரு குலை வாழைப்பழத்தை வைத்து, அதனை உண்ணச் சொன்னார். 200க்கும் அதிகமான பழங்களை, அனாயாசமாக தின்றும், வயிறு மெலிந்து இருந்ததைக் கண்ட அச்யுதப்ரேக்ஷர்

வியப்புடன் இதன் பின்னணி என்னவென்று கேட்க, ஸ்ரீமதாசார்யர், 'அங்குஷ்ட மாத்ரம் ஜடரப்ரதிஷ்டிதம் ஜாஜ்வல்யமானம் மம ஜாத வேதசம் |' (5-33) கட்டைவிரல் அளவிற்கான ஒரு நெருப்பு என் வயிற்றில் இருக்கிறது. இது உலகத்தையே சுட வல்லது என்று தம் ஸ்வரூபத்தை குருவிற்கு ரகசியமாக தெரிவித்தார். (ஆசார்யரின் முந்தைய அவதாரமான பீமாவதாரத்திலும் ஒரு வண்டி உணவினைத் தின்றார் என்று மகாபாரதம் சொல்கிறது).

தத: க்ரமேண ப்ரசலன்னுபேயிவான்
அவந்த1தேந்தீவர ஸுந்தரச்சவிம் |
அம்போ4ஜனாப4ம் ஸ பு4ஜங்க3 ஷாயினம்
ஸ்ரீவல்லப4ம் ஸ்ரீமத3னந்த3 ஸத்புரே || 5-36

பிறகு ஸ்ரீமதாசார்யர், திருவனந்தபுரத்தில் இருந்த பல தீர்த்தங்களில் குளித்து, கன்யாகுமரிக்குச் சென்று, அங்கும் குளித்து பின் தனுஷ்கோடிக்குச் சென்றார்.

ஷ்ருங்கா3ர ஸிந்து4ம் ஸ பு4ஜங்க3 ஷாயினம்
ஸ்ரீரங்க3வாஸம் க்ருதமங்க3லம் ஸதாம் |
அமந்த தீ4ர்தே3வம வந்ததாSSக3த:
கவேர கன்யாஹிம வாயு ஸேவிதம் ||5-47

பிறகு ஸ்ரீரங்கத்திற்கு வந்த ஸ்ரீமதாசார்யர், அங்கு பவித்ரமான காவேரி நதிக்கரையில் வீற்றிருக்கும், மங்களங்களை அருள்பவனான ரங்கனாதனை வணங்கினார்.

மத்வ விஜயத்தின் ஐந்தாம் சர்க்கம் இத்துடன் முடிந்தது. அடுத்த ஸ்லோகத்திலிருந்து ஆறாம் சர்க்கத்தின் விஷயங்களை விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

**[ஸ்லோகம் 21]**
**ச2லதி3 ஸபெ4யலி பு3த4ஜனங்க3ளு**
**ஹலவு வித4 ப்ரஶ்னெக3ள மாட3லு**
**ஸுலப4வாது3த்தரக3ளித்தரு திளியப3யஸித3ரு |**
**ஹலவு வித4த3ர்த்த2க3ளவரு ஶ்ரீ**
**நிலய நாமத3 ஸாஸிரக3ளிகெ3**
**அலவபோ3த4ரு பேளலதி விஸ்மயதி3 நமிஸித3ரு ||21**

சலதி - வழியில்; ஸபெயலி - சபைகளில்; புதஜனங்களு - கற்றறிந்த மக்கள்; ஹலவு வித - பல வித; ப்ரஷ்னெகள மாடலு - கேள்விகளைக் கேட்க; ஸுலபவாத - மிகவும் சுலபமாக; உத்தரகளித்தரு - விடைகளை அளித்தார்; ஸ்ரீ நிலய - ஸ்ரீவிஷ்ணுவின்; நாமத ஸாஸிகளிகெ - சஹஸ்ரநாமத்திற்கு; ஹலவுவித - பலவித - அர்த்தகளவரு - அர்த்தங்களை அவர்கள்; திளியபயஸிதரு - கேட்க விரும்பினர்; அலவபோதரு - ஸ்ரீமதானந்ததீர்த்தர்; பேளலு - அதனை கூற; விஸ்மயதி - மனம் மயங்கி; நமிஸிதரு - வணங்கினர்.

ஸ்ரீமதாசார்யரின் பயணத்தில் நடந்த அற்புதங்களை தொடர்கிறார் ஸ்ரீவிஷ்ணு பிரஸன்ன தீர்த்தர்.

ஸ்ரீமதாசார்யர் தமது பயணத்தில், கற்றறிந்த மக்கள், பல வித கேள்விகளைக் கேட்க, அவற்றிற்கு மிகவும் சுலபமாக விடைகளை அளித்தார். ஸ்ரீவிஷ்ணுவின் சஹஸ்ர நாமத்திற்கு பலவித அர்த்தங்களை அவர்கள் கேட்க விரும்பினர். ஸ்ரீமதானந்ததீர்த்தர் அதனை கூற, அவர்கள் மனம் மயங்கி, அவரை விழுந்து வணங்கினர்.

மத்வ விஜயம் ஆறாம் சர்க்கம் இங்கு தொடங்குகிறது.

ஐதரேயமத கிஞ்சன் ஸூக்தம் ஸூசயன் ஸத$^{3}$ஸி தத்ர க$^{3}$ரிஷ்ட: |
ஸ்ரோதுமிச்ச$^{2}$தி ஸபா$^{4}$ ப$^{4}$க$^{3}$வத்ப்$^{4}$ய: ஸூக்த பா$^{4}$வமிதி தாவது$^{3}$வாச ||6-1

பயஸ்வினி நதிக்கரையில் ஒரு ஆலயத்தின் மண்டபத்தில் வீற்றிருந்த ஆசார்யரை நோக்கி ஒரு பண்டிதர், ஐதரேயத்தின் ஒரு சூக்தத்தை விளக்கவேண்டுமென்று கேட்டார். ஆசார்யர், மிகத் தெளிவாக, சரியான உச்சரிப்பில், அனைத்து லட்சணங்களுடன் அந்த வேத சூக்தத்தைக் கூறி, அதன் பொருளையும் கூறினார். ஆசார்யரின் சூக்த உச்சரிப்பு, தேவகுருவான பிருஹஸ்பத்யாசார்யரின் சூக்த உச்சரிப்பையும் விட சிறந்ததாக இருந்தது.

அங்கிருந்த பண்டிதர்கள் அதற்கு வேறொரு பொருளினைக் கூற, 'நீங்கள் கூறியதும் சரியே' என்றார்.

ஸ்யாத் ததே$^{2}$த்தமபி சம் ப$^{4}$விதார்த்த$^{3}$: த்ர்யர்த$^{3}$தாம் ஸ்ருதிஷு வித்த தஷார்த்த$^{3}$ம் |
பா$^{4}$ரதம் நனு ஷதார்த்த$^{2}$மபி ஸ்யாத்$^{3}$ வைஷ்$^{2}$ணவம் பத$^{3}$ சஹஸ்ர த$^{1}$யம் ஹி || (6-4)

வேதங்களுக்கு மூன்று அர்த்தங்கள், மகாபாரதத்திற்கு பத்து, விஷ்ணு சஹஸ்ரநாமத்தின் ஒவ்வொரு பெயருக்கும் நூறு அர்த்தங்கள் உள்ளன என்று சொல்லி, அதற்கு ஸ்காந்த புராணத்தின் உதாரணத்தைக் கூறினார். இதையே பாவப்ரகாசிகையில்,

த்ரயோர்த்தா: சர்வவேதேஷு தஷார்த்தா: சர்வபாரதீ |
விஷ்ணோ: சஹஸ்ரநாமாபி நிரந்தரஷதார்த்தகம் || இதி வசனாத் ||
(பா.ப்ர) -- என்று எழுதியிருக்கிறார்.

’ விஷ்வ’ சொல்லின் பொருள்

அப்போது அங்கிருந்த பண்டிதர்கள், விஷ்ணு சஹஸ்ரநாமத்தின் ஒவ்வொரு பெயருக்குமான நூறு பொருளை ஆசார்யரால் சொல்ல முடியாது, அவரை வென்றுவிடலாம் என்று எண்ணி, அதனை தங்களுக்குச் சொல்லுமாறு கேட்டனர். ஆசார்யர் ‘வர்ணயாமி’ (சொல்கிறேன்) என்று, அதை அவர்கள் அப்படியே திரும்பச் சொல்லவேண்டும் என்றார்.

ப்ரத்யய ப்ரக்ருதி சங்க$^{3}$ம ப$^{4}$ங்கீ$^{3}$ ஷ$^{3}$ப்த$^{4}$சாஸ்திர விஹிதாம் ப்ரதித$^{3}$ர்ஷ்ய |
சுத்$^{3}$த$^{4}$தீ$^{4}$: ஸ்ருதி ஷிர: ஷத சித்$^{3}$தா$^{4}$ன் அப்$^{4}$யதா$^{3}$த சபதி$^{3}$ விஷ்வ பதா$^{3}$ர்த்தா$^{2}$ன் || (6-7)

இலக்கணத்திற்கு ஒப்பி, வேத புராணங்களில் சொல்லியவாறு, ‘விஷ்வ’ என்னும் சொல்லிற்கு நூறு அர்த்தங்களை சொல்லத் துவங்கியதும் (சுமார் 50க்கும் மேற்பட்ட அர்த்தத்தை கூறியதும்), அங்கிருந்த பாரதம் முதலான கிரந்தங்களில் வல்லவர்களான பண்டிதர்கள், ஆசார்யர் கூறுவதை பின்பற்ற முடியாமல் தவித்தனர். அவரின் முக-கமலத்திலிருந்து பிரவாகமாக வந்த சொற்களைக் கேட்டு திக்பிரமை பிடித்து அமர்ந்தனர். அதனை திரும்பச் சொல்ல முடியாததை எண்ணி வருந்தினர். ‘ஆசார்ய மத்வர் சர்வக்ஞர்,

தேவதைகளைவிட சிறந்த திறன் படைத்தவர்' - 'தேவதாஸ்வசுலபா ப்ரதிபா தே மானுஷேஷு சபலேஷு கதா கா' | (6-10) - என்று ஆசார்யரை புகழ்ந்தனர். அவரிடம் மன்னிப்பு கேட்டவாறு விழுந்து வணங்கினர்.

மத்வ விஜய ஆறாம் சர்க்கத்தைப் பற்றியும், இந்த சர்க்கத்தைப் படிப்பதால் வரும் பலன்களைப் பற்றியும் மாதனூரு ஸ்ரீவிஷ்ணு தீர்த்தர், தமது ஸ்ரீமத் ஸுமத்வவிஜய ப்ரமேய பல மாலிகா கிருதியில் இவ்வாறு கூறுகிறார்.

தத்ர தத்ர விசித்ராணி சரித்ராணி ப்ரத3ர்ஷயன் |
சரன் க்ஷேத்ரேஷு ஸர்வேஷு ஹிமவந்தம் த3த3ர்ஷ ஸ: ||7||

நாடு முழுவதும் திக்விஜயம் செய்தவாறு, அனேக சபைகளில் தம் அற்புத மகிமைகளைக் காட்டினார் ஸ்ரீமதாசார்யர். ஒரு சபையில் ஸ்ரீ விஷ்ணுசஹஸ்ர நாமத்தில் வரும், 'விஷ்வ' என்னும் சொல்லிற்கு 100 அர்த்தங்கள் உள்ளன என்று சொல்லி, தம் சர்வக்ஞத்வத்தை வெளிப்படுத்தினார். அடுத்து இன்னொரு சந்தர்ப்பத்தில், தம்முடைய முக்காலத்தையும் அறியும் ஞானத்தை வெளிப்படுத்தினார். இப்படியாக, சஞ்சாரத்தில், பதரி க்ஷேத்திரத்திற்கு வந்து, தாம் இயற்றிய கீதா பாஷ்யத்தை ஸ்ரீமன் நாராயணனுக்கு காணிக்கையாக கொடுத்தார்.

விசார: ஸாத4னௌக4ஸ்ய ஜ்ஞேயரூப ப்ரபோ3த4னம் |
உபாஸாயாமதிஷயோ தா3ர்ட்4யம் ப4க்திர்ஹரௌ கு3ரௌ ||19||

ஆறாம் சர்க்கம் படிப்பதால் வரும் பலன் : சாதனைகளைப் பற்றிய ஞானம் (அறிவு)

ஸ்ரீமதாசார்யரின் மகிமைகளை அடுத்த ஸ்லோகத்திலும் தொடர்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

**[ஸ்லோகம் 22]**
**ஒந்து3 தி3ன ஸத3ஸினபா1லா**
**எந்தி3ருவ பத3த3ர்த்த2வனு ப3லு**
**ஸுந்த3ராங்கி3யளெந்து3 நுடி3த3ரு நம்பி3கெயு ப3ரலு |**
**முந்தெ3 ப3ரலிஹ விப்ரவரனனு**

**ஸந்தி4ஸூத கேளிரித3ரர்த்த2வ**
**நெந்து3 ஸர்வக்3ஞதெய ஜனரொளு ப்ரகடபடி3ஸித3ரு ||22**

ஒந்து தின - ஒரு நாள்; ஸதஸின - சபையினர் கேட்ட; அபாலா எந்திருவ பததர்த்தவனு - அபாலா என்னும் சொல்லின் அர்த்தத்தை; பலு ஸுந்தராங்கி - இள வயதுப் பெண்; எந்து நுடிதரு - என்று கூறினார். நம்பிகெயு பரலு - மேலும் நம்பிக்கை இல்லையெனில்; முந்தெ பரலிஹ - இன்னும் சிறிது நேரத்தில் வரவிருக்கும்; விப்ரவரனனு - ஒரு பிராமணனை; ஸந்திஸுத கேளிரிதரர்த்தவ - சந்தித்து அவரிடம் இதன் அர்த்தத்தை கேளுங்கள்; எந்து - என்று; ஸர்வக்ஞதெய - தன் சர்வக்ஞத்வத்தை; ஜனரொளு - மக்களிடம்; ப்ரகடபடிஸிதரு - வெளிப்படுத்தினார்.

ஸ்ரீமதாசார்யரின் மகிமைகளை இந்த ஸ்லோகத்திலும் தொடர்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

ஒரு நாள், சபையினர் கேட்ட அபாலா என்னும் சொல்லின் அர்த்தத்தை, இள வயதுப் பெண் என்று கூறினார் ஸ்ரீமதாசார்யர். என் மேல் நம்பிக்கை இல்லையெனில், இன்னும் சிறிது நேரத்தில் இங்கு வரவிருக்கும் ஒரு பிராமணனிடம், இதன் அர்த்தத்தை கேளுங்கள் என்று, தன் சர்வக்ஞத்வத்தை மக்களிடம் வெளிப்படுத்தினார்.

மத்வ விஜயத்தில் - அபாலா சொல்லின் பொருளை விளக்கும் சந்தர்ப்பம் - 6-18 முதல் 6-21 வரையிலான ஸ்லோகங்களில் உள்ளது.

ஷ்வித்ரிணீப4வதி தத் பத3 வாச்யே
த்யாக்3ரஹேண வத3தோऽவிது3ஷோ2த்ர |
கஷ்சிதே3ஷ்யதி விபஷ்சிதிஹைனம்
ப்ருச்சதேத்யய மக3ச்சத3தோ2த்தவா || 6-18

யத்3 யதே3வ ஸபதி3 ப்ரக்ருதம் ஸ்யாத்
தத் ததேஷ2 யத3வேத3கி2லம் ச |
ஸர்வதா3 ஸத3ஸி ஸர்வ பு3தா4னாம்
ஸர்வவித் யதிரிதி ப்ரதி2தோऽபூ4த் || 6-21

இன்னொரு சபையில் வேறொரு சூக்தார்த்தத்தை விளக்கும் சந்தர்ப்பத்தில் ஆசார்யர், ‘அபாலா’ என்னும் சொல்லிற்கு ‘இள வயதுப்பெண்’ என்று பொருள் கூறினார். ஆனால் அங்கிருந்த பண்டிதர்கள், அபாலா என்றால் குஷ்டரோகி என்று சொல்ல, ஆசார்யர் - இங்கு இப்போது ஒரு புருஷர் வருவார். அவரிடம் இதற்கான விளக்கத்தைக் கேளுங்கள் - என்றார். அதே போல் அப்போது அங்கு வந்தவரிடம் கேட்க - அவரும் அதையே (இள வயதுப்பெண்) சரியான பதிலாகக் கூறினார். ’சர்வவித் யதிரிதி ப்ரதிதோபூத்’ (6-21) - ஸ்ரீமதாசார்யர் சர்வக்ஞர், வேதங்களை அறிந்தவர், முக்காலும் உணர்ந்தவர்’ என்று அந்த தேசத்து பண்டிதர்கள் அனைவரும் ஆசார்யரை கொண்டாடினர். ஆசார்யரின் கீர்த்தி முழு நிலவைப் போல் பிரகாசித்தது. உலகத்தின் ஒரே ஒரு சர்வக்ஞாசாரியர் என்று பெயர் பெற்றார்.

ஸ்ரீமதாசார்யரின் மகிமைகளை அடுத்த ஸ்லோகத்திலும் தொடர்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் **23]**
**ஸதிய ஸபெ$^4$யலி ஸீரெ ஸெளெத$^3$தி**
**க$^2$தியபடி$^3$ஸித$^3$ து$^3$ருள த$^3$னுஜர**
**ததிய ஸவருவ கோ$^4$ரதீ$^3$க்ஷெய ப$^3$ந்த$^4$னத$^3$ தெரதி$^3$ |**
**ஶ்ருதிததியு மாயாக்$^2$யவாத$^3$த$^3$**
**சிதெயலிருதிரெ ஸுஜனஷரணரு**
**தி$^3$திஸுதர நாஷனத$^3$ கங்கணகட்டிரு க்ஷணதி$^3$ ||23**

ஸபெயலி - சபையில்; ஸதிய ஸீரெ ஸெளெது - மனைவியின் புடவையை இழுத்து; அதி கதியபடிஸித - மிகவும் அவமானப்படுத்திய; துருள தனுஜர ததிய - கெட்டவர்களான அசுரர்களின் கூட்டத்தை; ஸவருவ - அவர்களை அழிப்பேன் என்று செய்த; கோரதீக்ஷ்ணெய - சபதத்தைப் போல; மாயாக்யவாதத - தவறான மாயாவாத பாஷ்யங்களால்; ஶ்ருதிததிய - வேத உலகமானது; சிதெயலிருதிரெ - அழியும் நிலையில் இருப்பதால்; ஸுஜன ஷரணரு - சஜ்ஜனர்களால் வணங்கப்படும் ஸ்ரீமதாசார்யர்; திதிஸுதர நாஷனத - (அத்தகைய) அசுரர்களை அழிக்கப்போவதாக (கண்டனம் செய்வதாக); க்ஷணதி - உடனே; கங்கணகட்டிதரு - சபதம் செய்தார்.

ஶ்ரீமதாசார்யரின் மகிமைகளை இந்த ஸ்லோகத்திலும் தொடர்கிறார் ஶ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

முன்னர் சபையில் தனது மனைவியான திரௌபதியின் புடவையை இழுத்து, மிகவும் அவமானப்படுத்திய, கெட்டவர்களான அசுரர்களின் கூட்டத்தை அழிப்பேன் என்று சபதம் செய்ததைப் போல, தவறான மாயாவாத பாஷ்யங்களால் வேத உலகமானது அழியும் நிலையில் இருப்பதால், சஜ்ஜனர்களால் வணங்கப்படும் ஶ்ரீமதாசார்யர், அத்தகைய அசுரர்களை கண்டனம் செய்வதாக இப்போது சபதம் செய்தார்.

மத்வ விஜயத்தில், ஶ்ரீமதாசார்யரின் இந்த மகிமை 6-24 முதல் 6-31 ஸ்லோகங்கள் வரை விளக்கப்பட்டுள்ளது. இந்த எட்டு ஸ்லோகங்களையும் ஒன்றாக சேர்த்து படிக்க வேண்டும். இவை இரண்டு அர்த்தங்களை கொடுப்பதாக உள்ளன. ஒன்று. வேதங்களையும் இன்னொரு அர்த்தம் திரௌபதியையும் குறிக்கிறது.

பூ$^{4}$ஸுர ப்ரவர பு$^{3}$த்vதி$^{4}$ ஸம்ருத்$^{3}$தி$^{4}$
வ்யக்த யுக்த வபுஷ$^{2}$ம் ருசிராங்கீ$^{3}$ம் |
ஸூத்ர தீ$^{3}$ப்த மணி மாலிகயாsலம்
பூ$^{4}$ஷி$^{2}$தாம் பு$^{4}$வன பூ$^{4}$ஷண பூ$^{4}$ஷண பூ$^{4}$தாம் ||6-24

வேதி$^{3}$ஜாமிவ புர ப$^{4}$ரதாக்$^{3}$ர்ய:
ஸ ஸ்வயம் ஸ்ருதி ததிம் க$^{2}$லு த்$^{3}$ருஷ்$^{2}$டா |
புஷ்ட புத்$^{3}$தி$^{4}$ரகரோத் கருணாப்$^{4}$தி$^{3}$:
து$^{3}$ஷ்ட$^{2}$ பக்ஷ த$^{3}$மனஸ்தி$^{2}$ர ஸந்தா$^{2}$ம் ||6-31

திரௌபதிதேவிக்கு துர்யோதனனின் சபையில் துச்சாததனால் ஏற்பட்ட அவமானத்திற்கு அவர்கள் அனைவரையும் தான் அழிப்பேன் என்று பீமசேனர் சபதம் செய்ததைப்போல, ஆசார்ய மத்வர், மிகவும் பவித்ரமான வேத உலகத்திற்கு, தவறான பாஷ்யங்களால் ஏற்படும் அநியாய, அபசாரங்களைக் கண்டு, அவற்றை இயற்றிய துஷ்ட பரம்பரையை தாம் கண்டனம் செய்யப்போவதாக சபதம் செய்தார்.

வேதசமூகத்தைக் காப்பாற்றும் பொறுப்பை ஏற்றவராக, பிரம்மசூத்ர பாஷ்யத்தை இயற்ற நிச்சயித்து, சூத்ரகாரரின் அனுமதியைப் பெறவேண்டி, பத்ரிக்குச் செல்ல தீர்மானித்தார். நீண்ட பயணத்தை

மேற்கொள்பவர்கள், உறவினர்களுக்குப் பயன்படும்படி செல்வங்களை விட்டுச் செல்வதுபோல, ஆசார்யரும், என்றும் நாசமாகாத, உத்தமமான, இஷ்டார்த்தங்களை கொடுக்கக்கூடிய, ஸ்ரீபகவத்கீதா பாஷ்யத்தை இயற்றி அச்யுதப்ரேக்ஷருக்கும், உடனிருந்த மூத்த யதிகளுக்கும் கொடுத்தார். 'ஹரிகீதா பாஷ்யமேவ விரசய்ய ததாதாத்' | (6-32). துஷ்ட சித்தாந்தங்களை நிராகரிக்க, பிரம்மசூத்ரத்திற்கு சரியான, வேதவியாசருக்கு பிடித்தமான, பாஷ்யத்தை இயற்றத் தீர்மானித்தார்.

ஸ்ரீமதாசார்யரின் பதரிகாசிரம பயணத்தை அடுத்த ஸ்லோகத்தில் விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் 24]
**ஹிமகி³ரிய தலத³ல்லி நெலெஸிஹ**
**கமலெரமணன கண்டு³ வந்தி³ஸி**
**விமலமதிக³ளு கீ³தெக³வர ப்⁴யாவனர்ப்பிஸலு |**
**ஹிமனிலய ஶ்ருங்கத³லி ப³தரீ**
**த்³ரும பு³ட³தி³ ராஜிஸுவ வ்யாஸா**
**ஶ்ரமவ ஸேரலு தெரளித³ரு ஹரியாக்³ஞெயனுஸரிஸி || 24**

ஹிமகிரிய தலதல்லி - இமாலயத்தில், ஹிமவத் பர்வதத்தில்; நெலெஸிஹ - நிலைத்திருக்கும்; கமலெரமணன - வேதவ்யாசரை; கண்டு வந்திஸி - கண்டு வணங்கி; விமலமதிகளு - பவித்ரமான மதியைக் கொண்டவரான (ஆனந்ததீர்த்தர்) கீதெகெ - பகவத் கீதைக்கு; அவர ப்யாவனர்ப்பிஸலு - அவருடைய பாஷ்யத்தை சமர்ப்பிக்க; ஹிமனிலய ஷ்ருங்கதலி - இமாலய மலையில்; பதரித்ரும புடதி - பதரி மரத்தின் அடியில்; ராஜிஸுவ - வீற்றிறுக்கும்; வ்யாஸாஸ்ரமவ ஸேரலு - வ்யாஸ ஆசிரமத்தை சென்று அடைய; ஹரியாக்ஞெயனுஸரிஸி - ஸ்ரீஹரியின் ஆணைக்கேற்ப; தெரளிதரு - கிளம்பினார்.

ஸ்ரீமதாசார்யரின் பதரிகாசிரம பயணத்தை இந்த ஸ்லோகத்தில் விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

இமாலயத்தில் நிலைத்திருக்கும் வேதவ்யாஸரை கண்டு வணங்கி, பவித்ரமான மதியைக் கொண்டவரான ஸ்ரீமதாசார்யர், பகவத் கீதைக்கு

அவருடைய பாஷ்யத்தை சமர்ப்பிக்க, இமாலய மலையில் பதரி மரத்தடியில் வீற்றிருக்கும் வ்யாஸ ஆசிரமத்தை சென்று அடைய, ஸ்ரீஹரியின் ஆணைக்கேற்ப கிளம்பினார்.

ஸ்ரீமதாசார்யரின் இந்த பயணம், மத்வ விஜயத்தில் 6-34 முதல் 6-37 வரையிலான ஸ்லோகங்களில் வர்ணிக்கப்பட்டுள்ளது.

ஸ்ரீஹரியின் ஆணையை நிறைவேற்றும் பொருட்டு, தான் க்ஷேத்திரப் பயணம் மேற்கொள்வதாக, ஆசார்யர் தம் குருவிடம் (அச்யுதப்ரேக்ஷருக்கு, புருஷோத்தம தீர்த்தர் என்னும் பெயர் இருந்தது என்று கல்வெட்டுகளிலிருந்து தெரியவருகிறது) அனுமதியைப் பெற்றார். ஸ்ரீஹரி எப்போதும் பூர்ணப்ரக்ஞரை அருளட்டும் என்று அச்யுதப்ரேக்ஷர் வேண்டினார். பின், ஆசார்யர் தம் சிஷ்யர்களுடன் வடநாட்டுப் பயணம் மேற்கொண்டார். பயணத்தில், தவறான உரைகளைக் கண்டித்தவாறு, வேத சாஸ்திரங்களில் உண்மையான பொருளை உபதேசித்தார்.

பு3த்3தி4ஷுத்3தி4 கரகோ3 நிகராட்4யம்
தீர்த்த2 சாதமுப4யம் ச த4ரண்யாம் |
ஆத்ம மஜ்ஜனத ஏவ நிகாமம்
பர்யஷோத4யத3 மந்த3மனீஷ2: || (6-35)

தத்ர தத்ர ஸ ஜக3த்ரய சித்ரம் கர்ம ஷர்ம த3மனுஸ்ம்ருதி மாத்ராத் |
ஸஞ்சரன் வித3த4தா3ப நராணாம் கோ3சரம் ப3தரிகாஸ்ரம பார்ஷ்வம் ||6-37

ஸ்வயம் பவித்ரரான ஆசார்யர், கங்காதி நதிகளில் குளித்து அவற்றையும் பவித்ரமாக்கினார். ஹரிபாதோதகமான கங்கையை தலையில் தெளித்துக்கொண்டு, தமது சிஷ்யர்களுடன் கங்கையை கடந்து பதரிகாஸ்ரமத்தை அடைந்தார்.

ஸ்ரீஸ்ரீபாதராஜரின் மத்வ நாமாவில் ஸ்ரீமதாசார்யரின் இந்த பயணம், ஸ்லோகம் #25 இவ்வாறு சொல்லப்பட்டுள்ளது.

ஆர்பகதவனைதி பதரியலி மத்வமுனி
நிர்பயதி சகல சாஸ்திரவ படிசித |25

வட இந்தியப் பயணத்தில், தனது தேகம் மற்றும் கூர்மையான புத்தியினால் கங்காதி தீர்த்தங்களை மற்றும் சாஸ்திரங்கள் என்னும் தீர்த்தங்களை சுத்தம் செய்தவாறு பதரிக்ஷேத்திரத்தை சென்று அடைந்தார்.

இத்துடன் மத்வவிஜயம் ஆறாம் சர்க்கம் முடிவடைந்தது. அடுத்து ஏழாம் சர்க்கத்தில் வரும், ஸ்ரீமதாசார்யர் ஸ்ரீவேதவ்யாஸரை தரிசனம் செய்த படலத்தை, அடுத்த ஸ்லோகத்தில் விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் 25]
**துஹிமஹிதுதி$^{3}$யல்லி ராஜிஸூ**
**திஹ ப$^{3}$த$^{3}$ரிஷண்டக$^{3}$ள மத்$^{4}$யதி$^{3}$**
**அஹிபதிய போ$^{4}$க$^{3}$த$^{3}$லி ரமிப ஸ்ரீபதிய தெரதி$^{3}$ |**
**ப$^{3}$ஹுள தேஜவ நோடி$^{3}$த$^{3}$ரு பூ$^{4}$**
**ஸூரர ஸமீபகெ ப$^{3}$ரலு தாபஸ**
**நிவஹ விஸ்மயதி$^{3}$ந்த$^{3}$ நோடி$^{3}$த$^{3}$ராவரிவரெந்து$^{3}$ ||25**

துஹிமஹி - இமாலயத்தின்; துதியல்லி - அடியில்; ராஜிஸூதிஹ - வளர்ந்திருக்கும்; பதரிஷண்டகள மத்யதி - பதரி மரங்களின் கூட்டங்களின் நடுவில்; அஹிபதிய - சேஷதேவரின்; போகதலி ரமிப - சேவையில் வீற்றிருக்கும்; ஸ்ரீபதிய தெரதி - ஸ்ரீபதியான வேதவ்யாஸரிடம் (வந்தார்); பஹுள தேஜவ நோடிதரு - அபாரமான தேஜஸ்ஸினை கண்டனர்; பூ ஸூரர ஸமீபகெ பரலு - முனிவர்களின் அருகில் வர; தாபஸ நிவஹ - அந்த ஞானிகளின் குழு; விஸ்மயதிந்த - மனம் மயங்கியவாறு; ஆவரிவரெந்து - இவர் யாராக இருக்கும் என்று; நோடிதரு - பார்த்தனர்.

மத்வ விஜயம் ஏழாம் சர்க்கத்தில் வரும் ஸ்ரீமதாசார்யர் ஸ்ரீவேதவ்யாஸரை தரிசனம் செய்த படலத்தை, இந்த ஸ்லோகத்தில் விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

இமாலயத்தின் அடியில், வளர்ந்திருக்கும் பதரி மரங்களின் கூட்டங்களின் நடுவில், சேஷதேவரின் சேவையில் வீற்றிருக்கும் ஸ்ரீபதியான வேதவியாஸரிடம் வந்தார் ஸ்ரீமதாசார்யர். அங்கிருந்த

முனிவர்கள், இவருடைய அபாரமான தேஜஸ்ஸினைக் கண்டு, மயம் மயங்கியவாறு, இவர் யாராக இருக்கும் என்று பார்த்தனர்.

அத2 ஹைமவதே தடாந்தரெ ப3த3ரி ஷண்ட விசேஷ மண்டி3தம் |
பரமாஸ்ரமமாஸ்ரயம் ஸ்ரிய: ஸகலக்ஞ: ஸ த3த3ர்ஷ விஸ்ருதம் |7-1

இமாலயத்தின் அனந்தமடத்திலிருந்து இன்னும் முன்னேறினார் பூர்ணப்ரக்ஞர். பதரி மரங்களினால் சூழப்பட்ட வேதவியாசரின் ஆசிரமத்தைக் கண்டார். இதுவே உத்தர-பத்ரி. இந்த ஆசிரமம் பற்பல மரங்களினால் சூழப்பட்டு, பசு-பறவைகளினால் கூடி, வேதங்களைப் படித்த அறிஞர்களின், ரிஷிகளின் இருப்பிடமாக இருந்தது. எந்தவொரு குறைகளும் இல்லாத இந்த தபோபூமி, எப்போதும் ஸ்ரீஹரியிடம் வேண்டியவாறு இருக்கும் பரமஹம்ஸர்களால், மகரிஷிகளால் தன் அழகினைப் பெற்றது. சுக, ஹம்ஸ முதலான பறவைகள் இங்கு வசித்திருந்தன. பொறாமை, கர்வம், காமம், கோபம் முதலான தோஷங்கள் இல்லாத ஞானிகள் இருந்து, ’வைகுண்டமிவாச்யுதாலயம்’ (7-4), வைகுண்டத்திற்கு ஈடான ஸ்ரீஹரி வசிக்கும் பரந்தாம என்றே அழைக்கப்பட்டது.

கனகாதுல தால சன்னிப4: கமலாக்ஷோ விமலேந்து3 சன்முக2: |
க3ஜராஜ க3திர்மஹாபு4ஜ: ப்ரதியான் கோ1யமபூர்வ புருஷ: || (7-6)

கஜரானைப் போல கம்பீர நடை. தங்கத்தினாலான பனை மரம் போன்ற உயரம், தாமரைக் கண்கள், முழு நிலவின் ஒளியைப் போன்ற முகம், ஆஜானுபாஹு உருவம், பயம் சோர்வு இல்லாதவர், அனைத்து லட்சணங்களையும் கொண்டவர், தண்ட கமண்டலத்தைப் பிடித்தவர், காஷாய வஸ்திரம் தரித்தவர் என வரும் இவர் யாராக இருக்கக்கூடும்? என்று அங்கிருந்த முனிவர்கள் வியந்தனர்.

மத்வ விஜய ஏழாம் சர்க்கத்தைப் பற்றியும், இந்த சர்க்கத்தைப் படிப்பதால் வரும் பலன்களைப் பற்றியும் மாதனூரு ஸ்ரீவிஷ்ணு தீர்த்தர், தமது ஸ்ரீமத் ஸுமத்வவிஜய ப்ரமேய பல மாலிகா கிருதியில் இவ்வாறு கூறுகிறார்.

மனஸா மானயன் முக்2யகு3ரும் வ்யாஸம் ஹ்ருத3ம்ப3ரே |
அபஷ்யஸ்சக்ஷுஷாऽப்யத்ர ஸ்தி2தம் முனிக3ணைர் வ்ருதம் ||8||

பெரிய பதரிக்குச் சென்று, அங்கு அனேக முனிவர்களின் நடுவில் அமர்ந்திருந்த, முக்கிய குருகளான வேதவியாசரைக் கண்டு, அந்த வியாசரின் அனேக குணரூபங்களை தம் மனதில் சிந்தித்தார்.

விசார: ஸாத[4]னௌக[4]ஸ்ய ஞேயரூப ப்ரபோ[3]த[4]னம் |
உபாஸாயாமதிஷயோ தா[3]ர்ட்[4]யம் ப[4]க்திர்ஹரௌ கு[3]ரௌ ||19||

ஏழாம் சர்க்கம் படிப்பதால் வரும் பலன் : பிம்பரூபியின் ஞானம்

ஸ்ரீமதாசார்யர் தரிசிக்கும் ஸ்ரீவேதவ்யாஸரின் தோற்ற வர்ணனையை அடுத்த ஸ்லோகத்தில் விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

**[ஸ்லோகம் 26]**
**தாபஸோத்தம பா[3]தராயண**
**ரூபவனுபமசித் ஸுக[2]மாயா**
**பாத[3]மௌளிய நோடி[3] பரவஶராகி[3] மெய்மரெதரு |**
**தாபஸர மத்[4]யத[3]ல்லி பொளெயுவ**
**ரூபவிது[3] மானஸதி[3] நெலெஸிஹ**
**ஸ்ரீபதியெந்த[3]ரிது விஸ்மராத[3]ராக்ஷணதி[3] ||26**

பாதராயண - ஸ்ரீவேதவ்யாசரின்; அனுபம - ஒப்பற்ற; சித்ஸுக - சித்ஸுக; ரூபவனு - ரூபத்தை; தாபஸோத்தம - ஞானிகளில் சிறந்தவரான ஸ்ரீமதாசார்யர்; ஆபாதமௌளிய நோடி - பாதங்களிலிருந்து தலை வரை பார்த்து; பரவஷராகி - பரவசம் அடைந்து; மெய்மரெதரு - மெய்மறந்தார்; தாபஸர மத்யதல்லி - ஞானிகளின் நடுவில் பொளெயுவ ரூபவிது - ஒளிரும் ரூபமான இவர்; மானஸதி நெலெஸிஹ - நம் மனதில் நிலைத்திருக்கும்; ஸ்ரீபதியெந்தரிது - ஸ்ரீபதியே என்று அறிந்து; ஆக்ஷணதி - அந்த நொடியில்; விஸ்மிதராதரு - மெய் மறந்தார்.

ஸ்ரீமதாசார்யர் தரிசிக்கும் ஸ்ரீவேதவ்யாஸரின் தோற்றத்தின் வர்ணனையை இந்த ஸ்லோகத்தில் விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

மத்வ விஜய 7-16ம் ஸ்லோகத்தில் ஸ்ரீமதாசார்யர், ஸ்ரீவேதவ்யாஸரை சந்திக்கும் இந்த விஷயம் வருகிறது.

முனி மண்ட3ல மத்ய வர்த்தின் த்ரிஜக3ன்மண்ட3ல மண்ட3னாயிதம் |
இஹ ஸத்யவதீ ஸுதம் ஹரிம் பதிபூர்ண ப்ரமதி: ஸமைக்ஷ ||7-16

நிஜ ஹ்ருத் கமலேதி நிர்மலே ஸததம் ஸாது4 நிஷாமயன்னபி |
அவலோக்ய புன: புனர்னவம் தமஸௌ விஸ்மித இத்யசிந்தயத் ||7-17

முனிவர்களுக்கு நடுவில், மூன்று உலகத்திற்கும் அலங்காரரான சத்யவதியின் மகனான, சிறந்த இருக்கையில் அமர்ந்திருந்த வேதவியாசரை, பூர்ணப்ரமதியான ஆசார்யர் கண்டார். எப்போதும் இதய-கமலத்தில் இறைவனைக் காணும் ஆசார்யர், வேதவியாசரை ஒரு புத்தம்புதிய மனிதரைக் காண்பதுபோல கண்டு வியப்படைந்தார்.

ஸ்ரீவேதவ்யாஸரின் அகணித குணங்களை மத்வவிஜயகாரர், 7-24 ஸ்லோகத்தின் வரை மிகவும் அற்புதமாக விளக்கியுள்ளார்.

அகணய்ய குணை: சுபூரிதம் பரிபூர்ணகணிதாத்ம சத்குணை: | (7-24)

பரிபூர்ண-அனந்த-மங்களகர நற்குணங்களால் நிரம்பிய ஞானானந்த ஸ்வரூபனை, வேதவியாசரின் பரம மங்களகரமான அழகான உடலைக் கண்டு தன்யனானேன் - என்று நினைத்தார் மத்வர்.

அடுத்த ஸ்லோகத்தில், ஸ்ரீமத்வரின் மற்றும் ஸ்ரீவேதவ்யாஸரின் சந்திப்பினை விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் **27]**
**ப4குதியலி பா3கி3த3ரு ஶிரவனு**
**ஸுக்ருத ஶாலிக3ளாக்ஷணதி3 நகு3**
**முக2தி3ந்த3 ப3ந்தெ3த்தித3ரு வ்யாஸரு ப்ரதம ப4குதரனு**
**ஶுகபிதரு ப4குதாக்3ரணிக3ளீ**
**ஸுக2கராலிங்க3னத3லிருதிரெ**
**ப்ரகடவாயிது ரவிஸுதெய ஸுரநதி3ய ஸங்க3மவு ||27**

ஸுக்ருதஷாலிகளு - தன்யன் ஆன ஸ்ரீமதாசார்யர்; ஆக்ஷணதி - (ஸ்ரீவேதவ்யாஸரை கண்ட) அந்த நொடியில்; பகுதியலி - மிகவும் பக்தியுடன்; ஷிரவனு பாகிதரு - சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினார்; வ்யாஸரு - ஸ்ரீவேதவ்யாஸர்; நகுமுகதிந்த - புன்னகையுடன் கூடிய முகத்தினால்; ப்ரதம பகுதரனு - தன் முதல்

(உத்தம) பக்தரை; வந்தெத்திதரு - வந்து எழுப்பினார்; ஷுகபிதரு - ஸுக ரிஷியின் தந்தையான (வேதவ்யாஸர்); பகுதராக்ரணிகள - பக்தர்களில் சிறந்தவரின் (ஸ்ரீமத்வர்); ஈ ஸுககராலிங்கனலிருதிரெ - இப்படியான சுகமான அரவணைப்பில் இருப்பது; ரவிஸுதெய - சூரியனின் மகளான யமுனை; ஸுரநதிய - கங்கையின்; ஸங்கமவு - சங்கமம்; ப்ரகடவாயிது - போல இருந்தது.

ஸ்ரீமத்வரின் மற்றும் ஸ்ரீவேதவ்யாஸரின் சந்திப்பினை இந்த ஸ்லோகத்தில் விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

தன்யர் ஆன ஸ்ரீமதாசார்யர், ஸ்ரீவேதவ்யாஸரைக் கண்ட அந்த நொடியில், மிகவும் பக்தியுடன், சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினார். ஸ்ரீவேதவ்யாஸர் புன்னகையுடன் கூடிய முகத்தினால், தன் முதல் (உத்தம) பக்தரை வந்து எழுப்பினார். ஸுக ரிஷியின் தந்தையான வேதவ்யாஸர் மற்றும் பக்தர்களில் சிறந்தவரான ஸ்ரீமத்வர், இப்படியான சுகமான அரவணைப்பில் இருப்பது, சூரியனின் மகளான யமுனை மற்றும் ஸுரநதியான கங்கையின் சங்கமத்தைப் போல இருந்தது.

வேதவ்யாஸ-மத்வரின் சந்திப்பு, மத்வவிஜயத்தில் 7-49 ஸ்லோகத்திலிருந்து வர்ணிக்கப்பட்டுள்ளது.

வேதவேத்யரான, தியானத்தால் அடைபவரான வேதவியாசரை, ஸ்ரீமதாசார்யர் நெருங்கினார். குருபக்தியுடன், கலங்கிய கண்களுடன், பக்தி பரவசத்துடன், கைகளை கூப்பியவாறு ஸ்தோத்திரம் செய்தார். ‘வினயாபரணேன பூஷித: ... ப்ரணநாம பாக்யவான் ’ (7-50) - புண்யபுருஷர், பரமபாவன சரிதரான மத்வர், சிறந்தவரான வியாசரின் பாதங்களில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினார்.

நற்குணங்களைப் பெற்றவரான மத்வரை ‘கரயோர்யுகளேன வல்குனா தமுதஸ்தாபயதாஷு பாதினா’ (7-51) வேதவியாசர் உடனடியாக, மென்மையான தமது கைகளினால் தொட்டு எழுப்பினார். அதே கைகளினால் அவரை இறுகத் தழுவினார். வேதங்களின் தலைவரான வியாசரின், தசபிரமதிகளான மத்வரின் இந்த சந்திப்பு அற்புதக் காட்சியாக இருந்தது.

யமுனாம்யுத[3]வாஸ ஊர்ஜிதோ யதி ஜாம்பூ[3]னத[3] வாரி ஸம்வ்ரஜேத் |
கனக த்யுதி மத்[4]வ ஸங்க[3]வான் உபமீயேத ஸ தேன நீல பா[4]: ||7-53

நீல வண்ணம் கொண்ட ஸ்ரீவேதவ்யாஸரும்; தங்கமயமான ஸ்ரீமத்வரும் கட்டித் தழுவிக் கொண்ட காட்சி, நீல யமுனையும், தங்க கங்கையும் சேர்ந்து பாய்ந்ததைப் போல இருந்தது.

இந்த காட்சியை மேலும் அடுத்த ஸ்லோகத்திலும் தொடர்ந்து விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

**[ஸ்லோகம் 28]**
**தனய ஶுகனிகு[3] தொ[3]ரெயதி[3]ஹ லால**
**னெய படெ[3]த[3] மஹாத்மரனு அதி**
**வினயதி[3]ந்தா[3]த[3]ரிஸித[3]ரு முனிஜனரு விஸ்மயதி[3] |**
**வனஜஸம்ப[4]வ தனகெ[3] ப்ரியதம**
**ஜனகெ[1] ஹரிஸத[3]னத[3]லிருவ பரி**
**முனிவரரு யதிவரரு பெ[3]ளகித[3]ராஶ்ரமவன்னெல்ல || 28**

தனய ஷுகனிகு - மகனான ஸுகருக்கும்; தொரெயதிஹ - கிடைத்திராத; லாலனெய படெத - அன்பினைப் பெற்ற; மஹாத்மரனு - ஸ்ரீமதாசார்யரை; முனிஜனரு - அங்கிருந்த முனிவர்கள்; விஸ்மயதி - மெய்மறந்து; அதி வினயதிந்தாதரிஸிதரு - மிகுந்த மரியாதையுடன் கௌரவித்தனர்; முனிவரரு - ஸ்ரீவேதவ்யாஸர்; யதிவரர் - ஸ்ரீமதாசார்யர்; பௌகிதாஸ்ரமவன்னெல்ல - ஆசிரமத்தில் பரமமங்கள ஸ்வரூபராக இருந்து, ஒளிர்வித்தனர்; வனஜஸம்பவ - பகவந்தன், தனகெ ப்ரியதம ஜனகெ - தனக்கு பிடித்தமான மக்களுக்கு; ஹரிஸதனதலிருவ பரி - மோட்சத்தையே கொடுப்பதாக இருந்தது (இந்தக் காட்சி).

ஸ்ரீவேதவ்யாஸரின் மற்றும் ஸ்ரீமத்வரின் ஆலிங்கனக் காட்சியை தொடர்ந்து விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

மகனான ஸுகருக்கும் கிடைத்திராத அன்பினைப் பெற்ற ஸ்ரீமதாசார்யரை, அங்கிருந்த முனிவர்கள் மெய்மறந்து, மிகுந்த மரியாதையுடன் கௌரவித்தனர். ஸ்ரீவேதவ்யாஸர், ஸ்ரீமதாசார்யர் இருவரும் அந்த ஆசிரமத்தில் பரமமங்கள ஸ்வரூபராக இருந்து

ஒளிர்வித்தனர். பகவந்தன், தனக்கு பிடித்தமான மக்களுக்கு, மோட்சத்தையே கொடுப்பதாக இருந்தது இந்தக் காட்சி.

மத்வவிஜயத்தில் 7-55 ஸ்லோகத்தில் வரும் விஷயம் இதுவே.

இத$^{3}$மாப ஷுகோऽபி லாளனம் ந ஸமக்$^{3}$ரம் ஜக$^{3}$தாம் பிது: பிது: |
அலபி$^{4}$ஷ்ட$^{2}$ யதே$^{3}$ஷ த$^{4}$ன்ய இத்யதி கௌதூஹலமாபி தாபஸை: ||7-55

ஸஹபோகத்தைப் போன்றதான, மகனான ஸுகாசார்யருக்கும்கூட கிடைக்காத ஸ்ரீவேதவ்யாஸரின் ஆலிங்கனத்தை, ஸ்ரீமதாசார்யர் பெற்றதைக் கண்டு, அங்கிருந்த முனிவர்கள் மிகவும் வியந்தனர்.

ஆஸ்யதாமித்யுதீ$^{3}$ர்யோபவிஷ்$^{2}$டே
ஸத்யவத்யா: ஸுதே ஸத்யவாசி |
நந்தயன் மந்த ஹாஸாவலோகை:
தான் முனீந்த்$^{3}$ரானிஹோபாவிஷத் ஸ: ||7-57

புன்னகையுடன் கூடிய முகத்தைக் கொண்டவரான ஸ்ரீமதாசார்யரை, ஸத்யவதியின் மகனான ஸ்ரீவேதவ்யாஸர், தன் அருகில் அமரச் செய்தார்.

சஞ்ஞானாயானந்த$^{3}$ விக்$^{3}$ஞான மூர்த்தி ப்ராப்தௌ ப்ருத்வீமாஸ்ரமே தத்ர தாவத் |
ஜாஜ்வல்யதே விஷ்ணு வாயுஸ்ம தே$^{3}$வௌ வேத$^{3}$வியாசானந்தv தீர்த்தா$^{2}$பி$^{4}$தா$^{4}$னௌ || (7-59)

ஞானகாரியத்திற்காக அவதரித்து சஜ்ஜனர்களுக்கு ஞானோபதேசம் செய்து காப்பாற்ற வந்த இந்த இருவரும் விஷ்ணுவாயுகள். பூமியில் மக்களுக்கு தத்வஞானத்தை போதிப்பதற்கு அவர்களை கடைத்தேற்ற அவதாரம் செய்த ஹரிவாயுகள், ஆசிரமத்தில் பரமமங்கள ஸ்வரூபராக காட்சியளித்தனர். இந்த இருவரின் சந்திப்புக் காட்சி, மோட்சத்தையே தரவல்லதாக இருந்தது.

இத்துடன் மத்வ விஜயத்தின் ஏழாம் சர்க்கத்தின் விஷயம் முடிவடைந்தது. அடுத்த ஸ்லோகத்திலிருந்து எட்டாம் சர்க்கத்தை விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

**[ஸ்லோகம் 29]**
**குஶலபு$^{3}$த்$^{3}$தி$^{3}$ய அஸம ப்ரதிபெ$^{4}$யு**
**ஹொஸதெரெத$^{3}$ ப்ரபெ$^{3}$யிந்த$^{3}$லொப்புவ**
**த$^{3}$ஶமதிய தருஶனதி$^{3}$ ஜனதெகெ$^{3}$ மூடி$^{3}$தச்சரியு |**
**அஸுபதிக$^{3}$ளாத$^{3}$ரதி$^{3}$ ஶாஸ்திரத$^{3}$**
**ரஸவ பு$^{4}$ஞ்சிஸி கு$^{3}$ருஸஹித மா**
**நஸ விகாஸதி$^{3}$ ஹொரடு ஸேரித$^{3}$ராஶ்ரமாந்த$^{1}$ரவ ||29**

குஷலபுத்திய - அற்புத புத்தியின்; அஸம பிரதிபையு - ஒப்புமையற்ற ஆளுமையும்; ஹொஸதெரெத - புதுவிதமான; ப்ரபெயிந்தலொப்புவ - தேஜஸ்ஸையும் கொண்டு ஒளிரும்; தஷமதிய தருஷனதி - தஷப்ரமதி எனப்படும் ஸ்ரீமதாசார்யரின் தரிசனத்தால்; ஜனதெகெ - அங்கிருந்த முனிவர்களுக்கு; மூடிதச்சரியு - வியப்பு / ஆச்சரியம் ஏற்பட்டது. அஸுபதிகளு - பிராணதேவர்; ஆதரதி - மிகவும் மரியாதை / பக்தியுடன்; சாஸ்திரத ரஸவ புஞ்சிஸி - சாஸ்திர ரசத்தினை பருகி; மானஸ விகாஸதி - மனம் தூய்மையடைந்து ; குருஸஹித - குருவான ஸ்ரீவேதவ்யாஸருடன்; ஹொரடு - புறப்பட்டு; அந்தரவ - தூரத்தை பயணம் செய்து; ஆசிரமவ - ஆசிரமத்தை; சேரிதரு - சேர்ந்தார்.

இந்த ஸ்லோகத்திலிருந்து மத்வவிஜய எட்டாம் சர்க்கத்தை விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

அற்புத புத்தியின் ஒப்புமையற்ற ஆளுமையும், புதுவிதமான தேஜஸ்ஸையும் கொண்டு ஒளிரும் தஷப்ரமதி எனப்படும் ஸ்ரீமதாசார்யரின் தரிசனத்தால், அங்கிருந்த முனிவர்களுக்கு மிகவும் வியப்பு ஏற்பட்டது. பிராணதேவர் மிகவும் மரியாதை / பக்தியுடன், சாஸ்திர ரஸத்தினை பருகி, மனம் தூய்மையடைந்து, குருவான ஸ்ரீவேதவ்யாஸருடன் புறப்பட்டு, பயணம் செய்து, நாராயண ஆசிரமத்தை அடைந்தார்.

மத்வ விஜய எட்டாம் ஸர்க்க முதல் ஸ்லோகம் இந்த விஷயத்தை இவ்வாறு வர்ணிக்கிறது.

இதிஹாச சுந்தர புராண சூத்ர சத்ப்ரிய பஞ்சராத்ர நிஜபா$^{4}$வ சம்யுதம் |

அஸ்ருணோத$^{3}$னந்த ஹ்ருத$^{3}$னந்த தோsசிராத் பரமார்த்த$^{2}$மப்$^{3}$ய கணிதாக$^{3}$மாவலே: || (8-4)

பதரிகாஸ்ரமத்திலிருந்த முனிவர்களுக்கு பூர்ணப்ரக்ஞரின் தேஜஸ்ஸினைக் கண்டு ஆச்சரியமானது. ஆசார்யர் தத்வஞானத்தைப் பற்றி மேலும் அறிவதற்கு வேதவியாசரை அணுகினார். வேறு தேவதைகள் யாருக்கும் தெரியாத விஷயங்களை கற்பித்த வேதவியாசரின் குருத்வம் மற்றும் சத்பாத்திரரான ஸ்ரீமதாசார்யரின் சிஷ்யத்வத்தைக் கண்ட தேவதைகள் அவர்களை வணங்கினர். இத்தகைய சிறப்பு விஷயங்களை மகாஞானியான பூர்ணபிரக்ஞருக்கு உபதேசம் செய்தார். ருஜுபுங்கவரான ஆசார்யரின் ஞானமானது மேலும் வளர்ந்தது.

அத$^{2}$ பா$^{3}$த$^{3}$ராயண ஸஹாய ஸம்பதா$^{3}$
ப்ரயயௌ ப்ரணந்துமமிதாந்தரோ யுத: |
அபி$^{1}$ நாதி$^{3}$ராயண பதோ$^{3}$தி$^{3}$தம் ஹரே:
வபுரந்தரம் லஸிதமாஸ்ரமாந்தரே || 8-6

ஸ்ரீவேதவ்யாஸரிடமிருந்து நற்சாஸ்திரங்களை கேட்டபிறகு, ஸ்ரீமத்வாசார்யர், தன் குருவுடன், அவரின் இன்னொரு ரூபமான ஸ்ரீமன் நாராயணனின் இருப்பிடத்திற்கு சென்றார்.

இந்த விஷயத்தையே ஸ்ரீஸ்ரீபாதராஜர், மத்வ நாமா ஸ்லோகம் #25ல் இவ்வாறு கூறியிருக்கிறார்.

நிர்பயதி சகல சாஸ்திரவ படிஸி -- என்னும் வாக்கியத்தில் முந்தைய அவதாரங்களைப் போலவே இங்கும் பாராயணம் செய்து (செய்வித்து) முடித்தார் என்ற செய்தி இருக்கிறது. அனாதி காலத்திலிருந்தே அனைத்து சாஸ்திரங்களின் ஞானம் முழுமையாக இருந்ததின் காரணமாக, நினைத்த மாத்திரத்திலேயே அனைத்தையும் தெரிந்து கொள்ளும் சாமர்த்தியம் கொண்டவரான ருஜுகணஸ்தர் ஸ்ரீமன் மத்வாசார்யர். இப்படியாக அவர் எதையும் புதிதாக படிக்கவேண்டியதில்லை. பகவந்தனின் விஷயத்தில் மட்டும், அதுவும் ருஜுகணஸ்தருக்கு மட்டும் தெரிந்திருக்க வேண்டிய விஷயங்களை நேரடியாக பகவந்தனிடமிருந்தே தெரிந்து கொண்டிருக்கிறார்.

மத்வ விஜய எட்டாம் சர்க்கத்தைப் பற்றியும், இந்த சர்க்கத்தைப் படிப்பதால் வரும் பலன்களைப் பற்றியும் மாதனூரு ஸ்ரீவிஷ்ணு தீர்த்தர், தமது ஸ்ரீமத் ஸுமத்வவிஜய ப்ரமேய பல மாலிகா கிருதியில் இவ்வாறு கூறுகிறார்.

நாராயணம் நமஸ்க்ருத்ய தத்ரஸ்த2ம் கு3ருணா ஸஹ |
கvதஸ்தாப்4யாமனுக்ஞாதோ பா4ஷ்யம் கர்த்தும் ஸதாம் முதே3 ||9||

குருகளான ஸ்ரீவேதவியாசருடன் நரநாராயணனை நமஸ்காரம் செய்து, அந்த பரமாத்மனின் மத்ஸ்ய, கூர்மாதி அனந்த அவதாரங்களை சிந்தனை செய்து, தத்வங்களைக் கேட்டு, அவர்கள் இருவரிடமிருந்து ஆணையைப் பெற்று, சஜ்ஜனர்களின் மகிழ்ச்சிக்காக மற்றும் நலனுக்காக தம் அவதாரத்தின் முக்கிய காரியமான ஸூத்ர பாஷ்யத்தை இயற்றுவதற்கு அங்கிருந்து புறப்பட்டார்.

விசார: ஸாத4னௌக4ஸ்ய ஞேயரூப ப்ரபோ3த4னம் |
உபாஸாயாமதிஷயோ தா3ர்ட்4யம் ப4க்திர்ஹரௌ கு3ரௌ ||19||

எட்டாம் சர்க்கம் படிப்பதால் வரும் பலன் : பிம்போபாசனையில் ஈடுபாடு.

நாராயண ஆசிரமத்தில் ஸ்ரீமன் நாராயணனை ஸ்ரீமதாசார்யர் தரிசித்த விதத்தை அடுத்த ஸ்லோகத்தில் விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

**[ஸ்லோகம் 30]**
த2ளத2ளிஸுதிஹ தூ4மவர்ஜித
ஜ்வலனத3ந்திஹ தாபஸாக்ருதி
குளிதிருவுத3னு நோடி3 நயன விகாஸ பொந்தி3த3ரு |
ஹொளியிதாக்ஷண ஈத நிக3மா
வளிய ரக்ஷிஸிதா3தனெம்பு3து3
ஹலவு வித4த3வதாரக3ள சிந்திஸுத நமிஸித3ரு ||30

தளதளிஸுதிஹ - பளபளக்கும்படியான; தூமவர்ஜித ஜ்வலனதந்திஹ - புகையற்ற தூய்மையான நெருப்பைப் போன்றதான; தாபஸாக்ருதி - ஒரு சிறந்த உருவம்; குளிதிருவுதனு நோடி - அமர்ந்திருப்பதைக் கண்டு; நயன விகாஸ பொந்திதரு - கண்கள் பவித்ரத்தை அடைந்தார்.

ஹொளெயிதாக்ஷண - பார்த்த அந்த நொடியில்; ஈத - இவரே; நிகமாவளிய ரக்ஷிஸிதாத - வேத ராசிகளை காத்தவன்; எம்புது - என்பதை; ஹலவு விதத - பற்பல விதமான; அவதாரகள - அவதாரங்களை; சிந்திஸுத - சிந்தித்தவாறு; நமிஸிதரு - வணங்கினார்.

நாராயண ஆசிரமத்தில் ஸ்ரீமன் நாராயணனை ஸ்ரீமதாசார்யர் தரிசித்த விதத்தை இந்த ஸ்லோகத்தில் விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

பளபளக்கும்படியான, புகையற்ற தூய்மையான நெருப்பைப் போன்றதான, ஒரு சிறந்த உருவம் அமர்ந்திருப்பதைக் கண்டு, ஸ்ரீமதாசார்யர் கண்கள் பவித்ரத்தை அடைந்தார். பார்த்த அந்த நொடியில், இவரே வேத ராசிகளைக் காத்தவர் என்பதை பற்பல விதமான அவதாரங்களை சிந்தித்தவாறு வணங்கினார்.

ஸ்ரீமதாசார்யர், ஸ்ரீமன் நாராயணனை தரிசிப்பதை மத்வ விஜயத்தில் 8-7 ஸ்லோகம் முதல் 8-11 வரை பார்க்கலாம்.

நயனத்[3]வயேன நலின ப்ரபா[4] முஷா[2] பரிபுல்லதா விலஸிதேன விஸ்மயாத் ||
தமவேக்ஷ்ய த[4]ர்ம ஜமத[4]ர்ம து[3]ர்லப[4]ம் மனசேதி பூ[4]ரிதர மானசோஸ்மரத் || (8-9)

நாராயணாஸ்ரமத்தில் மகா தேஜஸ்ஸினைக் கொண்ட நாராயணன் நார்மடியை உடுத்தி, ஜடாதாரியாக இருந்தார். ஸ்வ-ரமணனானாலும் தவம் மேற்கொண்டிருந்தவரைக் கண்டார். அபாரமான தேஜஸ் கொண்ட, யமதர்மனின் மகனான அவதரித்து வந்த நாராயணன், புண்ணியம் செய்யாதவர்களால் அடைய முடியாதவராக இருந்தார். இவரைக் கண்ட ஆசார்யர் இப்படி நினைத்தார். 14 உலகங்களின் அழிவு, காத்தல், படைத்தலுக்குக் காரணமானவர் இவரே. மூன்றுவித ஜீவர்களின் தகுதிக்கேற்ப கதியைக் கொடுப்பவர் இவரே. படைத்தல் முதலான அஷ்ட-கர்த்ருத்வத்திற்கு காரணமான நாராயணன் இந்த உலகத்திற்கே தலைவன். புராணபுருஷன், அனந்த நற்குணங்களைப் படைத்தவன், தோஷங்கள் அற்றவன், ஸ்வதந்திரன். தன்

உண்மையான பக்தர்களைக் காப்பாற்றவேண்டி அனைத்து காலங்களிலும் பற்பல ரூபங்களை எடுத்து அவதரிக்கிறார்.

அடுத்து நாராயண பண்டிதாசார்யர், பகவந்தனின் தசாவதார மற்றும் வேறு பல ரூபங்களின் வர்ணனையை ஸ்லோகம் 8-13 முதல் 8-42 வரை செய்திருக்கிறார். இவை மிகவும் கவித்துவ பூர்ணமாகவும், ஆன்மிக தத்வங்களை விளக்கும் வகையிலும் அமைந்துள்ளன. மேலும், ஒரே ஸ்லோகத்தில் இரு அவதார விளக்கங்களை கவி தருகிறார். ஸ்லேஷ அலங்கார நடையில், ஒரு வார்த்தைக்குள் இரு அர்த்தங்கள் பொருந்துமாறு ஸ்லோகங்கள் அமைப்பது நாராயண பண்டிதரின் தனிச்சிறப்பு ஆகும்.

இவை அனைத்திற்கும் முகுடமாக, ஸ்லோகம் 8-41 அமைந்துள்ளது எனலாம்.

பரமாத்மனே சததமேக ரூபிணே த3சரூபிணே ஷதசஹஸ்ர ரூபிணே |
அவிகாரிணே ஸ்புடமனந்த ரூபிணே சுகசித் சமஸ்ததனவே நமோ நம: || (8-41)

வேதவியாசனாக, ஆத்ம என்னும் பெயரைக் கொண்டு, ஒன்று பத்து ஆயிர ரூபங்களைக் கொண்டவன். எண்ணிக்கையற்ற ரூபங்களைக் கொண்டவன். அழகானவன். சச்சிதானந்த மயனானவன். தோஷங்கள் அற்றவன். அற்புத மகிமைகளைக் கொண்ட பரப்பிரம்மனான உனக்கு பற்பல நமஸ்காரங்கள். இப்படி வணங்கியவாறு, ஸ்வகதபேதவிவர்ஜிதரான வியாச நாராயணரை மறுபடி மறுபடி பூர்ணப்ரக்ஞர் நமஸ்கரித்தார்.

ஸ்ரீமத்வாசார்யருக்கு, ஸ்ரீமன் நாராயணன் இட்ட ஆணையை, ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர் அடுத்த ஸ்லோகத்தில் விளக்குகிறார்.

**[ஸ்லோகம் 31]**
**எரடு3 ஹரிரூபக3ள ப3ளியலி**
**பரமஹருஷாம்பு4தி3யலிருதிரெ**
**தொ3ரகதீ3ஸுக2வெம்பு3த3ரித1ரு மூரு லோகத3லி |**
**அரியதஞ்ஞானிக3ளு ரசிஸித3**
**து3ருள பா4ஷ்யவ க2ண்டி3ஸுவுத3கெ**
**தெரளு பு4வனகெ த3க்ஷணதி3 நீனெந்த3 லோகபதி ||31**

எரடு ஹரிரூபகள பளியலி - வேதவ்யாஸ நாராயண என்னும் இரு ஹரி ரூபங்களின் அருகில்; பரமஹருஷாம்புதியலி - மிகவும் மகிழ்ச்சிக்கடலில்; இருதிரெ - இருந்தால்; மூரு லோகதலி - மூன்று உலகங்களில்; அதிஸுக - உண்மையான மகிழ்ச்சி; தொரகது - கிடைக்காது; என்புதரிதரு - என்பதை அறிந்தார்; லோகபதி - உலகநாயகனான ஸ்ரீமன் நாராயணன்; அரியதஞ்ஞானிகளு - ஒன்றும் தெரியாத அஞ்ஞானிகள்; ரசிஸித - இயற்றிய; துருள பாஷ்யவ - கெட்ட அர்த்தங்களைக் கொண்ட பாஷ்யங்களை; கண்டிஸுவுதக்கெ - கண்டிப்பதற்காக; தக்ஷணதி - உடனடியாக; புவனக்கெ - உலகிற்கு; நீனெந்த - நீங்கள். தெரளு - கிளம்புங்கள்; எந்த - என்றார்.

ஸ்ரீமத்வாசார்யருக்கு, ஸ்ரீமன் நாராயணன் இட்ட ஆணையை, ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர் இந்த ஸ்லோகத்தில் விளக்குகிறார்.

வேதவ்யாஸ, நாராயண என்னும் இரு ஹரி ரூபங்களின் நடுவில், மிகவும் மகிழ்ச்சிக் கடலில் இருந்ததைப் போல அமர்ந்திருந்தார். இதைப் போன்ற உண்மையான மகிழ்ச்சி மூன்று உலகங்களிலும் கிடைக்காது என்பதை அறிந்தார். உலக நாயகனான ஸ்ரீமன் நாராயணன், 'ஒன்றும் தெரியாத அஞ்ஞானிகள் இயற்றிய, கெட்ட அர்த்தங்களைக் கொண்ட பாஷ்யங்களை கண்டிப்பதற்காக, உடனடியாக நீங்கள் உலகிற்கு கிளம்புங்கள்' என்றார்.

இந்த விஷயம் மத்வ விஜயத்தில் 8-42 ஸ்லோகத்திலிருந்து வந்திருக்கிறது.

இதி சிந்தயன்னவிரளாந்தரோ ஹரிம்
ப்ரணானாம ஸ ப்ரணயமாத்ருதோऽமுனா |
அஜிதௌ பரஸ்பர ஸபா4ஜிதௌ ஸ தௌ
நிகஷா2 நிஷீ2த3தி புரோபவேஷி1னௌ || 8-42

இவ்வாறு சிந்தித்தவாறு, ஸ்ரீபூர்ணப்ரக்ஞர், ஸ்ரீமன் நாராயணன் மற்றும் ஸ்ரீவேதவ்யாஸர் இருவருக்கும் இடையே மிகவும் பக்தி மரியாதைகளுடன் அமர்ந்திருந்தார்.

ஸ்ருணு தே3வ கார்யமவதா4ர்ய தை4ர்யவத்3
யது3தீ3ர்யமாணமித3மார்ய ஸம்மதம் |

ப[4]விதாsன்ய துஷ்கரதரம் விதா[3]ய
தத் தருணம் தவாவ தரணம் மஹா ப[2]லம் ||8-44
மிகுந்த பணிவு கொண்ட, ஏகாந்த பக்தரான ஆசார்யரிடம் நாராயணன் - 'மத்வாசாரியரே ! யாராலும் செய்யமுடியாத செயல்களை செய்து முடித்தால், தங்களின் அவதார நோக்கம் நிறைவேறும். அசுரர்கள் துர்பாஷ்யங்களை இயற்றி, தத்வஞானத்தை மறக்கடித்தனர். பிரம்மசூத்ரங்களின் உண்மையான பொருள் மறைந்திருக்கிறது. சஜ்ஜனர்களுக்கு உண்மையான ஞானத்தைக் கொடுப்பதற்காக, பிரம்மசூத்ரத்திற்கு பாஷ்யத்தை விரைவாக எழுதுவீர். வேதபுராணங்களின் உண்மையான பொருளை ஆராய்ந்து அவற்றை பரப்புவீர்' - என்றார்.

ஸ்ரீமன் நாராயணனின் ஆணையை தொடர்ந்து அடுத்த ஸ்லோகத்திலும் விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

**[ஸ்லோகம் 32]**
**அஜித பாராமரியு கருணதி[3]**
**ரசிஸிருவ வரஸூத்ரனிகரகெ**
**ரஸிஸு ஶுப[4]தம பா[4]ஷ்யவனு ஸஜ்ஜனரனுத்[3]த[4]ரிஸு |**
**உசிதவல்லவித[3]ன்ய ஜனரிகெ[3]**
**ஶுசி யஷவ ஸ்ரேயஸவ பொந்து[3]வி**
**வசனவிதெ[3] ஸ்ரீபதியு பேளித[3] ஶிரதி[3] த[4]ரிஸித[3]ரு ||32**

அஜித - யாராலும் வெல்லப்பட முடியாதவரான; பாராஷரியு - பராஷரரின் புதல்வரான ஸ்ரீவேதவ்யாஸர்; கருணதி - கருணையுடன்; ரசிஸிருவ - இயற்றியிருக்கும்; வரஸூத்ர நிகரகெ - பிரம்மஸூத்ரங்களுக்கு; ஷுபதம - மங்களகரமான அர்த்தங்களை கொடுக்கக்கூடிய; பாஷ்யவனு - பாஷ்யத்தை; ரசிஸு - இயற்று; ஸஜ்ஜனரனுத்தரிஸு - சஜ்ஜனர்களை காப்பாற்று; அன்ய ஜனரிகெ - தகுதியற்றவர்களுக்கு வழங்கப்படும்; இது - உபதேசம்; உசிதவல்ல - வீணாகும்; ஷுசி - பவித்ரத்தை; யஷவ - வெற்றியை; ஸ்ரேயஸவ - சிறப்பினை; பொந்துவி - அடைவீர்கள்; ஸ்ரீபதியு - ஸ்ரீமன் நாராயணன்; பேளித - கூறிய; வசனவித - இந்த வசனத்தை; ஷிரதி தரிஸிதரு - சிரமேற்கொண்டார்.

ஸ்ரீமன் நாராயணனின் ஆணையை தொடர்ந்து இந்த ஸ்லோகத்திலும் விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

யாராலும் வெல்லப்பட முடியாதவரான, பராஷரரின் புதல்வரான ஸ்ரீவேதவ்யாஸர், கருணையுடன் இயற்றியிருக்கும் பிரம்ம ஸூத்ரங்களுக்கு, மங்களகரமான அர்த்தங்களை கொடுக்கக்கூடிய பாஷ்யத்தை இயற்றுங்கள். சஜ்ஜனர்களை காப்பாற்றுங்கள். தகுதியற்றவர்களுக்கு வழங்கப்படும் உபதேசம் வீணாகும். இதனால் நீங்கள் வெற்றியை, சிறப்பினை, அடைவீர்கள். ஸ்ரீமன் நாராயணன் கூறிய இந்த வசனத்தை ஸ்ரீமதாசார்யர் சிரமேற்கொண்டார்.

தொடர்ந்து ஸ்ரீமன் நாராயணன் கூறிய வசனங்கள், மத்வ விஜயத்தில் 8-45 ஸ்லோகத்திலிருந்து உள்ளன.

அபி1தா4ய ஸுத்ர ஹ்ருத3யம் ஸதா1ம் ப்ரியம்
ப்ரவிதா4ய பா4ஷ்யமது4னா நிஜேச்சயா |
அபரை: ஸ்ருதி ஸ்ம்ருதி நிஜார்த்த2 தூ3ஷ2கை:
ஸுதராம் திரோப4வதி ஸம்விதா3ஹதா || 8-45

தற்காலத்தில் உள்ள பிரம்மஸூத்ர பாஷ்யங்கள், மிகவும் தவறானவர்களால், வேதங்களின், ஸ்ம்ருதிகளின் உண்மையான அர்த்தங்களை மறைத்து எழுதப்பட்டவை. இதனால் மக்களுக்கு உண்மையான ஞானம் மறைக்கப்பட்டுள்ளது.

அபனேதிமேனமனயம் க்ருதம் க2லை:
ப்ரதினேதுமாத்ம ஜனதாம் ஷுபா4ம் க3திம் |
கு1ரு ஸூத்ர பா4ஷ்யமவிலம்பி3தம் வ்ரஜே:
ஸுமதேன யோஜய கவே ஸ்ருதி ஸ்ம்ருதீ: ||8-46

'ஹே கற்றறிந்த மத்வாசார்யரே! இத்தகைய கெட்டவர்களின் துர்செயல்களை சரிப்படுத்தி, நம் பக்தர்களை அவர்களின் சரியான இலக்கினை அடையச் செய்ய, நீங்கள், ஸ்ரீவேதவ்யாஸர் நினைத்ததான சரியான அர்த்தத்தில், பிரம்மசூத்திரத்திற்கு ஒரு பாஷ்யத்தை இயற்ற வேண்டும்' .

கலி கால காலித கு3ணே த4ராதளே

சுஜனோ ந நூனமதுனாஸ்தி யோக்3ய தீ4: |
பரதத்வ வர்ணனமயோக்3யதா வதே1
நனு ஹவ்ய தா3னமிவ நிந்த்3யதே ஷுனே || 8-49
இந்த கலிகாலத்தில் தத்வஞானத்திற்கு அருகதையானவர் யாருமில்லை. அருகதையற்றவர்களுக்கு வழங்கப்படும் உபதேசம் வீணாகும்.

மதமித்யவேத்ய மஹிதம் மஹதோ:
அபி4தா4ய பா3ட4மிதி தீ4ர மதி: |
அனயோர் நியோக3மதி4ரோ பிதவான்
ஸ்வ ஷிரஸ்யனன்ய ஸுவஹம் ப்ரணவான் || 8-53

ஸ்ரீமன் நாராயணனின் மற்றும் ஸ்ரீவேதவ்யாஸரின் விருப்பத்தை ஏற்றுக்கொண்ட, திடமான மனதுடைய ஸ்ரீமத்வாசார்யர், இருவரையும் பக்தி மரியாதையுடன் வணங்கி, அவர்களது ஆணையை, வேறு யாராலும் செய்ய முடியாத செயலை, சிரமேற்கொண்டார்.

இத்துடன் மத்வ விஜயத்தின் எட்டாம் சர்க்கத்தின் விஷயம் முடிவடைந்தது. அடுத்த ஸ்லோகத்திலிருந்து ஒன்பதாம் சர்க்கத்தின் விஷயங்களை விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் **33]**
**ஹோக3லாக்3ஞெயனித்த யது3ஸூத**
**னாகி3 ஜனிஸித3 ஹரிகெ3 ஶிரவனு**
**பா3கி3 ஸகலவ ஶ்ரவணகெ3ய்த3ரு ஶ்ருதிபதிக3ளிந்த3 |**
**போகி3ப3ரலப்பணெய படெ3த3ரு**
**வேக3த3லி தா3டி1த3ரு கி3ரிக3ள**
**பூ4க3ஸூரதரு நோடி3 ஶிஷ்யரு நீகி3த3ரு க்லேஷ ||33**

ஹோகலாக்ஞெயனித்த - சென்று வருமாறு ஆணையிட்ட; யதுஸூதனாகி ஜனிஸித - யது குலத்தில் பிறந்தவரான; ஹரிகெ - ஸ்ரீஹரிக்கு; ஷிரவனு பாகி - தலை வணங்கி; ஷ்ருதிபதிகளிந்த - ஸ்ரீவேதவ்யாஸரிடமிருந்து; ஸகலவ - அனைத்தையும்; ஷ்ரவணகெய்தரு - கேட்டு அறிந்தார்; போகிபரலப்பணெய - சென்று வருகிறேன் என்று அவரிடம் ஆணையை; படெதரு - பெற்றார்; வேகதலி - வேகமாக; கிரிகள தாடிதரு - மலைகளைத் தாண்டினார்;

பூகஸுூரதரு - பூமிக்கு வந்த கல்பவ்ருக்ஷத்தை (ஸௌகந்திகா); நோடி - தரிசித்து; சிஷ்யரு - சிஷ்யர்கள்; க்லேஷ - தங்கள் துக்கத்தினை; நீகிதரு - நீங்கினர்.

இந்த ஸ்லோகத்திலிருந்து ஒன்பதாம் சர்க்கத்தின் விஷயங்களை விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

சென்று வருமாறு ஆணையிட்ட, யது குலத்தில் பிறந்தவரான ஸ்ரீஹரிக்கு தலை வணங்கி, பின், ஸ்ரீவேதவ்யாஸரிடமிருந்து அனைத்தையும் கேட்டு அறிந்தார். பின், அவரிடமிருந்தும், சென்று வருகிறேன் என்று அவரின் ஆணையைப் பெற்றார். வேகமாக மலைகளைத் தாண்டினார். பூமிக்கு வந்த கல்பவ்ருக்ஷத்தை தரிசித்து சிஷ்யர்கள், தங்கள் துக்கங்களை போக்கிக் கொண்டனர்.

மத்வ விஜயம் 9-1 ஸ்லோகத்தில் இந்த விஷயம் வருகிறது.

சோத$^{3}$யந்தமத$^{2}$ க$^{3}$ந்துமாத$^{3}$ராத்
தத்ர த$^{4}$ர்ம ஜமஜம் ப்ரணம்ய ஸ: |
ஸௌக்$^{2}$ய தீர்த்த$^{2}$ கவிலோக நாயகோ
வேத$^{3}$ நாயக புரஸ்ஸரோ யயௌ ||9-1

பின், கற்றவர்களில் சிறந்தவரான ஆனந்ததீர்த்தர், பிறப்பு இல்லாத ஸ்ரீமன் நாராயணனை வணங்கி, ஸ்ரீவேதவ்யாஸருடன் அவருடைய இருப்பிடத்திற்கு திரும்பினார்.

ஆஸ்ரமாந்தரமவாப்ய கிருஷ்$^{2}$ணத: ஸ்ராவ்யபேஷ$^{2}$ ஸகலம் ச ஷுஷ்ருவான் |
சித்த வ்ருத்திமனு வ்ருத்திமான் கு$^{3}$ரோ: ஸாத்$^{4}$யவேத்$^{1}$ய க$^{3}$மனோன் முகோ$^{2}$sப$^{4}$வத் ||9-2

வ்யாஸ ஆசிரமத்திற்கு வந்தபிறகு, வாசிஷ்ட கிருஷ்ணரான ஸ்ரீவேதவ்யாஸரின் உபதேசங்களை கேட்டு அறிந்தார். பின் தன் இருப்பிடத்திற்கு திரும்ப ஆயத்தமானார்.

வீர த்$^{3}$ருஷ்$^{2}$டி க்ருதஸிம்ஹ விப்$^{4}$ரம:
ஷாந்த த்$^{3}$ருஷ்டி க்ருத ஷாந்த ஸம்மத$^{3}$: |

தத்ரதத்ர பதி$^{2}$ பத்$^{2}$ய விப்$^{4}$ரம:
பர்வதாத$^{3}$வ ததார ஸர்வ தீ$^{4}$: ||9-5

இமாலய மலைகளிலிருந்து பூர்ணப்ரக்ஞர் இறங்கி வரும் காட்சியானது, காட்டு விலங்குகளுக்கு ஒரு வீரமான சிங்கத்தைப் போலவும்; கனிவானவர்களுக்கு ஒரு மகிழ்ச்சியூட்டும் உருவத்தைக் கொண்டவராக தெரிந்தார்.

வானரேந்தி$^{3}$ர இவ தீர்ண வாரிதி$^{4}$:
வாஸுதே$^{3}$வ இவ ரத்ன ராஜவான் |
பீ$^{4}$மஸேன இவ ஸௌன வர்ய ஹ்ருத்
நிர்வ்ருத்திம் ஸ்வஜன மானினாய ஸ: ||9-6

திரும்பி வந்த ஆசார்யர், தமது சிஷ்யர்களுக்கு நிம்மதியைக் கொடுத்தார். கடலைத் தாண்டி வந்த ஹனுமனைப் போல; ஸ்யமந்தகமணி கொண்டு வந்த வாசுதேவனைப் போல; ஸௌகந்திகா புஷ்பத்தை கொண்டு வந்த பீமஸேனனைப் போல காட்சியளித்தார்.

ஸ்ரீமதாசார்யர், பிரம்மஸூத்ர பாஷ்யத்தை இயற்றும் அற்புத செயலை, அடுத்த ஸ்லோகத்தில் விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

**[ஸ்லோகம் 34]**
**த்$^{3}$விஜரு பி$^{4}$க்ஷெய நீடி$^{3}$தெ$^{3}$ல்லவ**
**த்யஜிஸதெ$^{3}$லெ பு$^{4}$ஞ்சிஸி மஹாமதி**
**விஜய படெ$^{3}$த$^{3}$ரு ஆருஶாஸ்த்ரக$^{3}$ளரிதவர கெ$^{3}$லிது$^{3}$ |**
**நிஜதனுவ பே$^{3}$ரொந்து$^{3}$ ரூபவ**
**ஸ்ருஜிஸுவந்த$^{3}$தி$^{3}$ ஸூத்ரபா$^{4}$ஷ்யவ**
**ஸ்ருஜிஸி பொரெத$^{3}$ரு ஸத்யதீர்த்தரு ப$^{3}$ரெத$^{3}$ராபா$^{4}$ஷ்ய ||34**

த்விஜரு - பிராமணர்கள்; பிக்ஷெய நீடிதெல்லவ - பிக்ஷையில் கொடுத்த அனைத்தையும்; த்யஜிஸதெலெ - புறக்கணிக்காமல்; புஞ்சிஸி - ஏற்றுக்கொண்டு; மஹாமதி - சர்வக்ஞர்; ஆருஷாஸ்த்ரகளிதவர - ஆறு சாஸ்திரங்களை அறிந்தவர்களை; கெலிது - வென்று; விஜய படெதரு - வெற்றிவாகை சூடினார்; நிஜதனுவ - (மங்களகரமான) அவருடைய ரூபமே; பேரொந்து ரூபவ - இன்னொரு

பிரதியாக; ஸ்ருஜிஸுவந்ததி - இருக்கிறது என்று எண்ணும்படியான; ஸூத்ரபாஷ்யவ - பிரம்ம ஸூத்ர பாஷ்யத்தை; ஸ்ருஜிஸி - படைத்து; பொரெதரு - அருளினார்; ஸத்யதீர்த்தரு - ஸத்யதீர்த்தர்; ஆ பாஷ்ய - அந்த பாஷ்யத்தை; பரெதரு - ஆவணப்படுத்தினார்.

ஸ்ரீமதாசார்யர், பிரம்மஸூத்ர பாஷ்யத்தை இயற்றும் அற்புத செயலை, இந்த ஸ்லோகத்தில் விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

பிராமணர்கள் பிக்ஷையில் கொடுத்த அனைத்தையும் புறக்கணிக்காமல் ஏற்றுக்கொண்டார். சர்வக்ஞரான ஆசார்யர், ஆறு சாஸ்திரங்களை அறிந்தவர்களை வென்று வெற்றி வாகை சூடினார். மங்களகரமான அவருடைய ரூபமே, இன்னொரு பிரதியாக இருக்கிறது என்று எண்ணும்படியான பிரம்ம ஸூத்ர பாஷ்யத்தை படைத்து அருளினார். ஸத்ய தீர்த்தர், அந்த பாஷ்யத்தை ஆவணப்படுத்தினார்.

மத்வ விஜயம் ஒன்பதாம் சர்க்கத்தில் வரும் ஆசார்யரின் மகிமைகள் இவ்வாறு.

அக்$^{3}$னிஷர்ம முக$^{2}$ பஞ்சஷைர்த்$^{3}$விஜை: அன்னமாஹ்ருத$^{3}$மலம் ப்ருத$^{2}$க் ஸமம் |
க்$^{1}$ருத்ஸ்னமாத$^{3}$த$^{3}$ய மித்யவிஸ்மய: க்ருத்ஸமத்துமலமேஷ ஹி க்ஷயே || 9-7

பதரியில், அக்னிசர்மா முதலான 5-6 பிராமணர்கள் ஒரே காலத்தில் தனித்தனியாக சமர்ப்பித்த பிக்ஷையை ஏற்று அவர்களுக்கு வியப்பூட்டினார் ஆசார்யர். பிரளய காலத்தில் ஸ்ரீஹரியின் அருளால் அனைத்தையும் விழுங்கும் முக்யபிராணரின் அவதாரமான மத்வரின் விஷயத்தில் இது ஆச்சரியமே இல்லை.

வ்யாஸதே$^{3}$வ ஹ்ருத$^{3}$யாதி$^{3}$ வல்லப$^{4}$ம்
வாஸுதே$^{3}$வமக$^{3}$ணய்ய ஸத்கு$^{3}$ணம் |
ஸாத$^{4}$யத ஸகல தோ$^{3}$ஷ வர்ஜிதம்
ஞான ப$^{4}$க்தி த$^{3}$மனந்த ஸெளக்$^{2}$யத$^{3}$ம் ||9-8

வேதவியாசருக்கு மிகவும் பிடித்தமான ஸ்ரீஹரியை நற்குணங்களைக் கொண்டவன், தோஷங்கள் அற்றவன் என்று நிரூபித்து, ஞானபக்திகளை வழங்கும் இந்த பாஷ்யம், நித்யசுகமான மோட்சத்தை தரவல்லதாகும். வேதவியாசரின் சூத்ரத்திற்கு ஒப்பான வேத வாக்கியத்தை சமர்ப்பித்து, வியாசரின் கருத்தை அப்படியே பிரதிபலிப்பதாக இருக்கிறது, ஆசார்யரின் பாஷ்யம்.

பா3ல சங்கமபி போ4த3யத்3ப்4ருஷம் து3ர்னிரூப வசனம் ச பண்டி3தை: |
அப்ரமேய ஹ்ருத3யம் பிரஸாத3வத் சௌம்யகாந்தி ச விபக்ஷ பீ4ஷ2ணம் || (9-10)

சாதாரணமானவர்களுக்கும் புரியுமாறும், முழுதும் அறிந்த பண்டிதர்களுக்கு புரியாத வகையிலும் இருக்கிறது இந்த பாஷ்யம். இதில் மிக எளிமையான சொற்களே உள்ளன, ஆனால் இதிலுள்ள விஷயங்கள் புரிந்துகொள்ள கடினமானவை. சஜ்ஜனர்களுக்கு இதமாகவும், துர்ஜனர்களுக்கு மிக பயங்கரமானதாகவும் இருக்கிறது..

அனைத்து தேவதைகளாலும் புகழப்பட்ட, அனைத்து லட்சணங்களும் பொருந்திய, தேவையற்ற எந்த ஒரு அதிகப்படியான சொல்லும் இல்லாத இந்த பாஷ்யமானது மிகவும் மங்களகரமானதாக இருக்கிறது. 'ரூபமன்யதிவ தன்யமாத்மன: |' ஆசார்யரின் ரூபம் 32 லட்சணங்களைக் கொண்டது. அவரின் இன்னொரு பிரதியே இந்த பாஷ்யம் என்று சொல்லலாம்.

கா3ங்கமங்க3ள தரங்க3ப4ங்க3த3 ப்ராந்த சுஸ்ரீஹரி வேஷ்ம க்ருத்ஸம: |
யத்3க3தைக தமவர்ண லேக2க: சத்யதீர்த்த இஹ பா4ஷ்யமாலிக2த் || (9-13)

ஆசார்யரின் பிரிய சிஷ்யரான சத்யதீர்த்தர் இந்த பாஷ்யத்தை முழுவதுமாக ஆவணப்படுத்தினார். இதன் ஒரே ஒரு எழுத்தினை எழுதுவதும் மிகப் பெரிய புண்ணியத்தைப் பெற்றுத் தரும். கங்கைக்கரையில் விஷ்ணுவிற்கு கோயில் கட்டினால் வரும் புண்ணியத்திற்கு இது ஒப்பாகும். அப்படியே சூத்ரகாரரான வியாசரின், பாஷ்யகாரரான ஆசார்யரின் மகிமை எத்தகையது என்று ஊகிப்பது சாத்தியமில்லை. அப்படியே சத்யதீர்த்தருக்கு ஆசார்யரின் அருளும் அபாரமானது ஆகும்.

ஶ்ரீஶ்ரீபாதராஜர், மத்வ நாமாவில் இதையே இவ்வாறு கூறியிருக்கிறார்.

ஏகவிம்ஷதி குபாஷ்யகள பேரனு தரித
ஶ்ரீகரார்ச்சிதனொலுமெ சாஸ்திரரசிஸி |
லோகத்ரயதொளித்த சுரரு ஆலிசுவந்தெ
ஆ கமலனாபாதி யதினிகரகொரெத ||26||

பிரம்மசூத்திரத்திற்கு அதுவரை இருந்த 21 குபாஷ்யங்களை கண்டித்து, ஶ்ரீவேதவியாசருக்கு சம்மதமான பிரம்மசூத்ர பாஷ்யத்தை இயற்றி மூன்று உலகங்களிலும் இருந்த தேவதைகளுக்கு அது போய் சேருமாறு, ஶ்ரீமத்வர், பத்பனாபதீர்த்தர் முதலான சிஷ்யர்களுக்கு அதனை உபதேசித்தார். ஶ்ரீமன் மத்வாசார்யர் இயற்றிய சூத்ரபாஷ்யத்திற்கு மோட்சத்தைக் கொடுக்கும் வல்லமை உண்டு. மோட்சம் கிடைப்பது ஶ்ரீஹரியின் அருளினாலேயே. அவன் மகிழ்ச்சியடைவது, அவனை சரியாக புரிந்து அவனிடம் நிஜமான பக்தி உண்டானால் மட்டுமே. அந்த பகவந்தனின் நற்குணங்களை சரியாக விளக்கி, பக்தியை உண்டாக்கி, பிறகு மோட்சத்தையும் கொடுக்கவல்ல சாமர்த்தியம் கொண்டது ஶ்ரீமன் மத்வரின் பிரம்மசூத்ர பாஷ்யம். அதற்காகவே ஶ்ரீபாதராஜர், 'ஶ்ரீகரார்ச்சிதனொலுமெ சாஸ்திர' என்று கூறினார்.

ஆசார்யரின் சூத்ரபாஷ்யம், வேதவேதாங்கங்கள் சொன்னதற்கு ஏற்ப உள்ளது. பாஷ்யத்தின் அனைத்து லட்சணங்களையும் கொண்டது. எவ்வித தோஷங்களும் அற்றது. தேவதைகளாலும் மதிக்கப்படுவது. 21 குபாஷ்யங்களையும் மறுத்துள்ளது. அதற்கு பின்னும் எவ்வித பாஷ்யங்களால் மறுக்கப்படாத அற்புத பாஷ்யமாகியுள்ளது.

மத்வ விஜய எட்டாம் சர்க்கத்தைப் பற்றியும், இந்த சர்க்கத்தைப் படிப்பதால் வரும் பலன்களைப் பற்றியும் மாதனூரு ஶ்ரீவிஷ்ணு தீர்த்தர், தமது ஶ்ரீமத் ஸுமத்வவிஜய ப்ரமேய பல மாலிகா கிருதியில் இவ்வாறு கூறுகிறார்.

ஸ்தா2னாந்தரே வ்யாஸமுகாச்ஸ்ருத்வா ஷாஸ்த்ரம் ததோ க3த: |
ஏகவிம்ஷதிது3ர்பா4ஷ்ய க2ண்ட3னம் பா4ஷ்ய மாதனோத் ||10||

பெரிய பதரியில் ஸ்ரீவேதவியாசரின் முகத்திலிருந்து சாஸ்திரங்களைக் கேட்டு, பின்னர் அங்கிருந்து, கோதாவரி வழியாக, ரஜதபீடபுரத்திற்கு (உடுப்பிக்கு) வந்தார். 21 துர்பாஷ்யங்களைக் கண்டித்து (அவற்றில் இருந்த தோஷங்களைக் காட்டி), நிர்மலமான, திடமான, தம்முடைய பிரதிரூபத்தைப் போலிருக்கும், வலம்புரி சங்கினைப் போல இருக்கும், சிறப்பான, அனைத்து செல்வங்களையும் தரக்கூடியதான பாஷ்யத்தை இயற்றினார்.

விசார: ஸாத$^4$னௌக$^4$ஸ்ய ஞேயரூப ப்ரபோ$^3$த$^4$னம் |
உபாஸாயாமதிஷயோ தா$^3$ர்ட்$^4$யம் ப$^4$க்திர்ஹரௌ கு$^3$ரௌ ||19||

ஒன்பதாம் சர்க்கம் படிப்பதால் வரும் பலன் : ஸ்ரீஹரி குருகளில் திடமான பக்தி வளர்தல்

அடுத்த ஸ்லோகத்தில் ஸ்ரீமதாசார்யரின் திக்விஜயத்தை விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

**[ஸ்லோகம் 35]**
**ஸரிது$^3$ கோ$^3$தா$^3$வரிய தடத$^3$லி**
**முரிது$^1$ ஷட்ஸமயக$^3$ள ஸூலப$^4$லி**
**ஷரணு ஹொடெ$^3$ஸித$^3$ரெல்லர விது$^3$ஷர ஸபெ$^4$ ஸபெ$^4$க$^3$ளல்லி |**
**ஹிரிய ஶோப$^4$னப$^4$ட்டரலி ப$^3$லு**
**ஸரளதெய தோருதலி பா$^4$ஷ்யத$^3$**
**திருளுக$^3$ள தோரித$^3$ரு யதிவரராதனிகெ$^3$ த$^3$யதி$^3$ ||35**

ஸரிது - மேலும் பயணத்தில்; கோதாவரிய தடதலி - கோதாவரி நதிக்கரைக்கு வந்து, அங்கு; ஷட்ஸமயகள = (சார்வக முதலான) ஆறு தத்வங்களையும்; ஸூலபலி - சுலபமாக; முரிது - கண்டித்து, வென்று; ஸபெஸபெகளல்லி - அனைத்து சபைகளிலும்; விதுஷர - கற்றறிந்தவர்களை; எல்லர - அனைவரையும்; ஷரணு ஹொடெஸிதரு - வென்று காலில் விழ வைத்தார். யதிவரரு - ஸ்ரீமதாசார்யர்; தயதி - மிகவும் அன்புடன்; ஹிரிய ஷோபனபட்டரலி - பண்டிதரான ஷோபனபட்டருக்கு; பலு ஸரளதெய தோருதலி - மிகவும் கருணையைக் காட்டியவாறு; பாஷ்யத - பாஷ்யத்தின்; திருகுகள தோரிதரு - ரகசியங்களை விளக்கினார்.

இந்த ஸ்லோகத்தில் ஸ்ரீமதாசார்யரின் திக்விஜயத்தை விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

ஸ்ரீமதாசார்யர், தமது பயணத்தில், கோதாவரி நதிக்கரைக்கு வந்து, அங்கு சார்வக முதலான ஆறு தத்வங்களையும் சுலபமாக கண்டித்து வென்றார். அனைத்து சபைகளிலும், கற்றறிந்தவர்களையும் வென்று காலில் விழ வைத்தார். பண்டிதரான ஷோபனபட்டருக்கு, மிகவும் கருணையைக் காட்டியவாறு, அன்புடன், பாஷ்யத்தின் ரகசியங்களை விளக்கினார்.

தத்ர தே3வமபி4வந்த்3ய யாத1வான்
ஸ்வாமினோ வசன கௌ3ரவாத்3 த்3ருதம் |
ஸானு கோ3 விவித4 பூ4ரதீத்ய
கோ3தா3வரி தடமகா3த்3லேஷதீ4: ||9-14

பூர்ணப்ரக்ஞர் தமது சிஷ்யர்களுடன் அனந்த மடத்திலிருந்து கிளம்பி, பயணத்தில் கோதாவரி நதிக்கரைக்கு வந்தார்.

ப்ராக்ஞ வித்தமமயமாப்துமாக3தை:
பண்டி3தைர்த்3வினவ ஷாகி2பி3: ஸ்ருதீ: |
ப்ரஸ்துதா அபி4த3தௌ3 பரீக்ஷகை:
ஷ2ட் ச தத்ர ஸமயானக2ண்டயன் || 9-15
தே ப்ருதக் ப்ருத2க3மு ஸ்வ ஷாக2யா
த3ர்ஷனேன ச பரீக்ஷ்ய நிர்ஜிதா: |
ஸர்வவித் த்வமஸி முக்2யத: கவே
நாஸ்தி தே ஸத்3ருஷ இத்யதா2ப்3ருவன் ||9-16

ஆசார்யர். ரிகாதி அனைத்து வேதங்களிலும் வல்லவர்களான சில பண்டிதர்கள், ஆசார்யரை சோதிக்க வேண்டி சில வேத மந்திரங்களைக் கூறினர். ஆசார்யர் அந்த வேத மந்திரங்களை சரியாக உச்சரித்து, அவற்றின் பொருளை விளக்கியவாறு, சார்வக முதலான ஆறு தத்வங்களையும் கண்டித்தார். 'ஆசார்யரே, நீங்கள் சர்வக்ஞர். உங்களுக்கு சமமானவர் இந்த உலகத்தில் வேறு யாரும் இல்லை' என்று அந்த பண்டிதர்கள் புகழ்ந்தனர்.

ஷோபனபட்டர், பத்மனாப தீர்த்தராக ஆகுதல்

மத்வ விஜயத்தில் ஷோபன பட்டர், ஆசார்யரை சந்திக்கும் படலம் 9-17 ஸ்லோகத்திலிருந்து 9-27 ஸ்லோகம் வரை வர்ணிக்கப்பட்டுள்ளது.

யஸ்த்ரயீ ஸகல பக்ஷ சிக்ஷக:
தத்ர ஸம்ஸதி$^3$ வரிஷ்$^2$ட ஸம்மத: |
ஷோப$^4$னோப பத$^3$ பட்ட நாமக: பூர்ண
ஸங்ஞாமன மன்முஹுர்முதா$^3$ ||9-17

அப்ரமேய மதி ஷாஸ்த்ரமீத்$^3$ருஷம்
யஸ்த்வமஜத்யுபனதம் ஸு து3ர்லப$^4$ம் |
தஸ்ய துல்ய மதிரேஷ$^2$ து$^3$ர்ஜனோ
நாத$^2$வாsஸ்ய ஸத்$^3$ருஷோsஸ்தித நீச தீ$^4$: || 9-22

அந்த சபையில், தர்க்கத்தில் வல்லவரான, வேத புராண பாரதம் முதலான சாஸ்திரங்களில் சிறந்தவரான, சோபன பட்டர் என்னும் பண்டிதர் இருந்தார். மத்வரின் முக-கமலத்திலிருந்து வெளிவந்த பாஷ்யம் என்னும் அமிர்தத்தைப் பருகி, மத்வர் கூறிய தத்வவாதத்திற்கு மனதைப் பறிகொடுத்து, அவரின் சிஷ்யரானார். பின்னர் மத்வரின் சித்தாந்த பிரசாரத்திற்காக தன் வாழ்க்கையையே அர்ப்பணித்தார். பின்னர் ஆசார்யரிடம் உபதேசம் பெற்று, பத்மனாப தீர்த்தர் ஆகி, துர்வாதிகளைக் கண்டித்தார். மத்வசாஸ்திரத்தை சிறந்ததான வலம்புரி சங்கிற்கு ஒப்பிட்டு, அந்த சித்தாந்தத்தை பிரசாரம் செய்யத் துவங்கினார். இவரே இந்த சித்தாந்த சாம்ராஜ்யத்தின் முதல் சிஷ்யரும் ஆனார்.

சுண்ணாம்பு செய்பவர் வலம்புரி சங்கின் சிறப்பினை அறியாமல் அது பயன்படாது என்று தூக்கி எறிவதைப் போல, மத்வ சாஸ்திரத்தின் சிறப்பினை அறியாமல் அதை நிராகரிப்பவன் அதமன் (தாழ்ந்தவன்). அவனைவிட குறைந்த புத்தி உள்ளவன் வேறு யாருமில்லை. வலம்புரி சங்கின் சிறப்பை அறிந்த இன்னொருவன், அதை நல்ல விலைக்கு விற்று லாபத்தை அடைவான். ஆனால் அவனும் அந்த சங்கின் முழுமையான பலனை அனுபவிக்கவில்லை. இதுபோல் மத்வ சாஸ்திரத்தை பின்பற்றி அதிலிருந்து கிடைக்கும் ஞான, பக்தி,

ஸ்ரீஹரியின் அருளிற்கு முயலாமல், வெறும் பணம் மற்றும் புகழுக்காக இந்த சாஸ்திரத்தை பயன்படுத்துபவன் முட்டாள் ஆவான்.

வலம்புரி சங்கின் முழுமையான பலனை அறிந்த ஒருவன், அதை தனது பூஜையில் வைத்து பூஜித்து, நற்பலன்களைப் பெறுவது போல், கல்பவிருட்சத்தைப் போலிருக்கும் மத்வ சாஸ்திரத்தை சிரத்தையுடன் படித்து, அதன் நற்பயனான ஸ்ரீஹரியின் அருள் மற்றும் அதிலிருந்து மோட்சத்தைப் பெறுகிறான். 'பாக்ய தெய்வமிஹ யோக்யதானுகம் |' (9-23) - ஸ்ரீஹரி அவரவர்களின் தகுதிக்கேற்ப பலன்களைக் கொடுக்கிறான். சோபன பட்டர் இவ்வாறு வலம்புரி சங்கின் ஒப்பீட்டினைக் கொடுத்து, மத்வ மதத்தின் சிறப்பினை விளக்கி, சபையினரை ஆனந்தப்படுத்தினார்.

இப்படி மத்வசாஸ்திரத்தின் அருமை பெருமைகளை எவ்வளவு சிரத்தை பக்தியுடன் அறிவரோ அவ்வளவு புருஷார்த்தங்களை, ஞான பக்திகளை அடைவார்கள் என்பதில் எவ்வித சந்தேகமும் இல்லை என்று சொல்லி பட்டர் மக்களை சமாதானம் செய்தார். இந்த சித்தாந்தத்தை தமது பாஷ்யத்தின் மூலம் வெளிச்சத்திற்கு கொண்டு வந்த ஸ்ரீமதாசார்யர், ருத்ர, இந்திர, பிருஹஸ்பதி ஆசார்யர்களாலும் பூஜிக்கப்படுகிறார். சோபனபட்டர் (பத்பனாப தீர்த்தர்), மத்வ சாஸ்திரத்தை (த்வைத சித்தாந்தத்தை) அனைத்து பண்டித சபைகளில் பரப்பியதாலேயே, ஸ்ரீமதானந்த தீர்த்தர், அவரை பீடத்தில் அமர்த்தி சித்தாந்தத்தை பரப்புவதற்காக நியமித்தார் என்று அறியலாம்.

ஸ்ரீமதாசார்யர், தமது குருகளுக்கு அருளியதை அடுத்த ஸ்லோகத்தில் விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் 36]
**குமததொா$^3$ளு மதிலீனரச்யுத**
**ப்ரமதிக$^3$ள மதிரோக$^3$ தொலகி$^3$ஸி**
**விமலமதியனு கருணிஸலு ப$^3$லு ஶாஶ்வதவதா$^3$ய்து |**
**அமிதஸுந்த$^3$ரமூர்த்தி கோ$^3$குல**
**ரமணனனு ஸ்தா$^2$பிஸுவ யக்$^3$ஞவ**
**க்ரமதி$^3$ நடெ$^3$ஸலனுக்$^3$ஞ்யெயித்த$^1$ரு ||36**

குமததொளு - மாயாவாத மத தத்வங்களில்; மதிலீன - மனம் மயங்கியிருந்த; அச்யுத ப்ரமதிகள - அச்யுதப்ரேக்ஷரின்; மதிரோக - அஞ்ஞானங்களை; தொலகிஸி - போக்கி (நீக்கி); விமலமதியனு - தெளிவான அறிவை; கருணிஸலு - அருளினார்; பலு ஷாஷ்வதவதாய்து - அந்த ஞானம் அவரில் நிரந்தரமாக தங்கியது. அமிதஸுந்தரமூர்த்தி - மிகவும் அழகான மூர்த்தியான; கோகுல ரமணனு - ஸ்ரீகிருஷ்ணனை; ஸ்தாபிஸுவ - நிறுவும்; யக்ஞவ - வேள்வியை; க்ரமதி - முறையே; நடெஸலனுக்யெயித்தரு - செய்ய வேண்டும் என்று தீர்மானித்தார்.

ஸ்ரீமதாசார்யரின் மகிமைகளை தொடர்ந்து இந்த ஸ்லோகத்தில் விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

மாயாவாத மத தத்வங்களில் மனம் மயங்கியிருந்த அச்யுத ப்ரேக் ஷரின் அஞ்ஞானங்களை நீக்கி, தெளிவான அறிவை அருளினார் ஸ்ரீமதாசார்யர். அந்த ஞானம் அவரில் நிரந்தரமாக தங்கியது. மிகவும் அழகான மூர்த்தியான ஸ்ரீகிருஷ்ணனை நிறுவும் வேள்வியை முறையே செய்ய வேண்டும் என்று தீர்மானித்தார்.

ஸ்ரீமத்வர், அச்யுதப்ரேக்ஷரின் அஞ்ஞானங்களைப் போக்கிய விஷயம், மத்வ விஜயம் ஸ்லோகம் 9-31லிருந்து சொல்லப்பட்டுள்ளது.

தனது பயணத்தில் மத்வர் மக்களுக்கு தத்வோபதேசம் செய்தவாறு, ரஜதபீடபுரத்திற்கு வந்தார். மூத்த யதிகள் மற்றும் அச்யுதப்ரேக்ஷர் ஆசார்யரைக் கண்டு மகிழ்ச்சியடைந்தனர். அனந்தேஸ்வரரை மற்றும் குருகளை ஆசார்யர் நமஸ்கரித்தார். ஆசார்யர் முன்னரே அனுப்பியிருந்த பிரம்மசூத்ர பாஷ்யத்தை குருகள் பார்த்திருந்தார். தமது கிரந்தத்தின் மூலம் குருகளின் மனதில் இருந்த அனைத்து அஞ்ஞானத்தையும் போக்கியிருந்தார் ஆசார்யர்.

நிஷ்களங்கம்வ சந்த்$^{3}$ரமண்ட$^{3}$லம் புண்ட$^{3}$ரீகமிவ புல்லதாம் க$^{3}$தம் |
வாரி ஷாரத$^{3}$மிவ ப்ரஸாத$^{3}$வத் சித்தமுச்யுத மதேர்ப்$^{4}$ருஷம் ப$^{3}$பௌ$^{4}$ ||9-36

ஆசார்யரின் பாஷ்யத்தைப் படித்த அச்யுதப்ரேக்ஷரின் மனம், எவ்வித களங்கமும் அற்ற சந்திரனைப் போல, அன்றலர்ந்த தாமரை மலரைப் போல, தெளிவான தண்ணீரைப் போல சுத்தமாக ஆனது.

ஆனனந்த3 ச ஹி மத்4வ சாஸ்திரமா கர்ணயன் குஸமயாக்3ரஹீ புரா |
மோஹ பீ1த லவணோத3கோ முஹு: ப்ராக் பிபாஸுரம்ருதம் பிப3ன்னிவ || 9-37

சித்தாந்தத்தின் மகிமையை அறிவது - உப்பு நீரைக் குடித்தபிறகு சுத்தமான நீரைக் குடித்து வாய் கொப்பளிப்பதைப் போல இருந்தது. மத்வ சாஸ்திரத்தின் சிறப்பினைக் கண்ட அச்யுதப்ரேக்ஷர் மற்றும் மூத்த யதிகள், இதனை மக்களிடம் பிரசாரம் செய்யத் தொடங்கினர்.

உடுப்பியில் ஸ்ரீகிருஷ்ணனின் பிரதிஷ்டை

நன்வனன்ய ஷரணாத்மனாம் ஸதாம் ஸித்3தி4 விக்4ன முக2 தோ3ஷ பே4ஷ2ஜம் |
ஐச்சதச்சல த3யோத3யாத3யம் ரூபபீட2 புரக3: கதா3சன || 9-40

முக்காலும் உணர்ந்தவரான ஸ்ரீமதாசார்யர், பக்தர்களுக்கு அருள்வதற்காக ரஜதபீடபுரத்தில் ஸ்ரீகிருஷ்ணனின் சிலையை பிரதிஷ்டை செய்ய வேண்டுமென்று நினைத்து, மேற்கு கடற்கரைக்குச் சென்றார். அங்கு குளித்து, ஜப தபங்களை முடித்தார். படகிலிருந்து கிடைத்த கோபிசந்தனக் கட்டியை உடைத்து அதிலிருந்த முத்து கிருஷ்ணனை, மத்வ சரோவரத்தில் அபிஷேகம் செய்து, அதில் ஸ்ரீகிருஷ்ணனின் விசேஷ சன்னிதானத்தை உண்டுபண்ணி, அங்கு பிரதிஷ்டை செய்தார்.

'வந்தே வந்த்யம்' என்று ஸ்ரீஹரியை போற்றியவாறு ஸ்ரீமதாசார்யர் கடற்கரைக்குச் சென்றார். துவாரகையிலிருந்து இவருக்காகவே வந்த கிருஷ்ணனைக் கண்டு 'தேவகி நந்தன' என்றவாறு பாடி, 'த்வாதச ஸ்தோத்திரம்' என்னும் ஸ்தோத்திரத்தை இயற்றினார். 'சித்திவிக்ன முக தோஷ பேஷஜம் |' (9-40) சஜ்ஜனர்களை கடைத்தேற்றவும், மோட்சத்தின் பாதைக்கான தடைகளை போக்குவதற்காகவும், அழகான கடெகோலு கிருஷ்ணனை விதிபூர்வகமாக பிரதிஷ்டை செய்தார்.

ஸ்ரீமதாசார்யரின் இரண்டாவது பதரி யாத்திரையின்போது அவர் செய்த அற்புதங்களை அடுத்த ஸ்லோகத்தில் விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

இத்துடன் மத்வ விஜயம் ஒன்பதாவது சர்க்க விஷயங்கள் முடிவடைந்தன. அடுத்த ஸ்லோகத்திலிருந்து பத்தாம் சர்க்க ஸாரம் விளக்கப்பட்டுள்ளது.

**[ஸ்லோகம் 37]**
**ஒந்து$^3$ தி$^3$ன மார்க்க$^3$த$^3$லி ப$^3$ருதிரெ**
**நிந்த்$^3$ய நரபதி நெலவனகி$^3$யலு**
**நந்தி$^3$தீர்த்தரிகி$^3$த்தனாக்$^3$ஞெய ஒந்த$^3$னரியதெ$^3$லெ |**
**ஹிந்தி$^3$னனுப$^4$வஶூன்யரிகெ$^3$ ஹே**
**கெ$^3$ந்து$^3$ தோரலு பூ$^4$மியகி$^3$யுதெ**
**நிந்த$^3$னான்ருப விவஷனாத$^3$னு முந்தெ$^3$ ஸாகி$^3$த$^3$ரு ||37**

ஒந்து தின மார்க்கதலி - ஒரு நாள் ஸ்ரீமதாசார்யர் பயணத்தில்; பருதிரெ - இருந்தபோது; நிந்த்ய நரபதி - இழிவான அரசன் (ஈஸ்வரதேவ); ஒந்தனரியதெலெ - (அவர் யார்) என்று எதுவும் அறியாமலேயே; நெலவனகியலு - (கிணறுக்காக) பூமியை தோண்டுமாறு; நந்திதீர்த்தரிகெ - ஆனந்ததீர்த்தருக்கு; ஆக்ஞெய - ஆணையை; இத்தனு - இட்டான்; ஹிந்தினனுபவ ஷூன்யரிகெ - இதுவரை இப்படிப்பட்ட வேலையை அறியாதவர்களுக்கு; ஹேகெந்து தோரலு - எப்படி என்று செய்து காட்டு என்று சொல்ல; பூமியகியுதே - பூமியை தோண்டியவாறே; நிந்தனான்ருப - அந்த அரசன் நின்றான்; விவஷனாதனு - மயங்கினான்; முந்தே ஸாகிதரு - ஸ்ரீமதாசார்யர் முன்னே நடந்தார்.

ஸ்ரீமதாசார்யரின் இரண்டாவது பதரி யாத்திரையின்போது அவர் செய்த அற்புதங்களை இந்த ஸ்லோகத்தில் விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

ஒரு நாள் ஸ்ரீமதாசார்யர், தனது பயணத்தில் இருந்தபோது, இழிவான அரசன் (ஈஸ்வரதேவ), ஆசார்யர் யார் என்று தெரியாமலேயே, கிணறுக்காக பூமியை தோண்டுமாறு ஆனந்ததீர்த்தருக்கு ஆணையிட்டான். இதுவரை இப்படிப்பட்ட வேலையை

செய்யாதவர்கள் ஆகையால், எப்படி செய்வது என்று நீ செய்து காட்டு என்று சொல்ல, அந்த அரசனும் பூமியை தோண்டியவாறே மயங்கி நின்றான். ஸ்ரீமதாசார்யர் முன்னே நடந்தார்.

மத்வ விஜய பத்தாம் சர்க்க விஷயங்கள் துவங்குகின்றன.

க்வசிதீ$^{3}$ஷ்வர தே$^{3}$வமேஷ பூ$^{4}$பம் க$^{2}$னனம் பாந்த$^{2}$ ஜனம் விதா$^{4}$பயந்தம்
ஸ்வமபி ப்ரதி சோத$^{3}$யந்தமூசே க்ரியயா நோऽகுஷலான்
ப்ரபோத$^{4}$யேதி ||10-4

ஈஸ்வரதேவ என்னும் அரசன், தனது நாட்டிற்கு வரும் பயணிகளை, ஏரி/கிணறுக்காக மண்ணை வெட்டி உதவுமாறு கேட்பான். அந்த அரசின் வழியே பத்ரிக்குச் செல்லவிருந்த மத்வரைப் பார்த்து அந்த அரசன் 'நீங்கள் இந்த குழி தோண்டும் வேலையை செய்துவிட்டு, முன்னர் செல்லுங்கள்' என்றான். அதற்கு மத்வர் 'நமக்கு இந்த வேலை தெரியாது. ஒருமுறை நீ அதை செய்துகாட்டு' என்றார்.

ப்ரகாரம் ப்ரகடீகர்தும ஆரப்$^{4}$ய விரராம நோ |
மஹீயோ மதி மாஹாத்ம்யாத்$^{3}$ வைவஷ்யேன க$^{2}$னனம் க$^{2}$ல: ||10-5

சரி என்று வேலையைத் தொடங்கிய ஈஸ்வரதேவ, அதையே தொடர்ச்சியாக செய்துகொண்டே இருந்தான். ஆசார்யரும் அவனை அப்படியே விட்டு, முன்னர் பயணத்தைத் தொடர்ந்தார்.

நானெனேனா நேனானேனோ நூனேன நனு நுன்னா: |
நானானா நோ நூனம் நானேனானூனனாऽனுன்ன: ||10-6

அனைத்து ஜீவராசிகளையும் நடத்தும் வாயுதேவரின் மூன்றாவது அவதாரமான மத்வாசார்யர், ஈஸ்வரதேவனை குழி தோண்டும் வேலையில் ஈடுபடுத்தியதில் வியப்பொன்றும் இல்லை. பிராணனையும், மனதையும் அவரே கட்டுப்படுத்துகிறார் அல்லவா?

ஸ்ரீமத் ஸுமத்வ விஜய ப்ரமேய மாலிகா என்னும் தனது கிருதியில் மாதனூரு ஸ்ரீவிஷ்ணு தீர்த்தர், மத்வ விஜயத்தின் பத்தாம் சர்க்கத்தின் சுருக்கத்தையும், இந்த சர்க்கத்தை படிப்பதால் வரும் பயனையும் இவ்வாறு சொல்கிறார்.

யதா2 ஹரே: கதா2லாப: ஸுகா2ய க்ருதினாம் ததா2 |
ஸ்வஸ்யாபீதி விசித்ராணி சாரித்ராணி சகார ஸ: ||11||

ஸ்ரீஹரியின் அற்புத சரித்திரங்களை பக்தியுடன் கேட்கும் சஜ்ஜனர்களுக்கு சுகமயமான மோட்சம் எப்படி கிடைக்கிறதோ, அதைப்போலவே, தம்முடைய அமானுஷ சரித்திரங்கள் மோட்சத்திற்குக் காரணம் ஆகின்றன என்பதைக் காட்டுவதற்காக, ஒரு அரசனையே பூமியைத் தோண்டுவதற்கு செய்த செயல்; அவனின் மொழியிலேயே அவனிடம் பேசியது; புலி ரூபத்தினால் வந்த தைத்யனைக் கொன்றது; உணவிற்குப் பிறகு ஆயிரக்கணக்கில் வாழைப்பழம் தின்று, 30 குடம் பால் குடித்தது; உலர்ந்த மரத்தினை காய்க்க வைத்தது; என அற்புத மகிமைகளை செய்து காட்டினார்.

அபேக்ஷிதாகி2லாவாப்திர் மோக்ஷ சாஸ்த்ர ஸுலோலதா |
விக்4னனாஷ: ஸாத4னானாம் ஸ்வீயமாஹாத்ம்ய போ3த4னம் ||20||

பத்தாம் சர்க்கம் : விரும்பியவை நிறைவேறுதல்

ஸ்ரீமதாசார்யரின் பயணத்தில் அவர் நடத்திக் காட்டிய மகிமைகளை அடுத்த ஸ்லோகத்திலும் தொடர்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் **38]**
**தி3விஜெ க3ங்கெ3ய தா3டி1 ஶிஷ்யர**
**நிவஹதிந்3தொ3ட3கூ3டி3 ப3ருதிர**
**லிவர கொல்லலு ந்ருபன தூ3தர ப3ந்த3ரெது3ரனலி |**
**விவித3 யுகுதிக3ளிந்த3 தடெ3யுத**
**ஸவினுடி3ய கா3ம்பீ4ர்யதி3ந்த3லி**
**யவன நரபதியிந்த3 பொந்தி3த3ரர்த்த4ராஜ்யவனு ||38**

திவிஜெ - தேவலோகத்திலிருந்து பிறந்தவளான; கங்கெய தாடி - கங்கையை தாண்டி; ஷிஷ்யர நிவஹதிந்தொடகூடி - சிஷ்யர்களின் குழுவினருடன் சேர்ந்து; பருதிரலிவர - வந்து கொண்டிருக்கும் இவரை; கொல்லலு - கொல்வதற்கு; ந்ருபன தூதர - அரசனின் தூதர்கள்; பந்தரெதுரனலி - எதிரில் வந்தார்கள்; விவித - பற்பல; யுகுதிகளிந்த - தந்திரங்களால் (வகைகளில்); தடெயுத - அவர்களை தடுத்து; ஸவினுடிய - இனிமையான பேச்சுக்களால்; காம்பீர்யதிந்தலி - மிகவும் கம்பீரத்துடன்; யவன - வேறொரு (இஸ்லாமிய); நரபதியிந்த -

அரசனிடமிருந்து; அர்த்த ராஜ்யவனு - பாதி ராஜ்ஜியத்தை; பொந்திதரு - பெற்றார்.

ஸ்ரீமதாசார்யரின் பயணத்தில் அவர் நடத்திக் காட்டிய மகிமைகளை இந்த ஸ்லோகத்திலும் தொடர்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

தேவலோகத்திலிருந்து பிறந்தவளான கங்கையைத் தாண்டி, தனது சிஷ்யர்களின் குழுவினருடன் சேர்ந்து வந்து கொண்டிருக்கும் இவரைக் கொல்வதற்கு, அரசனின் தூதர்கள் எதிரில் வந்தார்கள். பற்பல தந்திரங்களால் அவர்களைத் தடுத்து, தனது இனிமையான பேச்சுக்களால் மிகவும் கம்பீரத்துடன், அந்த இஸ்லாமிய அரசனிடமிருந்து பாதி ராஜ்ஜியத்தைப் பெற்றார்.

மத்வ விஜயம் பத்தாம் சர்க்க விஷயங்கள் தொடர்கின்றன.

வடக்கு நோக்கி தன் சிஷ்யர்களுடன் பயணத்தை முன்னெடுத்த ஆசார்யர், படகுகளே இல்லாத கங்கைக் கரைக்கு வந்து சேர்ந்தார். சிஷ்யர்களை தமக்குப் பின்னால் வரிசையாக கைபிடித்துக் கொள்ளுமாறு சொல்லி, யாருடைய உதவியும் இன்றி கங்கையை அனாயாசமாகக் கடந்தார். அந்தபக்கம் இருந்த இஸ்லாமிய அரசனின் சேவகர்கள் :

வாரயத வாரயத வைரி ஸுஹ்ருதோ[3]மூன் மாரயத மாரயத பாரக[3]மனாத் ப்ராக் |
ஆபதத ஆலபத இத்யவததுச்சை: ஸ த்வரக ராஜ புருஷானுசித வாசா ||10-10 -

யாரோ எதிரி அணியினர் நம்மிடத்திற்கு வந்துவிட்டனர். வேகமாக வாருங்கள். அவர்களைக் கொல்லுங்கள்' - என்று கூவத் தொடங்கினான். அந்த சேவகனைப் பார்த்து, ஸ்ரீமத்வர் - 'ஏ முட்டாளே! நீரில் இறங்கும் சாகசத்தை செய்யாதீர்கள். அதிக ஆட்கள் இருக்கும் உங்களுக்கு, சிலரே இருக்கும் எங்களைப் பார்த்து ஏன் பயம்? உங்கள் அரசனைப் பார்க்கவே வந்திருக்கிறோம்' என்று அவர்கள் மொழியிலேயே பதிலளித்தார்.

ஒரு பாம்பாட்டி கருட மந்திரத்தை ஜெபித்து, பாம்புகளால் தனக்கு எந்தப் பிரச்னையும் வராதிருக்கச் செய்வதுபோல, கருடரைவிட சிறந்தவரான மத்வர், அந்த ராஜனின் சேவகர்களை தடுத்து, தம் சிஷ்யர்களை மரண பயத்திலிருந்து காத்தார்.

நிர்விகாரசரிதோऽபி பரீத: க்ரூர கிங்கர ஸஹஸ்ர தயேன |
ஸ வ்ரஜன்னுத3லஸஜ்ஜக3தீ3ஷ: ஸிம்ஹராடி3வ ஸ்ருகா3ல ஸமூஹே ||10-13

நரிகளின் கூட்டத்தில் சிங்கம் தைரியமாக முன்னேறுவதைப்போல, மத்வரும் நடந்தார். சிறந்ததும் அழகானதுமான மத்வரின் உடற்கட்டினைப் பார்த்து ராஜன் 'நற்புத்தியைக் கொண்ட மகானுபாவரே! யமதூதர்களைப் போல இருக்கும், பயங்கரமான எனது சேவகர்களிடமிருந்து தப்பினீர். படகுகளே இல்லாமல் கங்கையை எப்படிக் கடந்தீர்?' என்று கேட்டான்.

யோஸௌ தே3வோ விஸ்வதீ3ப: ப்ரதீ3ப்த: குர்ம: ஸர்வம் தத்பரானுக்3ரஹேண!
யாமஸ்தாவத் தூ1ர்ணமாஷாமுதீ3சீம் இத்யாத்3யம் தத்3பா4ஷ2யா சித்ரவாக்யம் || (10-17)

மொத்த உலகத்திற்கே ஒளி கொடுக்கும் சூரியனின் உள்ளிருக்கும் ஸ்ரீமன் நாராயணனின் விசேஷ அருளினால் அனைத்தையும் செய்கிறோம். இப்போது வடநாட்டிற்குச் செல்கிறோம்' என்று அரசனின் மொழியிலேயே அவன் வியக்கும்படி பதிலளித்தார்.

கா3ம்பீ4ர்யம் த்4ருதிமுரு வீர்யமார்ய பா4வம்
தேஜோऽக்3ர்யம் கி3ரமபி தே3ஷ கால யுக்தாம் |
ராஜாऽஸ்ய ஸ்புடமுப லப்4ய விஸ்மிதோऽஸ்மை
ராஜ்யார்த்த2ம் ஸபதி3 ஸமர்ப்பயாம்ப3பூ4வ || 10-18

ஸ்ரீமத்வாசார்யரின் காம்பீர்யம், தைரியம், சாமர்த்தியம், அறிவு, பேச்சு ஆகியவற்றைக் கண்டு வியந்த அந்த ராஜன், தனது அரசில் பாதியையே கொடுக்க முயன்றான். மத்வரை எதிரி என்று நினைத்து கொல்ல நினைத்தனர் அரசனின் சேவகர்கள். ஆனால் அரசனோ தனது அரசில் பாதியையே பரிசாக அளிக்கிறான். அவர்களை தன

வலிமையால் வீழ்த்தும் வல்லமை பெற்றிருந்தாலும், பல சந்தர்ப்பங்களில் எப்படி நடந்து கொள்ளவேண்டும் என்பதை தன் சிஷ்யர்களுக்குக் காட்டுவதற்காக இப்படி செய்தார். அவருக்கு வேண்டியதைக் கொடுக்கிறேன் என்று அரசன் சொன்னாலும், சிறுவிஷயங்களில் ஆசை கொள்ளாத மத்வர், அதை மறுத்து முன்னே பயணித்தார்.
இரண்டாம் முறையான பதரி பயணத்தின் மகிமைகளை அடுத்த ஸ்லோகத்திலும் தொடர்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் 39]
**ஹோத$^3$ஹோதெ$^3$டெ$^3$க$^3$ளலி பரிபரி**
**பா$^4$தி$^4$ஸித$^3$ ஶத்ருக$^3$ள கெ$^3$லியுத**
**பா$^3$த$^3$ராயண ஷிலெய படெ$^3$த$^3$ரு த$^4$ர்மஸூதனிந்த$^3$ |**
**வேத$^3$னாயகனாக்ஞெயலி பர**
**மாத$^3$ரவ தோரித$^3$ரு த$^3$ஷமதி**
**ஶோதி$^4$ஶித$^3$ தாத்பர்யக$^3$ள பேளித$^3$ரு பா$^4$ரதகெ ||39**

ஹோதஹோதெடெகளலி - சென்ற இடங்களிலெல்லாம்; பரிபரி - பலவிதமாக; பாதிஸித - எதிர்த்த; ஷத்ருகள - எதிரிகளை; கெலியுத - வென்றவாறு; தர்மஸூதனிந்த - ஸ்ரீவேதவ்யாஸரிடமிருந்து; பாதராயண ஷிலெய - வ்யாஸ முஷ்டிகளை; படெதரு - பெற்றார்; வேதனாயகன - வேத நாயகனான வேதவ்யாஸரின்; ஆக்ஞெயலி - ஆணையில்; பரமாதரவ தோரிதரு - சிறந்த பக்தி / மரியாதையை காட்டினார்; தஷமதி - ஸ்ரீமதாசார்யர்; பாரதகெ - மகாபாரதத்திற்கு; ஷோதிஸித - நிர்ணயம் செய்த; தாத்பர்யகள - தாத்பர்யங்களை; பேளிதரு - எடுத்துரைத்தார்.

இரண்டாம் முறையான பதரி பயணத்தின் மகிமைகளை இந்த ஸ்லோகத்திலும் தொடர்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

சென்ற இடங்களிலெல்லாம், பலவிதமாக எதிர்த்த எதிரிகளை வென்றவாறு, ஸ்ரீவேதவ்யாஸரிடமிருந்து, வ்யாஸ முஷ்டிகளைப் பெற்றார். வேத நாயகனான வேதவ்யாஸரின் ஆணையின்படி, சிறந்த பக்தி / மரியாதையை காட்டினார் ஸ்ரீமதாசார்யர். மகாபாரதத்திற்கு நிர்ணயம் செய்த தாத்பர்யங்களை எடுத்துரைத்தார்.

மத்வ விஜய பத்தாம் சர்க்க விஷய மகிமைகள் இங்கு தொடர்கின்றன.

கதா$^{3}$சிச்சோராணாம் நிகரமவலோக்யாபி$^{4}$ பததாம்
அவஸ்தா$^{2}$ப்ய ஸ்வீயான் கரக$^{3}$பட பிண்டா$^{3}$ர்த்த$^{2}$ மதிக்ருத் |
சரன்னேதேஷ்$^{2}$வேதா$^{1}$னத$^{2}$ மித$^{2}$ இஹ்ராகா$^{4}$த யத$^{3}$ஹோ
விபு$^{4}$: ஸம்மோஹ ப்ராக$^{3}$ விஜய இவ ஸம்ஷப்தக க$^{3}$ணான் || 10-20

பயணத்தில் இவரிடமிருந்த பணத்தை அபகரிக்க ஒரு முறை கொள்ளையர்கள் இவர்கள் மேல் பாய்ந்தனர். ஆசார்யர் உடனடியாக ஒரு துணியை மூட்டையாகக் கட்டி, அதில் செல்வம் இருப்பதுபோல் பாவித்து, அவர்களுக்கு நடுவில் வைத்தார். கொள்ளையர்கள் அந்த மூட்டையை எடுப்பதற்காக, தங்களுக்குள் ஒருவருக்கொருவர் அடித்துக்கொண்டு இறந்தனர். இது எப்படி இருந்ததென்றால், மகாபாரதப் போரினில், சம்சப்தகர்கள் அர்ஜுனனை எதிர்த்துப் போரிட்டபோது, அர்ஜுனன் சம்மோகன அஸ்திரத்தைப் பிரயோகித்ததால், அவர்கள் அதற்கு வசப்பட்டு, தங்களுக்குள்ளேயே அடித்துக் கொண்டு இறந்தனர். ஆசார்யர் பயணத்தைத் தொடர்ந்தார்.

அன்யத்ர ச சோரான் த$^{4}$ன்ய ப்ரவரோSஸௌ
ஷூரான் ஷத ஸங்கா$^{3}$ன் ப்ராப்தான் ஸ்வ ஜிகா$^{4}$ம்ஸூன் |
ஏகேன து சிஷ்யேணாSக்ருஷ்$^{2}$ட குடா$^{2}$ரான்
நிஸ்தாடி$^{3}$த யூத்$^{2}$யானத்$^{3}$ராவயத த்$^{3}$ராக் || 10-21

இன்னொருமுறை, மிகவும் பயங்கரமான வலிமையுள்ள நூறுக்கும் மேற்பட்ட கொள்ளையர் கும்பலொன்று ஆசார்யரின் மற்றும் அவரது சிஷ்யர்களின் மேல் பாய்ந்தபோது, தமது சிஷ்யரான ஸ்ரீஉபேந்திர தீர்த்தரின் (புத்திகெ மடத்து மூலபுருஷர்) மூலமாக, திருடர்கள் கையிலிருந்த கோடலியைப் பறித்து, அதன்மூலமாக அவர்கள் அனைவரையும் ஓடஓட விரட்டினார்.

ப்ராப ஸ நாராயணத: ஷுத்$^{3}$த$^{4}$ ஷிலாத்ம ப்ரதிமா: |
யாஸு ஸ பத்$^{3}$மா ஸஹிதோ தோ$^{3}$ஷ்$^{2}$யஹித: ஸன்னிஹித: || 10-24

மேல் பதரிக்குச் சென்ற ஸ்ரீமத்வாசார்யர், வேதவியாசரிடமிருந்து, லட்சுமி நாராயணின் சன்னிதானம் இருக்கும் எட்டு சிலாரூப-ப்ரதிமைகளைப் பெற்றார். வேதவியாசர் அருளிக் கொடுத்த

அபூர்வமான அந்த பிரதிமைகளுக்கு 'வியாசமுஷ்டி' என்று பெயர். மொத்தம் எட்டு இருந்தன. இவற்றில் ஸ்ரீலட்சுமி நாராயணரின் சன்னிதானம் இருந்ததால், இவை லட்சுமி நாராயண பிரதிமைகள் என்றும் அழைக்கப்பட்டன.

பாராஷர்ய: பரதத்வ ப்ரஸித்$^{3}$தை தாத்பர்யார்த்த$^{2}$ம் பரமம் பா$^{4}$ரதஸ்ய |
வ்யக்தும் வக்த்ரும் நியுனக்தி ஸ்ம ஸாக்ஷாத்$^{3}$ ஏனம் த$^{4}$ன்யம் பு$^{4}$வனே மன்யமான: || 10-25

ஸ்ரீமதாசார்யர், வாயுதேவரின் அவதாரம் என்பதை அறிந்திருந்த, பராசர முனிவரின் மகனான ஸ்ரீவேதவ்யாஸர், இவரே பரதத்வத்தின் உண்மையான ரகசியங்களை விளக்க வல்லவர் என்பதை அறிந்து, மகாபாரதத்திற்கு நிர்ணய கிரந்தம் எழுதுமாறு ஆணையிட்டார்.

ஸ்ரீமதாசார்யர் தனது இரண்டாம் பதரி யாத்திரையை முடித்துக் கொண்டு, திரும்பி வரும் விஷயத்தை அடுத்த ஸ்லோகத்தில் விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

**[ஸ்லோகம் 40]**
**ஹோதி$^{3}$கெவஸனவு தோயத$^{3}$ந்த$^{3}$தி$^{3}$**
**நதி$^{3}$ய ப்ரவாஹவ தா$^{3}$டி ப$^{3}$ந்த$^{3}$ரு**
**ம்ருது$^{3}$லெ க$^{3}$ங்கெ$^{3}$யு பூஜிஸித$^{3}$ளீத$^{1}$னனு ப$^{4}$குதியலி |**
**முத$^{3}$கெ ஶிஷ்யர வ்ருந்த$^{3}$வெல்லவ**
**கத$^{3}$னத$^{3}$லி கெடு$^{3}$ஹித$^{3}$ரு பி$^{4}$க்ஷவ**
**நொத$^{3}$கி$^{3}$ஸித$^{3}$ ஶிவ த்$^{4}$விஜன வேஷதி$^{3}$ கா$^{3}$னகுஶலரிகெ$^{3}$ ||40**

ஹோதிகெவஸனவு - உடுத்தியிந்த ஆடை; தோயதந்ததி - நனையாமல்; நதிய ப்ரவாஹவ தாடி - கங்கையை தாண்டி; பந்தரு - வந்தார்; ம்ருதுலெ - அழகான பெண் வடிவில்; கங்கெயு - கங்கை வந்து; ஈதனனு - ஸ்ரீமதாசார்யரை; பகுதியலி - பக்தியுடன்; பூஜிஸிதளு - பூஜித்து வணங்கினாள்; சிஷ்யர வ்ருந்தவெல்லவ - சிஷ்யர்கள் அனைவரையும்; கதனதலி - மல்யுத்தப் போட்டியில்; முதகெ - மகிழ்ச்சியுடன்; கெடுஹிதரு - தோற்கடித்தார்; கானகுஷலரிகெ - வேத பரிபாலனம் செய்பவரான ஸ்ரீமத்வருக்கு; ஷிவ - ருத்ரதேவர்; த்விஜன வேஷதி - பிராமண வேடத்தில்; பிக்ஷவனொதகிஸித - பிக்ஷையை கொடுக்கச் செய்தார்.

ஸ்ரீமதாசார்யர் தனது இரண்டாம் பதரி யாத்திரையை முடித்துக் கொண்டு, திரும்பி வரும் விஷயத்தை இந்த ஸ்லோகத்தில் விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

உடுத்தியிருந்த ஆடை நனையாமல், கங்கையைத் தாண்டி வந்தார். கங்கையானவள், அழகான ஒரு பெண் வடிவில் வந்து, இவரை பக்தியுடன் பூஜித்து வணங்கினாள். சிஷ்யர்களை மல்யுத்தப் போட்டியில் தோற்கடித்தார். வேத பரிபாலனம் செய்பவரான ஸ்ரீமத்வருக்கு, ருத்ரதேவர் பிராமண வேடத்தில் வந்து பிக்ஷையைக் கொடுக்கச் செய்தார்.

மத்வ விஜய பத்தாம் சர்க்க விஷயங்கள் இங்கும் தொடர்கின்றன.

பல தீர்த்தங்கள் மற்றும் க்ஷேத்திரங்களில் இருக்கும் ஸ்ரீஹரி ரூபங்களை வணங்கியவாறு, ஆசார்யர் தமது சிஷ்யர்களுடன் மறுபடி கங்கை நதிக்கரைக்கு வந்தார். 'தீர்த்தேஷு தீர்த்தேஷுச சௌக்ய தீர்த்த: க்ஷேத்ரேஷு ச க்ஷேத்ர விதாம் வரிஷ்ட: |' (10-26) கங்கை வேகத்துடன் பாய்ந்து கொண்டிருந்தது. கடப்பதற்கு படகுகள் இல்லை. சூரியன் அஸ்தமிக்கும் நேரம். சிஷ்யர்கள் அங்கங்கே அமர்ந்துவிட்டனர். ஜலஸ்தம்ப வித்யையை அறிந்திருந்த ஸ்ரீமத்வர் அனாயாசமாக கங்கையைக் கடந்து அக்கரைக்குச் சென்றார். ஆசார்யரின் மகிமையை மறந்த சிஷ்யர், அவரைக் காணாமல் தேடினர். அவருக்கு என்னவாயிற்றோ என்று கவலைப்பட்டனர். ஹனுமந்தனாக கடலைத் தாண்டியது, பீமனாக கங்கை வெள்ளத்தில் ஓடியாடி விளையாடி என ஆசார்யரின் அவதாரங்களை மறந்தனர்.

பத3ம் பஷோர்வோ வினதா தனூஜ: தீர்த்2வா நதீ3ம் தாவத3தீ3ன ஸத்வ: அனார்த்3ரவாஸா: ஸ குதூஹலார்த்3ரை: ந்ருதே3வ பூ4தே3வ முக்யைர்வவந்தெ ||10-30

ஆடைகூட நனையாமல் கங்கையை அனாயாசமாக கடந்துவந்த ஆசார்யரை, அந்தக் கரையிலிருந்த ராஜன் வியப்புடன் பார்த்தான். மக்கள் இவரை மகான் என்று அறிந்து வணங்கினர். பின், அரசன் படகுகளை ஏற்பாடு செய்து, ஆசார்யரின் சிஷ்யர்களை அந்தப்பக்கத்திலிருந்து வரச்செய்தான். கரையைக் கடந்து வந்த சிஷ்யர்கள், சபையில் புன்னகையுடன் வேதமூர்த்தி நான்முகப்

பிரம்மனைப் போல அமர்ந்திருந்த ஆசார்யரைக் கண்டு வியப்புடன் மகிழ்ச்சியடைந்தனர்.

கு3ரு ப்ரபvர்ஹஸ்ய பதா3ரவிந்த3ம் விதூ3ரத: ஸா ப்ரணநாம மூர்தா |
ஔதா3ர்ய ஸௌந்த3ர்ய தனும் தனும் தாம் ஆலக்ஷ்ய சிஷ்யைரதி விஸ்மிதம் தை: ||10-36

கங்கைக் கரையிலிருந்த அஸ்தினாபுரத்திற்கு ஆசார்யர் பயணித்து, அங்கு சாதுர்மாஸ்ய விரதத்தை மேற்கொண்டார். கங்காதேவி ஆசார்யரை வந்து வணங்கினாள். மிக அழகான பெண் ரூபத்தில் வந்து வணங்கிய கங்காதேவியைக் கண்ட சிஷ்யர்கள் வியப்படைந்தனர். ருத்ராதி தேவர்களாலும், சரஸ்வதி பாரதியராலும் வணங்கப்படும் ஆசார்யரை, கங்காதேவி வந்து வணங்கியதில் எந்தவொரு ஆச்சரியமும் இல்லை.

ஒரு சமயம் சிஷ்யர்களுக்கு - ஆசார்யரைவிட தாம் இளையவர்கள். அவரைவிட அதிகபலம் பொருந்தியவர்கள் - என்ற எண்ணம் / கர்வம் தோன்றியது. அப்போது ஆசார்யர் தமது சிஷ்யர்களை ஒருசேர மல்யுத்தத்திற்கு அழைத்தார்.

நியுத்த3 ஸித்3தை4 யுக3ப1த்3தி4 வீரம் மன்யா ப4வந்தோsபி பதந்து மாம் த்3ராக் |
ஸமஸ்த ஷக்திம் ந யுனக்தி ய: ஸ்வாம் அத்ராஸ்மதாக்ஞாம் ஸ நிராக1ரோதி || 10-38

ஒரே நேரத்தில் ஆசார்யருடன் மல்யுத்தம் செய்ய வந்த சிஷ்யர்களை (15 வாலிப சிஷ்யர்கள்) தன் திறமையால் வென்று, சிரித்தவாறு ‘சாமர்த்தியம் இருந்தால் மேலே இழுங்கள்’ என்றார்.

ஸௌமேரவம் கௌ3ரவமாவஹந்தி த1வாங்க3மங்காங்குvலயஸ்ச நோsங்கே3 |
புரா வினஷ்யாம இதோ1 த3யாளோ ஸ்வாமின் விமுஞ்ச்யேத்ய வத3ம்ஸ்ததா3 தே | (10-40).

குருவே, உங்களில் விரல்கள் எங்கள் மேல் மேருமலையைப் போல பாரமாக இருக்கின்றன. அதைத் தாங்க முடியாமல் நாங்கள்

இறந்துவிடுவோம். எங்களை தயவு செய்து விடுவிக்கவும்' என்று சிஷ்யர்கள் வேண்டினர். ஆசார்யரின் மகிமையை அறிந்து சிஷ்யர்கள் பிரமித்தனர். தன் கண் இமையினாலேயே ருத்ரர், இந்திரர் முதலான தேவர்கள் ஆளும் இந்த உலகத்தினை கட்டுப்படுத்தக்கூடிய வல்லமை பெற்ற ஆசார்யருக்கு, இந்த சிஷ்யர்கள் எம்மாத்திரம்?.

விப்ராத்$^{1}$மேஷ: க்ஷணார்த்த$^{2}$ம் க்ருத நதி$^{1}$ரஷிதி ஶ்ரீர்ஹ்ருஷிகேஷ தே$^{3}$ஷே
ஸ்பஷ்டம் இஷ்$^{2}$டோऽப்யத்ருஷ்ட: ஸபதி$^{3}$ விஹிதவான் விஸ்மயம் தே$^{3}$ஹ பா$^{4}$ஜாம் |
ஸ்வப்னே ஸ்வ ப்ரேரிதான்ய ஸ்தல க$^{3}$ நிஜ நரோ பா$^{1}$ஹ்ருதைர்ப$^{4}$க்ஷ்ய போ$^{4}$ஜ்யை:
ப்ராச்யை: ப்ராபோ$^{4}$ஜயத் ஸ்வம் கு$^{3}$ருமகி$^{2}$ல கு$^{3}$ரும் வேத$^{3}$யன் வேத$^{3}$ ப$^{3}$ந்து$^{3}$ம் || 10-50

தமது பயணத்தில் அடுத்து ஹ்ருஷிகேசத்திற்கு வந்தார் ஆசார்யர். அங்கு ருத்ரதேவர் ஒரு பிராமண ரூபத்தில் வந்து, அனைவரின் முன்னிலையில் ஆசார்யரை விழுந்து வணங்கி, அவரை பிக்ஷைக்கு அழைத்து, உடனே பார்வையிலிருந்து மறைந்தார். பிறகு இன்னொருவரின் கனவில் வந்த ருத்ரதேவர், அவனுக்கு ஆணையிட்டு, அவன் மூலமாக ஆசார்யருக்கு பிக்ஷை செய்வித்தார். அனைவருக்கும் குருவான மத்வர், தமக்கும் குருவானவர் என்று இதன்மூலம் ருத்ரதேவர் தெரிவித்தார்.

இத்துடன் மத்வ விஜய பத்தாம் சர்க்க விஷயங்கள் முடிவடைந்தன. அடுத்த ஸ்லோகத்திலிருந்து பதினோறாம் சர்க்க விஷயங்கள் வருகின்றன.

ஶ்ரீமதாசார்யரின் பாடம் எடுக்கும் சிறப்பினை அடுத்த ஸ்லோகத்தில் விவரிக்கிறார் ஶ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

**[ஸ்லோகம் 41]**
**பரிபரிய லீலெக$^{3}$ளனீபரி**
**சரிஸூதிரலானந்த$^{3}$தீர்த்த$^{2}$ரு**
**ப$^{3}$ரனிக$^{3}$ம ஸூத்ரேதிஹாஸக$^{3}$ளரியலாத$^{3}$ரதி$^{3}$ |**
**நெரெதி$^{3}$ருவ ஶிஷ்யர ஸமூஹக$^{3}$**

**ளரியுவந்த[3]தி[3] போ[4]தி[4]ஸுத்திரெ**
**உரக[3]பதி ஸனகாதி[3]முனிக[3]ள ஸஹித கேளித[3]னு ||41**

ஈபரி - இப்படியாக; பரிபரிய - விதம்விதமான; லீலெகளனு - லீலைகளை; ஆனந்ததீர்த்தரு - ஸ்ரீமதாசார்யர்; சரிஸுதிரலு - செய்து வந்தார்; பர நிகம - வேத; ஸூத்ர இதிஹாஸகளு - ஸூத்ர இதிகாசங்களை; அரியலு - அறிவதற்காக; ஆதரதி - பக்தி மரியாதையுடன்; நெரெதிருவ - நிறைந்திருக்கும்; சிஷ்யர - சிஷ்யர்களின்; ஸமூஹகளரியுவந்ததி - கூட்டம், அறியுமாறு; போதிஸுத்திரெ - பாடம் எடுத்துக் கொண்டிருக்கையில்; உரகபதி - சேஷதேவர்; ஸனகாதிமுனிகள ஸஹித - சனகாதி முனிவர்களுடன் சேர்ந்து; கேளிதனு - கேட்டார்.

ஸ்ரீமதாசார்யரின் பாடம் எடுக்கும் சிறப்பினை இந்த ஸ்லோகத்தில் விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

இப்படியாக விதம்விதமான லீலைகளை ஸ்ரீமதாசார்யர் செய்து வந்தார். வேத ஸூத்ர இதிகாசங்களை அறிவதற்காக, பக்தி மரியாதையுடன் நிறைந்திருக்கும் சிஷ்யர்களின் கூட்டம் அறியுமாறு, பாடம் எடுத்துக் கொண்டிருக்கையில், சேஷதேவர், ஸனகாதி முனிகளுடன் சேர்ந்து வந்து ஆசார்யரின் பாடம் கேட்டார்.

மத்வ விஜய பதினோறாம் சர்க்க விஷயங்கள் இங்கு துவங்குகின்றன.

ப்ரசுராந்தர ப்ரவசனம் ப[2]ணிராட் உப ஷுஸ்ருவான் ஸ ஸனகாதி[3] முனி: |
க[3]க[3]னேऽல்ப த்[3]ருஷ்டவபுரத்ர ஜனை: த்வரிதம் நிலீன ருசிராப பத[3]ம் ||11-1
அதி சித்ர தா[4]ம்னி நிஜ தா[4]ம்னி ரதம் ஸ ஸஹஸ்ர மஸ்தகமனந்தமமும் |
முனயோऽபி[4] வாத்[3]ய வினயாபரணா: வரமன்வயுஜ்ஜத ததா[3]ऽர்த்த[2]மிமம் ||11-2

ஒரு முறை ஸ்ரீமதாசார்யர், ஒரு வளர்பிறை நாளின் மாலையில், உடுப்பியில் பிரம்மசூத்ர பாஷ்யத்தின் சொற்பொழிவை செய்துகொண்டிருந்தார். சேஷதேவர், சனகாதி முனிவர்களுடன்

அங்கு வந்து, ஆசார்யரின் பாஷ்யத்தைக் கேட்டு பின் தம்மிடத்திற்குத் திரும்பினார். ஆகாயத்தில் திடீரென்று தோன்று ஒரு ஒளியைக் கண்டு வியப்படைந்த சிஷ்யர்களுக்கு, அது சேஷதேவரின் ஒளி என்று ஆசார்யர் வர்ணித்தார். இவர்கள் அனைவரும் வாயுதேவரின் சேவகர் அல்லவா?.

ஸ்ரீமத் ஸுமத்வ விஜய ப்ரமேய மாலிகா என்னும் தனது கிருதியில் மாதனூரு ஸ்ரீவிஷ்ணு தீர்த்தர், மத்வ விஜயத்தின் பதினோறாம் சர்க்கத்தின் சுருக்கத்தையும், இந்த சர்க்கத்தை படிப்பதால் வரும் பயனையும் இவ்வாறு சொல்கிறார்.

வியாக்[2]யான ஸமயே ப்ராப்தம் ப[2]ணிராஜம் ஸுபூர்ணதீ[4]: |
சிஷ்யேப்[4]யோ த[3]ர்ஷயாமாஸ ஸ தத்ப[2]லமதா[2]ப்[3]ரவீத் ||12||

ஸ்ரீமதாசார்யர் ஸூத்ர பாஷ்ய பாடத்தை சொல்லும்போது சனகாதிகளுடன் வந்த சேஷதேவரை, சிஷ்யர்களுக்குக் காட்டினார். சனகாதிகள், சேஷதேவரிடம், பாஷ்யத்தைக் கேட்டால் என்ன பலன்? என்று கேட்டனர். பாஷ்யத்தைக் கேட்டால், மோட்சமே பலன் என்று சொல்லி, மோட்சத்தில் இருக்கும் சுக விசேஷத்தை விளக்கியவாறு, ஆசார்யரின் பாஷ்யத்தை மனோவாக் காயங்களால் திரும்பத்திரும்ப மனனம் செய்தார். இத்தகைய சிறந்த, ஸ்வரூபானந்த சுகமான மோட்சத்தை பெறுகின்றனர் என்னும் பலனை விளக்கினார்.

அபேக்ஷிதாகி[2]லாவாப்திர் மோக்ஷ சாஸ்த்ர ஸுலோலதா |
விக்[4]னநாஷ: ஸாத[4]னானாம் ஸ்வீயமாஹாத்ம்ய போ[3]த[4]னம் ||20||

பதினொன்றாம் சர்க்கம் : மோட்சத்திற்குக் காரணமான சாஸ்திரத்தில் சுலபமான விருப்பம்

மத்வ பிரவசனத்தை கேட்கும் பலனை சேஷதேவர் விவரிக்கும் அழகினை அடுத்த ஸ்லோகத்தில் விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் 42]
**ஈஷணத[3]னு நோடி[3]த[3]ரு க[3]க[3]னதி[3]**
**பூ[4]ஸுரரு ப்ரவசனத[3] ஸமயதி[3]**
**சேஷ தெரளித[3] தன்ன ப[4]வனகெ முனிஜனர ஸஹித |**
**பா[4]ஷ்ய ப்ரவசனதி[3]ந்த[3] லாப[4]வி**
**ஶேஷ வேனெம்பு[3]த[3]னு கேளலு**
**ஶேஷ யுகுதிய விவரிஸித[3] ஸனகாதி[3] ஸஹஜரிகெ ||42**

ப்ரவசன ஸமயதி - பிரவசன சமயத்தில்; பூஸுரரு - தேவதைகள்; ககனதி - வானத்தில்; ஈஷணதனு நோடிதரு - மிகப்பெரிய ஒளியை பார்த்தனர்; சேஷ - சேஷதேவர்; தன்ன பவனகெ - தன் இருப்பிடத்திற்கு; முனிஜனர ஸஹித - முனிவர்களுடன்; தெரளித - சென்றான்; பாஷ்ய ப்ரவசனதிந்த - பாஷ்ய பிரவசனத்தினால்; லாபவிசேஷ - பலன் / சிறப்பு; ஏனு எம்புதனு கேளு - என்ன என்று கேட்க; சேஷ - சேஷதேவர்; ஸனகாதி ஸஹஜரிகெ - சனகாதி முனிவர்களுக்கு; யுகுதிய விவரிஸித - அதனை விவரித்தான்.

மத்வ பிரவசனத்தை கேட்கும் பலனை சேஷதேவர் விவரிக்கும் அழகினை இந்த ஸ்லோகத்தில் விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

பிரவசன சமயத்தில், வானத்தில் சிஷ்யர்கள் மிகப்பெரிய ஒளியை பார்த்தனர். சேஷதேவர் தன் இருப்பிடத்திற்கு முனிவர்களுடன் திரும்பிச் சென்றார். பாஷ்ய பிரவசனத்தினால் என்ன பலன் / சிறப்பு என்று அனைவரும் கேட்க, சேஷதேவர், சனகாதி முனிவர்களுக்கு அதனை விவரிக்கிறான்.

மத்வ விஜய பதினோறாம் சர்க்க ஸாரம் இந்த ஸ்லோகத்திலும் தொடர்கிறது.

அதி[4]காரிணாம் ப[2]லமலம் விது[3]ஷாம் ப[4]வதி ப்ரவ்ருத்திரதி வீர்யவதீ |
இதி தத்ப[2]லம் ஸப[2]ல ஸங்க[3]த[2]னோ ப[4]க[3]வான் ப்ர பஞ்சயது பூ[4]ரித[3]ய: ||11-4

மத்வ சாஸ்திரங்களை சேஷதேவர் நன்றாக அறிந்திருந்ததால், சனகாதி முனிவர்கள் அவரிடம், மத்வரின் பிரம்மசூத்ர பாஷ்யத்தைக் கேட்பதன் பலன்களை சொல்லுமாறு கேட்டனர்.

த்ரிதி3வாதி3 லப்4யமபி நாஸ்ய ப2லம் கதி2தம் க்ருஷே2ரிவா ப2லால குலம் |
ஸ்வ ப2லம் து முக்தி பத3முக்தி பத3ம் ஸுக ஷாரதா3தி3 பரமார்த்த2 விதா3ம் || 11-6

அதற்கு சேஷதேவர், விவசாயம் செய்பவனுக்கு தானியம் எப்படி முக்கிய பலனோ, அப்படி மத்வ சாஸ்திரங்களைக் கேட்பவனுக்கு சுகாசார்யர், சரஸ்வதி தேவி ஆகியோரால் வர்ணிக்கப்பட்ட மோட்சமே முக்கிய பலன்' என்றார். தானியத்துடன் புல், பூண்டு என தேவையற்றவையும் வளர்வது போல, மத்வ சாஸ்திரங்களைக் கேட்பதால், மோட்ச பலனுடன், ஸ்வர்க்காதி பலன்கள், லௌகிக சுகங்கள், செல்வங்கள் ஆகியனவும் கிடைக்கின்றன என்று பொருள்.

மத்வ சாஸ்திரங்களை கேட்கும் பலன்களை அடுத்த ஸ்லோகத்திலும் தொடர்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் **43]**
**துங்கமதிக3ள ஶாஸ்த்ரக3ள வ்யா**
**ஸங்கமாடு3வ ஸுஜனனிகரகெ**
**மங்க3ளாங்க3னு கொடு3வ தன்னய ஶாஷ்வதத3 பத3வ |**
**அங்க3னெயரொட3கூ3டி3 து3க்க2த3**
**ஸங்க3வில்லதெ3 ப்ரதிக்ஷணக3ளலி**
**ப4ங்க3பா4ரத3 ஸுக2க3ளனுப4விஸுவரு முகுதியலி ||43**

துங்கமதிகள - சர்வக்ஞரானவரின்; ஷாஸ்த்ரகள - சாஸ்திரங்களை; வ்யாஸங்கமாடுவ - படிக்கும்; ஸுஜன நிகரகெ - சஜ்ஜனர்களின் குழுவிற்கு; மங்களாங்கனு - ஸ்ரீஹரி; தன்னய - தன்னுடைய; ஷாஷ்வதத பதவ - நிரந்தரமான இருப்பிடத்தை; கொடுவ - கொடுக்கிறான்; துக்கத ஸங்கவில்லதெ - சிறிதும்கூட துக்கம் இல்லாமல்; அங்கனெயரொடகூடி - தத்தம் மனைவியர்களுடன்; ப்ரதிக்ஷணகளலி - ஒவ்வொரு நொடியிலும் (எப்போதும்); பங்கபாரத - குறைவில்லாத; ஸுககளனு - சுகங்களை; முகுதியலி - முக்தியில்; அனுபவிஸுவரு - அனுபவிப்பார்கள்.

மத்வ சாஸ்திரங்களை கேட்கும் பலன்களை இந்த ஸ்லோகத்திலும் தொடர்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

சர்வக்ஞரானவரின் சாஸ்திரங்களை படிக்கும் சஜ்ஜனர்களின் குழுவிற்கு, ஸ்ரீஹரி தன்னுடைய நிரந்தரமான இருப்பிடத்தை கொடுக்கிறான். சிறிதும்கூட துக்கம் இல்லாமல், தத்தம் மனைவியர்களுடன், ஒவ்வொரு நொடியிலும் (எப்போதும்) குறைவில்லாத சுகங்களை அவர்கள் முக்தியில் அனுபவிப்பார்கள்.

மத்வ விஜயத்தில் இந்த விஷயம் (வைகுண்ட வர்ணனை), ஸ்லோகம் 11-7லிருந்து தொடங்குகிறது.
பரமாக3மார்த்த2 வர ஷாஸ்த்ரமித3ம் ப4ஜதாமமானவ கலாரசிதம் |
வ்ரஜதா1மஹோ பரம வைஷ்ணவதாம் ரதயே ஸ்வ லோகமஜிதோ தி3ஷதி ||11-7

பக்தியுடன் மத்வ சாஸ்திரங்களைப் படிப்பவர்களுக்கு, கேட்பவர்களுக்கு, வணங்கும் பரம வைஷ்ணவர்களுக்கு ஸ்ரீஹரி அவர்கள் வசிப்பதற்கு தன்னுடைய வைகுண்டத்தையே அளிக்கிறான்.

அனுபூ4யதே ஸுகமனந்த ஸகை: ஸகலைரலம் மதிபத3ம் ஸததம் |
அபி1 தாரதம்ய ஸஹிதை: ஸ்வகு3ரு ப்ரவணை: பரஸ்பரமுரு ப்ரணயை: ||11-24

அங்கு அனைவரும் பகவந்தனின் உறவினர்களே. அங்கு தாரதம்யம் இருந்தாலும், அனைவரும் எப்போதும் முழுமையான சுகத்தையே அனுபவிக்கின்றனர். ஒருவரையொருவர் மிகவும் அன்புடன் பார்த்துக் கொள்கின்றனர். மூத்தவர்களை மரியாதையுடன் நடத்துகின்றனர்.

இந்த வைகுண்ட வர்ணனை படலத்தை அடுத்த ஸ்லோகத்திலும் தொடர்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் **44]**
**நோடு3வரு நாராயணன ஸ்துதி**
**மாடு3வரு பரமாத3ரதி3**
**தாவீட3னரியரு ஸுந்த3ர ஸுமங்க3ளன த3ருஶனகெ |**
**மூடி3த3பி4லாஷெக3ளு தக்ஷண கை**
**கூ3டு3வுது3 ஹரியாக்3ஞெயிந்த3லி**
**நோட3பே3கென்னுவரனாக்ஷண தந்து3தோரிஸுவ ||44**

நாராயணன - ஸ்ரீமன் நாராயணனை; நோடுவரு - பார்க்கின்றனர்; பரமாதரதி - மிகவும் பக்தி மரியாதையுடன்; ஸ்துதி மாடுவரு - துதிக்கின்றனர்; ஸுந்தர ஸுமங்களன - அழகானவனின், மங்களாங்கனின்; தருஷனகெ - தரிசனத்திற்கு; தாவீடனரியரு - ஈடு வேறு எதுவும் அறியாதவர்கள்; மூடிதபிலாஷெகளு - நினைத்த விருப்பங்கள்; தக்ஷண - உடனடியாக; கைகூடுவுது - நிறைவேறுகின்றன; ஹரியாக்ஞெயிந்தலி - ஸ்ரீஹரியின் ஆணைப்படி; நோடபேகென்னுவரன்னு - பார்க்க வேண்டும் என்று நினைப்பவர்களை; தக்ஷண - அதே சமயத்தில்; தந்துதோரிஸுவ - கொண்டு வந்து காட்டுவான்.

வைகுண்ட வர்ணனை படலத்தை இந்த ஸ்லோகத்திலும் தொடர்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

வைகுண்டத்தில் இருப்பவர்கள், ஸ்ரீமன் நாராயணனை பார்க்கின்றனர். மிகவும் பக்தி மரியாதையுடன் அவனை துதிக்கின்றனர். அழகானவனின் / மங்களாங்கனின் தரிசனத்திற்கு ஈடு என்று வேறு எதையும் அறியாதவர்கள். அவர்கள் நினைத்த விருப்பங்கள், உடனடியாக நிறைவேறுகின்றன. ஸ்ரீஹரியின் ஆணைப்படி, பார்க்க வேண்டும் என்று நினைப்பவர்களை, உடனடியாக ஸ்ரீஹரி கொண்டு வந்து காட்டுகிறான்.

இந்த விஷயங்கள், மத்வ விஜயத்தில் 11-47 ஸ்லோகத்தில் உள்ளது.

ப்ரமதா$^{3}$தி ரேகமுபயாதவதா ப்ரமதா$^{3}$ க$^{3}$ணேன சரதோபவனே |
உபகீ$^{3}$யதே ஸ்ம மது$^{4}$ரம் மது$^{4}$ஜிச்சரிதம் ஸகாந்த ததினா ஸததம் ||
11-47

பெண்கள், நிரந்தர மகிழ்ச்சியுடன், தங்களின் கணவர்களுடன், ஸ்ரீஹரியின் சரித்திரங்களை தொடர்ந்து பாடிக் கொண்டிருக்கின்றனர்.

வினயோ ஹி பூஷயதி சர்வரசம் | (11-53). அனைத்து குணங்களிலும் சிறந்தது பணிவு. இப்படி பணிவு நிறைந்த பெண்கள் தமது கணவர்களுடன் மகிழ்வுடன் இருந்தனர். முக்தர்களின் ஸ்வரூபானந்தத்தின் அனுபவம் எவ்வித தோஷங்களும் இல்லாமல் இருந்தது.

யம்யம் சுகீ[2] காமயதேऽர்த்த[2]மத்ர சங்கல்ப மாத்ராத் சகலோऽபி ச ஸ்யாத் |
இத்யேவ வேதா[3] அபி[1] வேத[3]யந்தி முக்திம் தத: கோ விப[4]வாதிரேக: ||
(11-76)

மோட்சத்தில் முக்தர்கள் எதை தேவை என்று நினைக்கிறார்களோ, அப்படி நினைத்த மாத்திரத்திலேயே அவை கிடைக்கின்றன என்று வேதங்கள் சொல்கின்றன. அனைத்து புருஷார்த்தங்களும், நற்-சித்திகளும், ஸ்ரீஹரியை எப்போதும் காணும் சௌபாக்கியமும் கிடைக்கும் இடம் வைகுண்டம்.

இத்துடன் வைகுண்ட வர்ணனையைக் கொண்ட மத்வ விஜய பதினோறாம் சர்க்கத்தின் முடிந்து, அடுத்த ஸ்லோகத்திலிருந்து பன்னிரெண்டாம் சர்க்கத்தின் ஸாரம் விளக்குகிறார், ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் 45]
**ப்ரசுரமதி கேஸரிதீபரி**
**ரசிஸுதிரெ வ்யாக்யானக[3]ர்ஜனெ**
**ருசிஸலாக[3]தெ[3] மாயினரிக[3]ளு நடு[3]கி[3]த[3]வு ப[4]யதி[3] |**
**ஶுசிய நடெ[3]னுடி[3]ஶூன்ய து[3]ர்ஜன**
**நிகர சோளஜத்[3]வீபபுரிக[3]ள**
**ப[4]ஜிஸித[3]ரு ரக்ஷிஸலு மாயாவாத[3] ஸரணியனு ||45**

ப்ரசுரமதி - அபாரமான மதியைக் கொண்ட; கேஸரிது - ஸ்ரீமதானந்த தீர்த்தர்; ஈபரி - இப்படியாக; வ்யாக்யான கர்ஜனெ - பாஷ்யம் இயற்றுதல், பிரசாரம் செய்வது ஆகியன; ருசிஸலாகதெ - கண்டிக்க திறனற்ற; மாயினரிகளு - மாயாவாதிகள்; பயதி - பயத்தில்; நடுகிதவு - நடுங்கினர்; ஷுசிய நடெனுடிஷூன்ய - சுத்தமான நடவடிக்கைகள் இல்லாதவர்கள்; துர்ஜன நிகர - துர்ஜனர்களின் கூட்டம்; சோளஜ த்வீப புரிகள - சோள தேசத்தின் பத்மதீர்த்த மற்றும் புண்டரிகபுரிகளை; மாயாவாத ஸரணியனு - மாயாவாத கூட்டத்தை; ரக்ஷிஸலு - காக்குமாறு; பஜிஸிதரு - வேண்டினர்.

மத்வ விஜயத்தின் பன்னிரெண்டாம் சர்க்க விஷயங்கள் இங்கு தொடங்குகின்றன.

அபாரமான மதியைக் கொண்ட ஸ்ரீமதானந்த தீர்த்தர், இப்படியாக பாஷ்யம் இயற்றுதல், பிரசாரம் செய்தல் ஆகியவற்றை தொடர்ந்தார். இவற்றை கண்டிக்க திறனற்ற மாயாவாதிகள், பயத்தில் நடுங்கினர். சுத்தமான நடவடிக்கைகள் இல்லாத, துர்ஜனர்களின் கூட்டம், சோள தேசத்தின் பத்மதீர்த்த மற்றும் புண்டரீகபுரிகளை அழைத்து, மாயாவாதிகளை காக்குமாறு வேண்டினர்.

அத்ரானந்த ஸ்வாந்த வேதா$^{3}$ந்தி ஸிம்ஹே முக்$^{2}$யாவியாக்$^{2}$யா நிஸ்வனே ஜ்ரும்ப$^{4}$மாணே |
ஸத்$^{3}$யோமாத்$^{3}$யாத்$^{3}$ வாதி$^{3}$ தந்தீந்த்ரபீ$^{4}$மே பே$^{4}$ஜே க்ஷோபோ$^{4}$ மாயிகோ$^{3}$மாயு யூதை$^{2}$: || (12-1)

பிரம்மசூத்ர பாஷ்யத்தை இயற்றுதல் மற்றும் சித்தாந்தத்தை அனைத்து இடங்களிலும் சிறப்பாக பிரச்சாரம் செய்வது, ரஜதபீடபுரத்தில் தம் சிஷ்யர்களுக்கு தத்வோபதேசத்தை விளக்குவது என ஆசார்யர் ஜொலித்துக் கொண்டிருந்தார். ஆசார்யரின் சித்தாந்தத்தை கண்டிக்க திறனற்ற மாயாவாதிகள் கலக்கமடைந்தனர். பொறாமையில் வெந்த அந்த மாயாவதிகள், சோள தேசத்திலிருந்த பத்மதீர்த்த மற்றும் புண்டரிகபுரி ஆகியோரிடம் சர்வக்ஞரான மத்வாசார்யரை வாதத்தில் எப்படி வெல்வது என்று ஆலோசித்தனர்.

ஸம்பூ$^{4}$யாமி சோளஜ த்$^{3}$வீபிபு$^{1}$ர்யோ பார்ஷ்வே பாபா மந்த்ரயாமாஸுருக்ரா: |
ஸாஸூயா பூ$^{4}$பூ$^{4}$ஷணே வாயுதே$^{3}$வே மூடா$^{4}$ யத்வத்தார்த்தராஷ்ட்ராந்திகே ப்ராக் || 12-2

அந்த மாயாவாதிகள் மற்றும் இந்த பத்மதீர்த்த மற்றும் புண்டரிகபுரி அனைவரும் சேர்ந்து மந்திராலோசனை செய்தனர். திருதராஷ்டிரனின் மக்களான துரியோதனனிடம் அரசகுமாரர்கள் வந்து ஆலோசனை கேட்டது போல இந்த காட்சி இருந்தது.

ஸ்ரீமத் ஸுமத்வ விஜய ப்ரமேய மாலிகா என்னும் தனது கிருதியில் மாதனூரு ஸ்ரீவிஷ்ணு தீர்த்தர், மத்வ விஜயத்தின் பன்னிரெண்டாம் சர்க்கத்தின் சுருக்கத்தையும், இந்த சர்க்கத்தை படிப்பதால் வரும் பயனையும் இவ்வாறு சொல்கிறார்.

ப3ஹுபத்3ரவத3ம் மாயிமண்ட3லம் ஸ்வீயமண்ட3லே |
க2ண்ட3யித்வாऽக2ண்ட3ஷக்திர் விரேசேऽக2ண்ட3ராஜவத் ||13||

மாயிகள் தங்களுடைய குழுவில் பல்வேறு விதமாக ஆலோசித்து, ஆசார்யருக்கு உபத்திரவங்களைக் கொடுக்க முயன்றபோது, ஆசார்யர், அகண்டராஜன் (சந்திரன்) தன்னுடைய பரிபூர்ண சக்தியினால் எதிரிகளை தோற்கடிப்பதைப் போல, ஆசார்யர் இந்த மாயிகளை வாதத்தில் முழுமையாக தோற்கடித்து, ஒளிர்ந்தார்.

அபேக்ஷிதாகி2லாவாப்திர் மோக்ஷ சாஸ்த்ர ஸுலோலதா |
விக்4னநாஷ: ஸாத4னானாம் ஸ்வீயமாஹாத்ம்ய போ3த4னம் ||20||

பன்னிரெண்டாம் சர்க்கம் : சாதனை மார்க்கத்தில் வரும் தடைகள் அகலுதல்

பத்மதீர்த்த மற்றும் புண்டரிகபுரி உடனான ஸ்ரீமதாசார்யரின் வாதத்தை அடுத்த ஸ்லோகத்தில் விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் 46]
**தி3ட்டபவனன ஸுதன கீர்த்திகெ3**
**ஹொட்டயுரியிது து3ருளஜனரிகெ3**
**கெட்டயோசனெ மாடி3 பரிபரி பீடி3ஸித3ரிவர |**
**ஶிஷ்டஹரி ப4குதாக்3ரணிய தா**
**விஷ்டு பீடி3ஸதி3ரலு தமஸிகெ3**
**கட்டுவுது3 பா1தே2யவெந்தெ3ந்தீ3பரிய நட3தெ ||46**

திட்ட - கம்பீரமான; பவனன ஸுதன - வாயு புத்திரனின்; கீர்த்திகெ - புகழைக் கண்டு; துருள ஜனரிகெ - கெட்டவர்களுக்கு; ஹொட்டெயுரியிது - வயிறு எரிந்தது; கெட்ட யோசனெ மாடி - தவறான யோசனைகள் செய்து; பரிபரி - விதம்விதமாக; இவர - இவரை; பீடிஸிதரு - தொந்தரவு செய்தனர்; சிஷ்ட - சிறந்த; ஹரிபகுதாக்ரணிய - ஹரிபக்தர்களில் முதல்வரை; தாவிஷ்டு - இவர்கள் இவ்வளவு; பீடிஸதிரலு - தொந்தரவு செய்யாவிட்டால்; எந்தெந்து - என்றைக்கும்; தமஸிகெ கட்டுவது - தமஸ்ஸிற்கு எப்படி தகுதி பெறுவார்கள்?; ஈ பரிய நடதெ - இப்படியான இவர்களின் நடவடிக்கைகள்; பாதேயவெந்து - அதற்கே வழிவகுக்கிறது.

பத்மதீர்த்த மற்றும் புண்டரிகபுரி உடனான ஸ்ரீமதாசார்யரின் வாதத்தை இந்த ஸ்லோகத்தில் விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

கம்பீரமான வாயுபுத்திரனின் புகழைக் கண்டு, கெட்டவர்களுக்கு வயிறு எரிந்தது. தவறான யோசனைகளை செய்து, விதம்விதமாக இவரை தொந்தரவு செய்தனர். சிறந்த ஹரிபக்தர்களில் முதல்வரை, இவர்கள் இவ்வளவு தொந்தரவு செய்யாவிட்டால், தமஸ்ஸிற்கு எப்படி தகுதி பெறுவார்கள்?. இப்படியான இவர்களின் நடவடிக்கைகள், அதற்கே வழிவகுக்கிறது.

மத்வ விஜய பன்னிரெண்டாம் சர்க்கத்தில் இந்த விஷயம் வருகிறது.

அத்ரானந்த ஸ்வாந்த வேதா$^{3}$ந்தி ஸிம்ஹே முக்$^{2}$யாவியாக்$^{2}$யா நிஸ்வனே ஜ்ரும்ப$^{4}$மாணே |
ஸத்$^{3}$யோமாத்$^{3}$யாத்$^{3}$ வாதிv தந்தீந்த்ரபீ$^{4}$மே பே$^{4}$ஜே க்ஷோபோ$^{4}$ மாயிகோ$^{3}$மாயு யூதை$^{2}$: || (12-1)

ஆசார்யரின் சித்தாந்தத்தை கண்டிக்க திறனற்ற மாயாவாதிகள் கலக்கமடைந்தனர். பொறாமையில் வெந்த அந்த மாயாவதிகள், சோள தேசத்திலிருந்த பத்மதீர்த்த மற்றும் புண்டரிகபுரி ஆகியோரிடம் சர்வக்ஞரான மத்வாசார்யரை வாதத்தில் எப்படி வெல்வது என்று ஆலோசித்தனர்.

அங்கு வந்திருந்த மாயாவாதிகளில் சகுனியைப் போன்று வஞ்சகனாக இருந்த ஒருவன் இவ்வாறு கூறினான். 'சங்கராசார்யரின் மாயாவதமானது நெடுங்காலமாக வந்துகொண்டிருக்கிறது. மேலோட்டமாகப் பார்த்தால் மாயாவாதமானது அனைத்து பிரமாணங்களுக்கும் எதிராகவே தோன்றினாலும், நமக்கு அது சாதகமாகவே இருக்கிறது. மாயாவாதத்தை நன்றாக அறிந்தால், பிரம்மனைவிட வேறாகத் தெரியும் இந்த ஜீவ ஜடாத்மகவான பிரபஞ்சத்தை - வேறுபாடு இல்லாத ஒன்று என்று நிரூபிக்கலாம். பிரம்மன் ஒருவரே உண்மை. அவன் உருவமற்றவன். நிர்குணன். நிர்விசேஷன். பழமையான வேதங்களினாலும் விளக்கப்பட முடியாதவன். ஜீவ - பிரம்மனின் வேறுபாடு இல்லை.

ஒருவருக்கு பிரம்மஞானம் கிடைத்தவுடன், அவரைப் பொறுத்தவரையில் உலகம் நெருப்பில் எரியும் துணியைப் போல ப்ரோக்ஷ நிலையில் மறைந்து போகின்றது. அபரோக்ஷ நிலையில், உலகம் பழுக்கக் காய்ச்சிய இரும்பில் தண்ணீர் ஊற்றினால் அது ஆவியாகப் போய்விடுவதைப் போல மறைந்து விடுகிறது. நமது தத்வங்களான அஞ்ஞானம், மாயாவாதம் ஆகியவை உலகத்தை வியவஹாரிக நிலையிலும், பரமார்த்திக நிலையிலும் காண்பதற்கு உதவி புரிகின்றன. இத்தகைய உறுதியான தத்வங்களைக் கொண்டு நாம் மத்வரின் வேறுபாட்டுக் கொள்கையை நிராகரிப்போம். மத்வாசார்யரும் அவரது சிஷ்யர்களும் - ஸ்ரீஹரி அனந்தகுணபரிபூர்ணன், உலகம் உண்மை, பிரம்மன் ஜீவனிடமிருந்து வேறுபட்டவன் போன்ற தத்வங்களை போதித்தவாறு, மாயாவாதிகளின் அனைத்து வாதங்களையும் கண்டிக்கின்றனர். நாம் எதிர்க்கமுடியாத பல ஆதாரங்களைக் கொடுக்கின்றனர்.

ப்ராச்யம் சாஸ்திரம் யத் ஸபாதம் து லக்ஷம் வாக்யேனைகேனாSக் ஷிபத்தர்ஷ தீர்த்த: | (12-11). ஒன்றேகால் லட்ச கிரந்தங்களினால் கூடிய பழமையான மாயாவாதத்தை ஸ்ரீமதாசார்யர் அஞ்ஞானா... (12-12) என்னும் ஒரே வாக்கியத்தினால் நிராகரிக்கிறார். இப்படிப்பட்ட மத்வரை வெல்வதற்கு பத்மதீர்த்தர் ஒருவரால் மட்டுமே சாத்தியம் என்று நினைத்து உங்களை வந்து அடைந்திருக்கிறோம். புன்சிரிப்புடன் இருக்கும் மத்வாசார்யரை பார்த்தால் - 'வேதவியாஸேன்வேஷ வேதோ ந மூர்த்தோ திவ்யா மூர்த்திர்யஸ்ய சா சுஸ்மிதஸ்ய |' (12-12) - 'இவர்தான் சாட்சாத் வேதவியாசரோ? உடல் கொண்டு வந்துள்ள வேதமோ' - என்று புகழ்ந்து - 'மாயாபக்ஷமூலம் பினத்தி' - மாயாவாத மதத்தின் மூலத்தையே கத்தரிப்பதைப் போல தோன்றுகிறது.

ஞானிகளான மத்வாசார்யரையும் அவரின் சிறந்த சித்தாந்தத்தையும் கண்டு கலக்கம் கொண்ட மாயாவாதிகள் - 'இப்போது நம் கோபத்தை கேளுங்கள். மாயாவாதம் அழிந்து கொண்டிருக்கிறது. எத்தகைய கஷ்டம் வந்திருக்கிறது. அய்யோ, நாம் அபாக்யசாலிகள்' என்று துக்கப்பட்டனர். 'ஆக்ரந்தம் மே ஹந்த ஸ்ருண்வந்து சோSயம் ஹாஹா மாயாவாத உத்சாதமேதி ||' (12-7). மத்வரின் சிஷ்யர்கள், அவர்களின் தத்வவாதத்தை அனைத்து இடங்களிலும் சிறப்பாக

பரப்பிக் கொண்டிருக்கின்றனர். நம்மவரே ஆன சிலர், மத்வ பாஷ்யத்தை புகழ்கின்றனர்.

இத்தகைய பேச்சினைக் கேட்டு இன்னொருவன் - ‘இந்த மத்வாசார்யரைக் கண்டு பயப்படுபவர்கள் கோழைகள். பத்மதீர்த்தரைப் போன்ற பெரிய பண்டிதர் இருக்கும்போது நமக்கு பயம் எதற்கு? தத்வவாதத்தை கண்டிக்க முடியாவிட்டாலும், மந்திர தந்திரங்களினால் பத்மதீர்த்தர் முதலானோர் மத்வாசார்யரை வெல்லமுடியும்.

மத்வ சித்தாந்தத்தில் இல்லாதவற்றை நாம் எடுத்துச் சொல்லவேண்டும். தந்திரத்துடன் பிரதிவாதிகளை நாம் எதிர்கொள்ள வேண்டும். நெருப்பு தூரத்தில் இருந்தாலும், வெண்ணெய் உருகுவதைப் போல, ஆசார்ய மத்வர் தூரத்தில் இருந்தாலும், மாயாவாதிகள் பயங்கொண்டது நன்கு தெரிந்தது. ஆனால் மந்திரம், தந்திரம் என எதையாவது செய்து மத்வரை வெல்லவேண்டும் என்று தீர்மானித்தனர். ’கிராமே கிராமே வார்யதாம் மானனைஷாம் பூர்வம் பூர்வம் சாம பூர்வருபாயை: |’ (12-24). ஒவ்வொரு கிராமத்திற்கும் போய் மத்வரின் சிஷ்யர்கள் அங்கு வராதவாறு தடுப்போம். அப்படி நுழைந்தாலும் அவர்களுக்கு மரியாதை கிடைக்காதவாறு செய்வோம். அவர்களது புத்தகத்தை பறிப்பது, தண்டத்தை முறிப்பது, ஆகியவற்றை செய்யவேண்டும்.

சிறுமதி படைத்த மாயாவாதிகள் இத்தகைய துராலோசனைகளை செய்து, மத்வாசார்யரை வெல்ல வேண்டுமென்ற நோக்கத்துடன், விஷ்ணு மற்றும் விஷ்ணு பக்தர்களின் த்வேஷியான புண்டரிகபுரி என்னும் சன்யாசியை உடுப்பிக்கு அனுப்பினர்.

இத்1யாத்3யேதே கார்யமாலோச்ய காலே சக்ருர்வக்ராஸ்சக்ரி ப4க்த ப்ரதீ1பம் |
யோக்3யாமங்க்தும் தேsன்யதா2 ஸ்யு: கத2ம் வா து3க்கோ2க்3ராம்ப4ரஸ்யந்த2 தாமிஸ்ர ஸிந்தெள4 ||12-25

இந்த மாயாவாதிகள் இவ்வாறெல்லாம் துராலோசனை செய்து, சக்ரதாரியான விஷ்ணுவின் மிகச்சிறந்த பக்தரான ஸ்ரீமதாசார்யரை, எதிர்ப்பதற்கு தீர்மானித்தனர். இவர்கள் இவ்வாறெல்லாம்

செய்யாவிட்டால், நிரந்தர தமஸ்ஸினை அடைவதற்கு எப்படி தகுதி பெறுவார்கள்?.

மாதனூரு ஸ்ரீவிஷ்ணு தீர்த்தர், தனது கிருதியான ஸ்ரீமத் ஸுமத்வ விஜய ப்ரமேய மாலிகாவில், மத்வ விஜய பன்னிரெண்டாம் சர்க்கத்தின் சுருக்கத்தையும் இந்த சர்க்கத்தை படிப்பதால் வரும் பலனையும் இவ்வாறு சொல்கிறார்.
ப3ஹுபத்3ரவத3ம் மாயிமண்ட3லம் ஸ்வீயமண்ட3லே |
க2ண்ட3யித்வாऽக2ண்ட3ஷக்திர் விரேசேऽக2ண்ட3ராஜவத் ||13||

மாயிகள் தங்களுடைய குழுவில் பல்வேறு விதமாக ஆலோசித்து, ஆசார்யருக்கு உபத்திரவங்களைக் கொடுக்க முயன்றபோது, ஆசார்யர், அகண்டராஜன் (சந்திரன்) தன்னுடைய பரிபூர்ண சக்தியினால் எதிரிகளை தோற்கடிப்பதைப் போல, ஆசார்யர் இந்த மாயிகளை வாதத்தில் முழுமையாக தோற்கடித்து, ஒளிர்ந்தார்.

அபேக்ஷிதாகி2லாவாப்திர் மோக்ஷ சாஸ்த்ர ஸுலோலதா |
விக்4னனாஷ: ஸாத4னானாம் ஸ்வீயமாஹாத்ம்ய போ3த4னம் ||20||

பன்னிரெண்டாம் சர்க்கம் : சாதனை மார்க்கத்தில் வரும் தடைகள் அகலுதல்.

ஸ்ரீமதாசார்யர், புண்டரிகபுரியை வென்ற விஷயத்தை அடுத்த ஸ்லோகத்தில் விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் 47]
**கெ3லிது3 ஶார்த்து3லாக்2ய விது3ஷன**
**அலவமதி வேத3க3ள நிகரகெ**
**ஸுலப4த3லி வ்யாக்2யான தோரித3 ஸுஸ்வரக3ளிந்த3 |**
**ப3ளிக நீ பேளெனலு ஸ்வரக3ள**
**திளியதெ3லெ ஶார்த்து3ல பேளலு**
**குளித ஜனரபஹாஸதி3ந்த3தி1 நாசித3னு து3ருள ||47**

அலவமதி - ஸ்ரீமதாசார்யர்; வேதகள நிகரகெ - வேத சமூகத்திற்கு; ஸுலபதலி - மிகவும் சுலபமாக; ஸுஸ்வரகளிந்த - தெளிவான ஸ்வரங்களுடன்; வ்யாக்யான தோரித - வியாக்யானங்களை விளக்கினார்; ஷார்த்துலாக்ய - புலியின் பெயரைத் தாங்கிய, ஆனால்

நரியைப் போன்றதான ; விதுஷன - அந்த பண்டிதனை; கெலிது - வென்றார்; பளிக - பிறகு; நீ பேளெனலு - இதையே நீ சொல் என; ஸ்வரகள திளியதெலெ - ஸ்வரங்கள் அறியாமலேயே; ஷார்தூல பேளலு - அந்த பண்டிதன் கூற; குளித - அங்கு அமர்ந்திருந்த; ஜனரு - மக்கள்; அபஹாஸதிந்த - கேலியாக சிரிக்க; துருள - அந்த மந்தமதி கொண்டவன் ; அதி நாசிதனு - மிகவும் வெட்கப்பட்டான்.

ஸ்ரீமதாசார்யர், புண்டரிகபுரியை வென்ற விஷயத்தை இந்த ஸ்லோகத்தில் விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

ஸ்ரீமதாசார்யர், வேத சமூகத்திற்கு மிகவும் சுலபமாக, தெளிவான ஸ்வரங்களுடன் வியாக்யானங்களை விளக்கினார். புலியின் பெயரைத் தாங்கிய ஆனால் நரியைப் போன்றதான அந்த பண்டிதனை, வென்றார். பிறகு, இதையே நீ சொல் என, ஸ்வரங்கள் அறியாமலேயே அந்த பண்டிதன் கூற, அங்கு அமர்ந்திருந்த மக்கள் கேலியாக சிரிக்க, அந்த மந்தமதி கொண்டவன், மிகவும் வெட்கப்பட்டான்.

மத்வ விஜயத்தில் 12-34 ஸ்லோகத்திலிருந்து இந்த விஷயம் சொல்லப்பட்டுள்ளது.

கா$^{3}$ம்பீ$^{4}$ர்யாத்$^{3}$யை: யுக்தமௌதா$^{3}$ர்ய கார்யை: நானா நாத$^{3}$ ஷ்லாக்$^{4}$யமுச்சாரணம் தத் |
சீக்ஷா சிக்ஷா லக்ஷணானாம் ஹி லக்ஷ்யம் மான்யம் மன்யே த$^{4}$ன்ய பு$^{3}$த்$^{3}$தே$^{4}$ரதுல்யம் || (12-34)

ஆசார்யரின் கம்பீர உச்சாடனங்கள் பார்ப்பதற்கு நன்றாக இருந்தது. சபையில் கூடியிருந்த பிராமணர்கள், ஸ்ரீமதாசார்யரின் வேத உச்சாடனங்கள் மற்றும் வியாக்யானங்களைக் கேட்டு மிகவும் மகிழ்ச்சியடைந்தனர்.

அடுத்து புண்டரிகபுரியை வேத வியாக்யானம் செய்வதற்கு அழைத்தனர். புண்டரிகபுரியோ, முதல் ஸ்லோகத்திலேயே தவறாக உச்சாடனம் செய்து, அனைவரின் சிரிப்புக்கு ஆளாகி, வாதத்தில் தோற்றான். சபையினரிடம் அவமானமடைந்தான். இங்கு நாராயண பண்டிதர், வேதாபிமானியான சரஸ்வதி, கருடாதிகளே

பூர்ணபிரக்ஞரின் வேத உச்சாடனம், வியாக்யானங்களை வர்ணிக்க வல்லவர்கள். நம்மால் இது சாத்தியமே இல்லை என்கிறார்.

ஷார்தூ3லாக்2யாம் ப்ராப்ய ஸம்பா4வித: ப்ராக்3 லோகே தூ4ர்த்தோ மாயி கோ3மாயுரேஷ2: |
வாதி3த்3வீபி1 த்4வம்ஸினம் மத்4வஸிம்ஹம் ப்ராப்தோ ஹீத்த2ம் ஷப்தசேஷோ2 ப3பூ4வ ||12-41

மாயாவத நரியானவர், பண்டித புலியாக தன்னை நினைத்துக் கொண்டு, வேதாந்த சிங்கத்தைப் போல இருக்கும் ஸ்ரீமதாசார்யரிடம் வாதம் செய்ய வந்தார். தன்னை எதிர்க்கும் அனைத்து பண்டித புலிகளையும் சுலபமாக வெல்லும் திறனைக் கொண்ட ஆசார்யர், இவரையும் வெல்ல, தன் பட்டத்தை/புகழை இழந்து வெறும் புண்டரிக என்னும் பெயரைக் கொண்டு மட்டுமே இருந்தார். (இது டீகாசார்யரின் தத்வோத்யோத கிரந்தத்தின் டீகைக்கேற்ப உள்ள அர்த்தம் ஆகும்).

பத்மதீர்த்த மற்றும் அவனது நண்பனான சங்கராசார்யர் செய்த கெட்ட செயல்களைப் பற்றி, அடுத்த ஸ்லோகத்தில் விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் 48]
**பது3மனாமக1னோர்வ து3ருளனு**
**தத3னுக3னு புஸ்தகஸமூஹ**
**கதி3யலிவரனு நிர்ப்ப4யதி3 க2ண்டி3ஸித3ராக்ஷணதி3 |**
**பெ3த3ரித3ரு து3ர்ஜனரு வேக3தி3**
**சத3ரித3ரு மெரயாகெ3 விஸ்தர**
**ஹ்ருத3யதே3வாலயவ ஸேரித3 ப்ராக்3யவாடத3லி ||48**

பதுமனாமகனோர்வ - பத்மதீர்த்த என்னும் ஒருவன்; துருளனு - கெட்டவன்; ததனுகனு - அவனுடைய நண்பனான சங்கராசார்யர்; புஸ்தகஸமூஹ - (வைத்திருந்த) கிரந்தங்களை; கதியலு - திருடிச்செல்ல; இவரனு - இவர்களை; நிர்ப்பயதி - எவ்வித தயக்கமும் இன்றி; ஆக்ஷணதி - அதே நொடியில்; கண்டிஸிதரு - வாதத்தில் வென்றார்; துர்ஜனரு - கெட்டவர்கள்; பெதரிதரு - நடுங்கினர்; வேகதி - வேகமாக; மெரயாகி - (ஸ்ரீமதாசார்யரின் கண்களிலிருந்து) மறைந்து; சதரிதரு - பாய்ந்து ஓடினர்; விஸ்தர ஹ்ருதய - விசாலமான

ஹ்ருதயத்தைக் கொண்டவர்; ப்ராக்யவாடதலி - ப்ராக்யவாட என்னும் ஊரின்; தேவாலயவ - தேவாயலத்தை; ஸேரித - சேர்ந்தார்.

பத்மதீர்த்த மற்றும் அவனது நண்பனான சங்கராசார்யர் செய்த கெட்ட செயல்களைப் பற்றி இந்த ஸ்லோகத்தில் விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

பத்மதீர்த்த என்னும் ஒருவன், அவனுடைய நண்பனான சங்கராசார்யருடன் சேர்ந்து, ஆசார்யரின் கிரந்தங்களை திருடிச் செல்ல, இவர்களை எவ்வித தயக்கமும் இன்றி, அதே நொடியில் ஆசார்யர் வாதத்தில் வென்றார். கெட்டவர்கள் நடுங்கினர். வேகம் வேகமாக அவரின் பார்வையிலிருந்து மறைந்து பாய்ந்து ஓடினர். விசாலமான ஹ்ருதயத்தைக் கொண்டவரான ஆசார்யர், ப்ராக்யவாட என்னும் ஊரில் உள்ள தேவாலயத்திற்கு வந்து சேர்ந்தார்.

மத்வ விஜயத்தில் இந்த சம்பவம் 12-44 ஸ்லோகத்தில் வர்ணிக்கப்பட்டுள்ளது.

துஷ்டா$^{2}$த்மாsஸௌ ப$^{4}$த்$^{3}$ரமேகா$^{1}$கி$^{1}$னம் ய: க்ஷேப்தும் ஹேது: ஸௌக்$^{2}$யதா$^{3}$க்$^{2}$யம் ப$^{3}$பூ$^{4}$வ |
ஹர்யஷோsயம் தம் ந சக்ஷாம பூ$^{4}$ய: தோகே ஸன்னே ஸூகரம் கேஸரீவ ||12-44

தனது குட்டியைக் கொன்ற பன்றியை சிங்கம் எப்படி மன்னிக்காதோ அதைப் போல; தனது மகனான அபிமன்யுவை கொன்ற ஜயத்ரதனை தான் கொல்வேன் என்று எப்படி அர்ஜுனன் சபதம் செய்தானோ, அதைப் போல - தனது நண்பனான சங்கராசார்யருடன் சேர்ந்து, ஆசார்யரின் கிரந்தங்களை திருடிச் சென்ற பத்மதீர்த்தனை, தான் வாதத்தில் வெல்வேன் என்று தீர்மானம் செய்தார்.

விஷ்ணோர்பூ$^{4}$ய: ஷோப$^{4}$யத்$^{3}$பி$^{4}$: பதா$^{3}$ந்தம் பாரம்பர்யேணோர்ய மாணைரவார்யை: |
கோ$^{3}$வ்ராதைஸ்த$^{1}$ம் தா$^{3}$ரயித்வா ந்யக்$^{3}$ருண்ஹாத் கஞ்சாக்$^{2}$யானம் ஸிந்துபம் மத்$^{4}$வ பார்த்த$^{2}$: || 12-46

அர்ஜுனன், வானை ஒளிர்விப்பதான தனது பாணங்களால் எப்படி ஜயத்ரதனைக் கொன்றானோ அதைப் போல, ஆசார்யரும் ஸ்ரீஹரியின் ஸ்வரூபத்தை விளக்கக்கூடியதான வாக்கியங்களை தொடர்ந்து கூறத் தொடங்கினார்.

பின் ஆசார்யரின் சிஷ்யர், மாயாவாதிகளைக் குறித்து இவ்வாறு கூறினார். 'ப்ராப்த: காலோ த்ராக் குஹாந்தம் ப்ரவேஷ்டும் ||' (12-47) ஹே மாயாவாதிகளே! மத்வாசார்யர், பிரம்மஸ்வரூபத்தை அனைத்து இடங்களிலும் பரப்பியவாறு சூரியனைப் போல ஒளிர்கிறார். சூரிய உதயத்தின்போது இருட்டு அழிகின்றது. மத்வர் என்னும் சூர்யோதயத்தினால் அஞ்ஞானம், தவறான ஞானம் ஆகியவை நாசமடைகிறது. வேகமாகப் போய் குகைக்குள் ஒளிந்து கொள்ளுங்கள். உங்களை வெல்வதற்கு ஆசார்யர் சப்த-ஆகமங்களை ஏந்தி அவதரித்திருக்கிறார். கருடனைப் பார்த்து பாம்பு ஓடிப்போவதைப் போல, கருடோத்தமரான மத்வரைப் பார்த்து ஓடிப் போய்விடுங்கள் மாயாவாதிகளே' . ஏனென்றால் - 'மத்வாதித்யம் சம்ஸ்ரிதம் கோSபிதத்தே |' (12-50) 'மத்வ சூரியரை யாரால் மூடமுடியும்?. சூரிய ஒளியினால் இருட்டு அழிவது சகஜம்தானே' .

விதாவத விதாவத த்வரிதமத்ரி வாதாசுரா (12-51)

ஜீவ-ஈஸ்வரனில் பேதங்கள் இல்லையென்று சொல்லி, உண்மையை மறைத்து, அனைவரின் அனுபவத்திற்கும் வரும் இந்த உலகினை பொய் என்று வாதிக்கும் மாயாவாதிகளே! ஸ்ரீமதானந்த தீர்த்தர் என்னும் நரசிம்மன் வருகிறார். ஆதாரங்கள் என்னும் கூரிய நகங்கள் அவரிடம் உள்ளன. இவற்றினால் அவிவேகிகளான குவாதிகளை, தமது வியாக்யானம் என்னும் பயங்கரமான கர்ஜனையின் உதவினால் கிழித்துவிடுவார். ஆகையால், மாயாவாதிகளே வேகமாக இங்கிருந்து ஓடிவிடுங்கள். இரு நாக்குகள் உடைய பாம்பினைப் போன்றவர்கள் நீங்கள். சத் சித்தாந்தத்தை நிரூபித்த ஸ்ரீமதானந்ததீர்த்தர் கருடனைப் போன்றவர். மோட்சத்தைக் கொடுக்கக்கூடிய சித்தாந்தத்தை நிறுவியவாறு, உங்களையும் கண்டிக்கிறார். வேகமாக ஓடி குகைகளில் ஒளியுங்கள்.

ஸ்ரீமன்மத்வாசார்யரை ஸ்ரீமன் நாராயணனுக்கு ஒப்பிடுகிறார். நாராயணன் அசுரர்களை வதம் செய்கிறார் என்றால், மத்வர் மாயாவாதிகளை கண்டிக்கிறார். வேதங்கள் சுதர்சன சக்ரத்தைப் போன்றதாகும். பிரம்மதர்க்கம் சங்கினைப் போன்றதாகும். வேதவியாசரின் புராணங்கள் கௌமோதகீ கதையைப் போன்றதாகும். பஞ்சராத்ரங்கள் ஷார்ங்க ஆகும். பிரம்மசூத்ரங்களை பாணங்களாக, மூல ராமாயண பாரதாதிகள் வாள் என்றும், மாயாவதிகளை முழுமையாக நிராகரிக்க, ஆசார்யர் என்னும் நாராயணன் வருகிறார். ஆகையால் உடனடியாக ஓடிப்போய் ஒளியுங்கள் என்று சிஷ்யர்கள் மாயாவாதிகளை எச்சரித்தனர்.

இத்துடன் மத்வ விஜய பன்னிரெண்டாம் சர்க்க விஷயங்கள் முடிந்தன. அடுத்த ஸ்லோகத்திலிருந்து பதிமூன்றாம் சர்க்கத்தினை துவக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் 49]
**பரமபதி ப$^{4}$குதரனுத்$^{3}$த$^{3}$ரிஸலிகெ**
**நரபதிய ப்ரார்த்த$^{2}$னெய தந்தி$^{3}$ஹ**
**புருஷனோர்வன நுடி$^{3}$ய லாலிஸி தெரளித$^{3}$ரு முத$^{3}$தி$^{3}$ |**
**த$^{4}$ரெய ரவி ஸஞ்சரிப தெரத$^{3}$லி**
**ஸரிது$^{3}$ பஶ்சிம ப்ராந்தத$^{3}$ல்லிஹ**
**ஸ்மரனவல்லப$^{4}$னாலயவ ஸேரித$^{3}$ரு கு$^{3}$ருவரரு ||49**

பகுதரனு - பக்தர்களை; உத்தரிஸலிகெ - மேம்படுத்துவதற்காக; நரபதிய - அரசனின்; பிரார்த்தன்யெ தந்திஹ - வேண்டுகோளை கொண்டு வந்த; புருஷனோர்வன - சிஷ்யரின்; நுடிய லாலிஸி - பேச்சுக்கேற்ப; முததி தெரளிதரு - மகிழ்ச்சியுடன் அங்கு சென்றார்; தரெய ரவி - ஒளிபொருந்திய சூரியன்; ஸஞ்சரிப தெரதலி - சஞ்சரிக்கும் விதத்தில்; ஸரிது - சஞ்சாரம் செய்து; பஷ்சிம பிராந்ததல்லிஹ - மேற்கு திசையில் இருக்கும்; ஸ்மரனவல்லபன - மதனேஸ்வரனின்; ஆலயவ - ஆலயத்திற்கு; குருவரரு - ஸ்ரீமதாசார்யர்; ஸேரிதரு - வந்து அடைந்தார்.

மத்வ விஜய பதிமூன்றாம் சர்க்க விஷயத்தை இங்கு சொல்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

பக்தர்களை மேம்படுத்துவதற்காக, அரசனின் (ஜயசிம்ம) வேண்டுகோளைக் கொண்டு வந்த சிஷ்யரின் பேச்சுக்கேற்ப, ஆசார்யர் மகிழ்ச்சியுடன் அங்கு சென்றார். ஒளிபொருந்திய சூரியன், சஞ்சரிக்கும் விதத்தில் சஞ்சாரம் செய்து, மேற்கு திசையில் இருக்கும் மதனேஸ்வரனின் ஆலயத்திற்கு ஸ்ரீமதாசார்யர் வந்து அடைந்தார்.

மத்வ விஜய 13-1 ஸ்லோகத்திலிருந்து இந்த சம்பவம் வர்ணிக்கப்பட்டுள்ளது.

ப்ருது$^{2}$ த$^{3}$ர்ஷனமுத்தி$^{2}$ம் க்ருதார்த்த$^{2}$ம் ப்ருதி$^{2}$வீ ப்$^{4}$ருத் ப்ரணதிம் க்$^{3}$ருஹீதவந்தம் |
நிஜ சிஷ்ய முதே$^{3}$஽த$^{2}$ ஸஹ்ரமாப்தம் புருஷ: கஸ்சிது$^{3}$பாயயௌ கதா$^{3}$சித் ||13-1

ஸ்ரீமத்வாசார்யர் ப்ராக்ர்யவாட கிராமத்தில் தமது சாதுர்மாசத்தை முடித்து, பத்மதீர்த்தரிடமிருந்து திரும்பப் பெற்ற கிரந்தங்களை கிராமத்து தலைவனிடம் ஒப்படைத்து, சிஷ்யரின் வேண்டுகோளுக்கிணங்க சஹ்யாத்ரி கிராமத்திற்கு வந்தார். ஜயசிம்மனின் அழைப்பையும் ஏற்றார்.

அத$^{2}$ மாக$^{4}$வதீமபாஸ்ய காஷ்டா$^{2}$ம் வ்ரஜதா ப்ரைதி$^{4}$த தேஜஸா ப்ரதீசீம் |
பரிஷோத$^{4}$யதா ஸ்வபாத$^{3}$ ஸங்கா$^{3}$த் ப்ருதி$^{2}$வீம் ப்ராக்ஞ தி$^{3}$வாகரேண ரேஜே || 13-3

தம் நடைப்பயணத்தால் பூமியை பவித்ரமாக்கியவாறு, கங்கையைப் போல பிரவாகித்து வந்தார். மாயாவதிகளை வாதத்தில் வீழ்த்தி, சஜ்ஜனர்களுக்கும், தம்மில் பக்தி உள்ளவர்களுக்கும் அருளினார்.

ஸமயேன க$^{3}$தோ஽மஹீயாஸ஽ஸௌ விஷயம் ஸ்தம்ப$^{4}$ பதோ$^{3}$ப ஸர்ஜனாக்$^{2}$யம் |
மத$^{3}$னாதி$^{4}$பதே: ஸுதாம தா$^{4}$ம ப்ரவிவேஷாகி$^{2}$ல லோக வந்த$^{3}$னீயம் || 13-9

தக்க காலத்தில், ஸ்ரீமதாசார்யர் கபீனாடு மதனேஸ்வர ஆலயத்திற்கு வந்தார்.

மதனேஸ்வர ஆலயத்தில் ஸ்ரீமதாசார்யர் செய்த அற்புதங்களை அடுத்த ஸ்லோகத்தில் விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் 50]
**நிஶீயனாமந்தி$^3$ரதி$^3$ களெயுத**
**பஸரிஸலு ஜயஸிம்ஹராஜனு**
**ஹஸன ப$^4$குதிய ப$^4$ரதி$^3$ ப$^3$ந்தெ$^3$து$^3$ரினலி நமிஸித$^3$னு |**
**அஸமதேஜர த$^3$ருஶனதி$^3$ பர**
**வஶரு ஸாஸிர ஜனரு ப$^3$ருதிரெ**
**ஸூஸமயதி$^3$ ஸ்ரீவிஷ்ணுமங்க$^3$ள ப$^3$ளிகெ$^3$ ஸாரித$^3$ரு ||50**

நிஷியனாமந்திரதி - மதனேஸ்வரனின் ஆலயத்தில்; பஸரிஸலு - தங்கியிருந்து; களெயுத - காலத்தை கழித்தார்; ஹஸன பகுதிய பரதி - புன்னகையுடன், அதிகமான பக்தியுடன்; பந்து - வந்து; ஜயஸிம்ஹராஜனு - ஜயசிம்ம அரசன்; எதுரினலு நமிஸிதனு - எதிரில் நின்று வணங்கினான்; அஸமதேஜர - ஒப்பற்ற தேஜஸ் கொண்டவரின்; தருஷனதி - தரிசனத்தால்; ஸாஸிர ஜனரு - ஆயிரக்கணக்கான மக்கள்; பருதிரெ - வந்து கொண்டிருக்க; பரவஷரு - பரசவம் அடைந்தனர்; ஸூஸமயதி - தக்க காலத்தில்; ஸ்ரீவிஷ்ணுமங்கள - ஸ்ரீவிஷ்ணு மங்களத்தின்; பளிகெ - சமீபத்தில்; ஸாரிதரு - வந்தார்;

மதனேஸ்வர ஆலயத்தில் ஸ்ரீமதாசார்யர் செய்த அற்புதங்களை இந்த ஸ்லோகத்தில் விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

ஸ்ரீமதாசார்யர், சிறிது காலம், மதனேஸ்வரனின் ஆலயத்தில் தங்கியிருந்தார். புன்னகையுடன், அதிகமான பக்தியுடன் வந்து ஜயசிம்ம ராஜன், ஆசார்யரின் எதிரில் நின்று வணங்கினான். ஆயிரக்கணக்கான மக்கள் வந்து கொண்டிருக்க ஒப்பற்ற தேஜஸ் கொண்டவரின் தரிசனத்தால், பரவசம் அடைந்தனர். தக்க காலத்தில் ஸ்ரீவிஷ்ணு மங்களத்தின் அருகில் ஆசார்யர் வந்தார்.

இந்த விஷயங்கள் மத்வ விஜயத்தில் 13-20 ஸ்லோகத்திலிருந்து சொல்லப்பட்டுள்ளது.

ஸ்ரீமதாசார்யரின் பயணம் என்றால், அது ஸ்ரீஹரியின் ரதயாத்திரை. அதில் உடனிருந்தவர்களே தன்யர். சிஷ்யர்களில் சன்யாசி,

கிருஹஸ்தர், ப்ரம்மசாரிகள் என அனைவரும் இருந்தனர். அவரவர்களின் ஆசிரம தர்மங்களை பின்பற்றினர்.

பரிவார ஜனா ந மார்க$^{3}$ து$^{3}$க்க$^{2}$ம் ப்ரயயு: பூருஷ$^{2}$ ரத்னமீக்ஷ்யமாண: |
இதி நாத்பு$^{4}$தமஸ்ய ஹி ப்ரயாந்தி ஸ்ம்ருதி மாத்ராத்$^{3}$ ப$^{4}$வினோ ப$^{4}$வாபவர்க$^{3}$ம் || (13-20)

ஆசார்யருக்கு சோர்வு என்பதே இல்லை. ஆனந்ததீர்த்தரை பார்ப்பவர்களுக்கு பிரச்னைகள் இல்லை. அவரை நினைப்பவர்களுக்கு, சம்சாரம் என்னும் துக்கம் நாசமடைகிறது என்றால் அவரது தரிசனத்தால் மோட்சத்தையே பெறுகிறார்கள் என்பதில் ஆச்சரியம் என்ன?

இதற்குள் ஆசார்யர் வரும் செய்தி ஜயசிம்மனுக்கு கிடைத்தது. உடனடியாக அவரை சந்திக்கவேண்டி புறப்பட்டான். தன் வாழ்க்கை அர்த்தமுள்ளதாக ஆயிற்று என்று நினைத்தான். 'சஹ கைஸ்சன பூ சுரைரவாப்த: த்ரிஜகத் பூஜ்ய பதாந்திகே நனாம ||' (13-22). சைன்யத்தை தூரத்தில் நிறுத்தி, மூன்று உலகத்தவரும் வணங்கும்படியான ஆசார்யரின் பாதம் பணிந்தான். பணிவு, பக்தி நிரம்பிய மனதுடன் ஆசார்யரை வரவேற்றான். விஷ்ணுமங்கள ஆலயத்திற்கு அருகில் வந்தனர். பல கிராமங்களிலிருந்து அரசனைக் காண வந்த மக்கள், ஸ்ரீபூர்ணப்ரக்ஞரை கண்டவுடன் மெய்மறந்து அவரையே பார்த்து நின்றனர். ஸ்ரீமதானந்த தீர்த்தரால் இயற்றப்பட்ட ஹரிஸ்தோத்திரம் (த்வாதச ஸ்தோத்திரம் முதலான) படித்தவாறு, அழகான குரல்களில் பாடியவாறு, சிலர் நடனமாடியவாறும் வந்தனர்.

ஸ்ரீமதாசார்யரின் தோற்ற வர்ணனையை அடுத்த ஸ்லோகத்தில் விவரமாக கூறுகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் 51]
**உத்தமர லக்ஷணக$^{3}$ளலி**
**மூவத்தெரடு$^{3}$ மாத$^{3}$ரிய தோருவ**
**மஸ்தகாதி$^{3}$ நகா$^{2}$ந்த ஸௌந்த$^{3}$ர்யக$^{3}$ள பெ$^{3}$ளகு$^{3}$தலி |**
**ஶிஸ்தினலி ப$^{3}$ருதிருவ மூர்த்திய**
**ஹத்திரதி$^{3}$ நோடி$^{3}$த$^{3}$ரு ஜனக$^{3}$ளு**
**ஸ்வஸ்தமானஸதி$^{3}$ந்த$^{3}$ பொக்கரு தே$^{3}$வநிலயவனு ||51**

உத்தமர - உத்தமரின்; லக்ஷணகளலி - தேக லட்சணங்களில்; மூவத்தெரடு - 32; மாதரிய தோருவ - அனைத்தையும் காட்டும்; மஸ்தகாதி நகாந்த - தலை முதல் கால் நகம் வரை; ஸௌந்தர்யகள - அழகினை; பௌகுதலி - ஒளிர்வித்தவாறு; ஷிஸ்தினலி - கம்பீரமாக; பருதிருவ - வந்து கொண்டிருக்கும்; மூர்த்திய - ஸ்ரீமதாசார்யரின் தேகத்தை; ஜனகளு - மக்கள்; ஹத்திரதி நோடிதரு - அருகில் பார்த்தனர்; ஸ்வஸ்தமானஸதிந்த - தெளிவான மனதுடன்; தேவநிலயவனு - தேவாலயத்தை; பொக்கரு - அடைந்தனர்.
ஸ்ரீமதாசார்யரின் தோற்ற வர்ணனையை இந்த ஸ்லோகத்தில் விவரமாக கூறுகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

உத்தமரான 32 லட்சணங்களில் அனைத்தையும் பெற்று, தலை முதல் கால் நகம் வரை உள்ள அழகினை ஒளிர்வித்தவாறு, கம்பீரமாக வந்து கொண்டிருக்கும் ஆசார்யரின் தேகத்தை மக்கள் அருகில் பார்த்தனர். தெளிவான மனதுடன் தேவாலயத்தை அடைந்தனர்.

மத்வ விஜயத்தில் 13-25 முதல் 13-35 வரையிலான ஸ்லோகங்களில் பூர்ணபிரக்ஞரின் தோற்ற வர்ணனை செய்யப்பட்டுள்ளது.

உதயசூரியனின் ஒளியைவிட அதிக ஒளிகொண்டவரான பூர்ணபிரக்ஞரின் நடை சிங்கத்தின் நடையைப் போல இருந்தது. அனைத்து சுப லட்சணங்களையும் கொண்டவரான ஸ்ரீமதாசார்யரை மக்கள் பார்த்த விதத்தை பண்டிதர் அழகாக வர்ணிக்கிறார்.

நக$^{2}$ நிர்ஜித பத்$^{3}$மராக$^{3}$ ராக$^{3}$ம் வரகூர்ம ப்ரபத$^{3}$ம் நிகூ$^{3}$ட$^{4}$கு$^{3}$ல்ப$^{2}$ம் |
ஸுரவர்ய கராக்$^{3}$ர ஸேவ்ய ஜங்க$^{3}$ம் த்$^{3}$விரதோ$^{3}$தா$^{3}$ர கரோபமோரு யுக்$^{3}$மம் || (13-29)

பத்மராக மணியைப் போன்ற கால் நகங்கள். ஆமையைப் போன்ற பாதங்கள். ருத்ராதி தேவதைகளும் வணங்கத்தக்க கால்கள், வலுவான இரு தொடைகள், யானையின் துதிக்கையைப் போன்று இருந்தன. தூய பட்டாடையை இடுப்பில் அணிந்திருந்தார். மெலிந்த வயிறு, கழுத்து மற்றும் நெற்றியில் மூன்று ரேகைகள் இருந்தன. விசாலமான மார்பு, பெரிய சுவரினைப் போன்ற தோள்கள், பெரிய, நீண்ட, வட்டமான அழகான தும்பிக்கையைப் போன்ற கைகள், அவரது உள்ளங்கை சிவப்பாக, த்வஜ, சக்ராங்கித போன்ற ரேகைகளைக் கொண்டிருந்தன.

முதன்முதலில் பார்ப்பவர்கள் அவரது முகத்தை முழுநிலவோ என்று எண்ணுவர். பிறகு நிலவில் இருக்கும் குறைகள் இவர் முகத்தில் இல்லை என்று அறிவர். மத்வரின் சிரிப்பு மிகவும் அழகானது. அனைவரும் ஈர்க்கவல்லது. அவரது வரிசையான பற்கள், மல்லிகை மொட்டுக்களை போல அழகாக இருந்தன. உதடுகள் செக்கச் சிவந்திருந்தன. தாமரை இதழ்களைப் போன்ற பெரிய கண்கள். துளசி தரித்த பெரிய காதுகள். அழகான கன்னங்கள் இவற்றுடன் கூடிய ஸ்ரீமதாசார்யரை ஆயிரக்கணக்கான மக்கள் கண்டனர்.

மொத்தமாக சொல்லவேண்டுமெனில் ‘சகலாவயவான் ஸ்புடம் மிமானா: ப்ரதிமா லக்ஷண லக்ஷணாய லக்ஷ்யம் |’ (13-36) லட்சண சாஸ்திரத்தில் சொல்லியவாறு அனைத்து உறுப்புகளையும் கொண்டிருந்தார் ஸ்ரீமதாசார்யர். கடவுளர்களின் சிலைகளுக்கான மாதிரிக்கான சரியான அளவுகளைக் கொண்டிருந்தார். ஆயிரக்கணக்கான மக்களுக்கு நடுவில் இருந்தாலும், சஜ்ஜனர்களின் மேலிருந்த கருணையால், மார்புக்கு மேலான பகுதியை அனைவருக்கும் தெரியுமாறு இருப்பார்.

இவரைக் கண்ட மக்கள் வியப்புடன், நாம் தன்யரானோம் என்று கருதினர். மத்வரின் சித்தாந்தமும் இவ்வாறு மக்களிடையே பரவத் துவங்கியது என அறியலாம்.

த்ரிவிக்ரம பண்டிதாசார்யரின் வருகையை அடுத்த ஸ்லோகத்தில் விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் 52]
**ப$^{4}$வத$^{3}$ தாபவ பரிஹரிஸி ப$^{3}$லு**
**ஜவதி$^{3}$ மங்க$^{3}$ளததிய நீடு$^{3}$வ**
**ப$^{4}$கவத$^{3}$வதாரக$^{3}$ள லீலாம்ருதவனுணிஸித$^{3}$ரு |**
**கவிவரேண்ய த்ரிவிக்ரமவர்யனு**
**ஸவியனரிது$^{1}$ மத்$^{4}$வ ஶா ஶா ஸ்த்ரத$^{3}$**
**ஸுவினயதி$^{3}$ பே$^{3}$டி$^{3}$த$^{3}$னு கு$^{3}$ருக$^{3}$ள சரணதா$^{3}$ஸ்யவனு ||52**

பவத தாபத - சம்சார சுழற்சியின் கஷ்டங்களை; பரிஹரிஸி - பரிகரித்து; பலு ஜவதி - மிகவும் விரைவாக; மங்களததிய நீடுவ - மோட்சத்தையே கொடுப்பதான; பகவதவதாரகள - பகவத்

அவதாரங்களின்; லீலாம்ருதவனு - லீலைகள் என்னும் அமிர்தத்தை; உணிஸிதரு - உண்வித்தார்; கவிவரேண்ய - அறிஞரான; த்ரிவிக்ரமவர்யனு - த்ரிவிக்ரம பண்டிதாசார்யார்; மத்வஷாஸ்த்ரத - மத்வ சாஸ்திரத்தின்; ஸவியனரிது - சுவையினை அறிந்து; குருகள - ஸ்ரீமதாசார்யரின்; சரணதாஸ்யவனு - தன்னை தாசனாக ஏற்றுக்கொள்ளுமாறு: ஸுவினயதி - மிக்க பக்தி மரியாதைகளுடன்; பேடிதனு - வேண்டிக் கொண்டார்.

த்ரிவிக்ரம பண்டிதாசார்யரின் வருகையை இந்த ஸ்லோகத்தில் விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

சம்சார சுழற்சியின் கஷ்டங்களை பரிகரித்து, மிகவும் விரைவாக மோட்சத்தையே கொடுப்பதான, பகவத் அவதாரங்களின் லீலைகள் என்னும் அமிர்தத்தை ஸ்ரீமதாசார்யர் உண்வித்தார். அறிஞரான த்ரிவிக்ரம பண்டிதாசார்யார், மத்வ சாஸ்திரத்தின் சுவையினை அறிந்து, ஸ்ரீமதாசார்யரின் தாசனாக தன்னை ஏற்றுக்கொள்ளுமாறு, மிக்க பக்தி மரியாதைகளுடன் வேண்டிக் கொண்டார்.

சர்வக்ஞ மத்வரின் சொற்பொழிவின் சிறப்பு அம்சங்கள் 13-40 ஸ்லோகம் முதல் விவரிக்கப்பட்டுள்ளது.

அவத[3]த் ஸ கதா[2]ம் ரதா[2]ங்க[3]பாணே: ப[4]க[3]வான் பா[4]க[3]வதே ப[4]வாப ஹந்த்ரீம் |
அனுகூன கு[3]ண ஸ்வராதி[3] பா[4]ஜா நிஜ சிஷ்ய ப்ரவரேண வாச்யமானே || 13-40

பிறகு ஆசார்யர், விஷ்ணுமங்கள ஆலயத்தில் நுழைந்தார். பெரிய சபை. நரசிம்ம பூபாலன், பல அரசர்கள், அறிஞர்களுக்கு நடுவில் ஆசார்யர் நட்சத்திரங்களுக்கு நடுவே ஒளிரும் நிலவைப் போல காட்சியளித்தார். ஸ்ரீமதாசார்யரின் சிஷ்யரான ஹ்ருஷிகேச தீர்த்தர் பாகவத பிரவசனத்தை செய்ய, ஸ்ரீமதாசார்யர் ஸ்ரீகிருஷ்ணனின் கதையை மிகவும் அற்புதமாக சொற்பொழிவாற்றினார். இவரது பேச்சில் இருந்த உணர்ச்சிகளைக் கண்டு அனைவரும் மயங்கி மகிழ்ச்சியடைந்தனர். பண்டிதர்களுடன் பாமரர்களையும் இவரது சொற்பொழிவு அமிர்த சாகரத்தில் மூழ்கடித்தது.

க$^3$மனாஸன ஸங்க$^3$தா$^2$தி$^3$ லீலா: ஸ்ம்ருதி மாத்ரேண ப$^4$வாபவர்க$^3$ தா$^3$த்ரீ: |
கத$^2$மப்யமரா: ப்ரபஞ்சயேயு: நனு மத்$^4$வஸ்ய ந மாத்ருஷோऽல்ப போ$^3$தா$^4$: || (13-42)

ஜீவோத்தரமான ஸ்ரீமதாசார்யரின் வருகை, பேச்சு, சொற்பொழிவு ஆகிய லீலைகளை நினைத்த மாத்திரத்திலேயே சஜ்ஜனர்களுக்கு சம்சார துக்கம் களைந்து, நித்ய சுகமயமான மோட்சம் கிடைக்கிறது. மத்வரின் ஸ்மரணையே துக்கத்தைப் போக்கும்; ஞானானந்தங்களைக் கொடுக்கும்; இறுதியில் மோட்சமே கிடைக்கும். இத்தகைய மகிமை பொருந்தியவரின் லீலைகளை பாரதிதேவி, ருத்ராதிகளின் அருளால் தேவதைகள் மட்டுமே சொல்லவல்லர். என்னைப் போன்ற சிறுமதியினர் எப்படி வர்ணிக்க முடியும் என்று மிகப் பணிவுடன், தழுதழுத்த குரலில் நாராயண பண்டிதர், ஆசார்யரைக் குறித்து விவரிக்கிறார்.

த்ரிவிக்ரம பண்டிதாசார்யரின் பின்னணி, மத்வ விஜயத்தில் 13-43 ஸ்லோகத்திலிருந்து தொடங்குகிறது.

ஸுதப: கவிதாதி$^3$ ஸத்கு$^3$ணானாம் லிகுசானாம் குல ஜோऽங்கிரோன்வயானாம் |
அப$^4$வத்$^3$ கு$^3$ஹ நாமகோ விபஸ்சித் கவிவர்யோऽகி$^2$ல வாதி$^3$வந்த$^3$னீய: ||13-43

லிகுச வம்சம் அங்கிரச கோத்ரத்தை சேர்ந்தவர் சுப்ரமண்யர். சிறந்த தவம் செய்துவந்த பண்டிதர். கவிஞர். இவரது மனைவி உத்தமள். கிருஷ்ணபக்தை. இவர்களுக்கு பல குழந்தைகள் பிறந்தாலும், யாரும் தங்கவில்லை. கவலைப்பட்ட தம்பதிகள் லோகேஸ்வரனான ஹரியை மற்றும் சங்கரநாராயணனை (ஹரிஹர) வேண்டினர். ஸ்ரீஹரியின் அருளால் ஒரு சிறந்த குழந்தையைப் பெற்றனர். இந்த குழந்தைக்கு சுப்ரமண்யர், ஜாதகர்மம் முதலான கர்மங்களை செய்து, த்ரிவிக்ரம என்று பெயரிட்டனர்.

கள பாஷண ஏவ சூரி போத: கவிராசீதனவத்ய பத்யவாதீ | (13-47)
மழலைப் பேச்சின்போதே இந்தக் குழந்தை பிழைகளற்ற சமஸ்கிருத ஸ்லோகங்களை இயற்றும் ஆசு-கவியாக இருந்தான். தக்க சமயத்தில்

உபநயனம், வேத அத்யயனம் ஆயிற்று. அனைத்து சாஸ்திரங்களிலும் தலைசிறந்தவனாக ஆனான். இப்படி அனைத்து மதங்களின் அறிஞர்களிடமும் நற்பெயர் பெற்றார். உஷாஹரண என்னும் நவரசங்கள் நிரம்பிய காவியத்தை படைத்தார்.

அத$^{2}$வேத$^{3}$ புராண பா$^{4}$ரதானி ஸ்வயமாலோச்ய யதா$^{2}$வபோ$^{3}$த$^{4}$ மத்ர |
கு$^{3}$ணவந்தம் உபாஸ்மஹே முகுந்த$^{3}$ம் ஸ்ம்ருதி த$^{4}$ர்மான் ஸ்புடமா சரந்த ஏவ || (13-60)

த்ரிவிக்ரம பண்டிதர், வேத சாஸ்திர புராணங்களின் சாரத்தை அறிந்தவராக, தமக்கு தெரிந்தவரையில், சகலகுண பரிபூர்ணனான முகுந்தனையும் மற்றும் ஸ்ருதி ஸ்ம்ருதிகளில் சொல்லியவாறும் தன் கடமைகளைச் செய்து வந்தார். மத்வரிடம் ஏற்கனவே இருந்த தனது சகோதரன் அனுப்பியிருந்த மத்வரது கிரந்தங்களை, இரவு சமயங்களில் படித்து வியப்படைந்து உண்மையான அறிவினைப் பெற்றார். ஸ்ரீமதாசார்யரின் தத்வவாத மற்றும் அபூர்வமான வர்ணனைகளைப் படித்து, மனதில் மாத்வராகவே மாறிவிட்டார்.

பிறகு ஸ்ரீமதாசார்யரைக் கண்டு தம் மனதிலிருந்த சந்தேகங்களைப் போக்கி, ஸ்ரீமதாசார்யரின் சித்தாந்தமே தோஷங்கள் இல்லாதது என்று மெச்சினார்.

தம் விஷ்ணுமங்க$^{3}$லக$^{3}$தம் ப$^{3}$ஹள ப்ரபோ$^{3}$த$^{4}$ம் ப்ராப்யாம்யவந்தன ததா$^{3}$sயுக$^{3}$ விக்ரமார்ய: |
ஆனந்தத$^{3}$ம் ஸ சதுரானன ஹாஸலக்ஷ்ம்யா தத்வம் ப்ரவேத்துமமரேந்த்ர இவாப்$^{3}$ஜ யோனிம் ||13-69

ஒருமுறை த்ரிவிக்ரம பண்டிதர், விஷ்ணுமங்களத்தில், சஜ்ஜனர்களுக்கு ஆனந்தத்தைக் கொடுக்கக்கூடிய, தசப்ரமதிகள் என்று அழைக்கப்பட்ட, ஸ்ரீபூர்ணப்ரக்ஞரிடத்தில் வந்து வணங்கினார். இது தேவேந்திரன் பரபிரம்ம தத்வங்களை அறிவதற்கு நான்முக பிரம்மனிடத்தில் வந்ததைப் போலிருந்தது.

இத்துடன் மத்வ விஜய பதிமூன்றாம் சர்க்க விஷயங்கள் முடிந்தன. அடுத்த ஸ்லோகத்திலிருந்து பதினான்காம் சர்க்க ஸாரம் துவங்குகிறது.

[ஸ்லோகம் 53]
**ருணியு நானிரெ நிம்ம கருணகெ**
**மிணுகு[1]திருவரு க்[3]ரந்தசோரரு**
**கெணகலாரரு முந்தெ[3] நிம்மய ஸஹசரரனெந்தூ[3] |**
**க[3]ணிஸலாக[3]து[3] குந்து[3]கொரதெய**
**த்ருணகெ ஸமரீஜனரு நரபதி**
**வினயத[3]லி பே[3]ட[3]லு த்ரிவிக்ரமனனுஜக[3]த[3]நித்த ||53**

ருணியு நானிரெ - நான் என்றைக்கும் கடன்பட்டிருக்கிறேன்; நிம்ம கருணகெ - உங்களின் கருணையைப் பெற்றவர்கள்; மிணுகுதிருவரு - ஜொலிக்கிறார்கள்; க்ரந்தசோரரு - மாயாவாதிகள்; முந்தெ - இனிமேல்; நிம்மய - உங்களின்; ஸஹசரரனு - பின்தொடர்பவர்களை; எந்தூ - என்றும்; கெணகலாரரு - எதிர்க்க மாட்டார்கள்; குந்துகொரதெய - குற்றம் குறைகளை; கணிஸலாகது - பார்க்க முடியாது; ஈ ஜனரு - இத்தகையவர்கள்; த்ருணகெ ஸமரு - புல்லிற்கு சமமானவர்கள்; நரபதி - அரசன்; வினயதலி பேடலு - பக்தி மரியாதையுடன் கேட்க; த்ரிவிக்ரமன அனுஜகெ - த்ரிவிக்ரம பண்டிதாசார்யரின் சகோதரரான சங்கர பண்டிதரிடம்; அத இத்த - அதனை (கிரந்தங்களை) மறுபடி கொடுத்தார்.

அரசன் ஜயசிம்ம பூபாலன், ஸ்ரீமதாசார்யரிடம் வேண்டிக் கொள்வதை இந்த ஸ்லோகத்தில் விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

நான் என்றைக்கும் கடன்பட்டிருக்கிறேன். உங்களின் கருணையைப் பெற்றவர்கள் ஜொலிக்கிறார்கள். மாயாவாதிகள் இனிமேல் உங்களை பின்தொடர்பவர்களை என்றும் எதிர்க்க மாட்டார்கள். குற்றம் குறைகளை இனிமேல் பார்க்க முடியாது. இத்தகையவர்கள் புல்லிற்கு சமானமானவர்கள். அரசன் இவ்வாறு பக்தி மரியாதையுடன் கேட்க, ஆசார்யர், அந்த கிரந்தங்களை மறுபடி த்ரிவிக்ரம பண்டிதாசார்யரின் சகோதரரான சங்கர பண்டிதரிடமே கொடுத்தார்.

மத்வ விஜய 14ம் சர்க்கத்தின் முதல் இரு ஸ்லோகங்களின் ஸாரமே இந்த ஸ்லோகம்.

பரிவ்ருட[4] க[4]னஸங்கே ராஜஸிம்ஹோர்ஜ ஷக்த்யா
த்யஜதி மலின பா[4]வம் நீரஸத்வான்னிகாமம் |

ஸ்புடமுத3யதி தேஜஸ்வ்யுஜ்வலே மத்4வ பா4னௌ
ஸுஜன ஜலஜ காந்த்யை விஸ்வமாஸீன்மனோக்ஞம் ||14-1

க்ருதமபக்ருதமார்யை: க்ஷம்யதாம் க்ஷாந்தி பூஷை:
இதி ம்ருது3 வத3தாம் ச ப்ரார்த்த2னாபி4: ப்ரபூ4ணாம் |
அப ஹ்ருதமபரேஷாம் மந்த்ரதோ க்3ரந்த2 ஜாதம்
த3ஷ ஹ்ருத3ய நியோகா3த3க்ரஹீச்சங்கரார்ய: || 14-2

'பூஜ்யரே! அபாரமான கருணையைக் கொண்டவரே! இவர்களை மன்னித்து விடுங்கள்' என்று ஜயசிம்ம பூபால அரசன் கேட்டுக்கொண்டான். பத்மதீர்த்தன் களவாடிச் சென்ற கிரந்தங்களை ஜயசிம்மன் மறுபடி கொண்டு வந்து ஒப்படைத்தான். ஆசார்யர் அதனை மறுபடி சங்கர பண்டிதரிடம் கொடுத்து பாதுகாக்கும்படி சொன்னார். கிரந்தங்களை திருடியவரை பூபாலன் மற்றும் ஆசார்யர் மன்னித்தனர்.

மாதனூரு ஸ்ரீவிஷ்ணு தீர்த்தர், தனது ஸ்ரீமத் சுமத்வ விஜய ப்ரமேய மாலிகா கிருதியில், மத்வ விஜய பதினான்காம் சர்க்கத்தின் சுருக்கத்தையும், இந்த சர்க்கத்தை படிப்பதால் வரும் பலனையும் இவ்வாறு கூறுகிறார்.

ஸதா3 ஸ்ரீஹரிபாதா3ப்3ஜ க3தமானஸ ஸம்ப்4ரம: |
ஸ்னானவ்யாக்2யா போ4ஜனாதி3 கரோத்யனுதி3னம் ஸுதீ4: ||15||

ஆசார்யர் எப்போதும், நிரந்தரமாக ஸ்ரீஹரியின் பாத கமலங்களிலேயே பக்தி கொண்டிருப்பதால், தினமும் அருணோதய காலத்திலிருந்து, இரவு வரை, விதிப்படி செய்துவரும் ஸ்னானம், பூஜை, பாட, பிரவசன, போஜன, தியான - ஆகிய செயல்களை பக்தி சிரத்தையுடன் செய்து கொண்டிருந்தார்.

அபரோக்ஷ த்3ருஷேர்விக்4ன நாஷஸ் தத்3தா3பனம் ததா2 |
மோக்ஷதா3னமிதி ப்ரோக்தம் ப2லம் ஷோட3ஷகம் பரம் ||21||

பதினான்காம் சர்க்கம் : அபரோக்ஷ ஞானத்தில் வரும் தடைகள் விலகுதல்

ஸ்ரீமதாசார்யரின் தினப்படி நடவடிக்கைகளை அடுத்த ஸ்லோகத்திலிருந்து விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் 54]
**ஸகலமங்க$^3$லதா$^3$த ஸுஜனகெ**
**ஸுக$^2$வ லேஶவ கொட$^3$னு கு$^1$னகெ$^1$**
**சகிதராத$^3$ரு நோட$^3$லீதன மத்$^4$யமத$^3$ ஜனரு |**
**அகி$^2$ல ஸமயதி$^3$ ஸ்னானஜபதப**
**ஸுக$^2$மயத$^3$ ஶா ஸ்த்ரக$^3$ள ப்ரவசன**
**விகஸவாத$^3$து$^3$ ஸுஜன நிகரகெ ஸாது$^4$கர்மக$^3$ளு ||54**

ஸுஜனகெ - சஜ்ஜனர்களுக்கு; ஸகலமங்கலதாத - அனைத்து மங்களங்களையும் கொடுக்கிறார்; குனகெ - துஷ்டர்களுக்கு; ஸுகவ லேஷவ கொடலு - சுகம் கொடுப்பதில்லை (அதிகப்படியான த்வேஷத்தை கொடுக்கிறார்); நோடலீதன - இவரைக் கண்ட; மத்யமத ஜனரு - மத்யஸ்தர்கள் - சகிதராதரு - வியப்படைந்தனர்; அகில ஸமயதி - முழு நேரமும் (எப்போதும்); ஸ்னானஜபதப - ஸ்னானம், ஜபம், தபம்; ஸுகமயத ஷாஸ்த்ரகள பிரவசன - சுகத்தைக் கொடுப்பதான பிரவசனங்கள்; ஸாதுகர்மகளு - இந்த ஸாதுவின் செயல்கள்; ஸுஜன நிகரகெ - சஜ்ஜனர்களின் கூட்டத்திற்கு; விகலவாதது - மகிழ்ச்சியைக் கொடுத்தன.

ஸ்ரீமதாசார்யரின் தினப்படி நடவடிக்கைகளை இந்த ஸ்லோகத்திலிருந்து விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

ஸ்ரீமதாசார்யர், சஜ்ஜனர்களுக்கு அனைத்து மங்களங்களையும் கொடுக்கிறார். துஷ்டர்களுக்கு சுகம் கொடுப்பதில்லை (அதிகப்படியான த்வேஷத்தை கொடுக்கிறார்). இவரைக் கண்ட மத்யஸ்தர்கள் வியப்படைந்தனர். முழு நேரமும் (எப்போதும்) ஸ்னான, ஜப, தப, சுகத்தைக் கொடுப்பதான பிரவசனங்கள் என இந்த ஸாதுவின் செயல்கள், சஜ்ஜனர்களின் கூட்டத்திற்கு மகிழ்ச்சியைக் கொடுத்தன.

மத்வ விஜய 14-6 ஸ்லோகத்தின் அர்த்தத்தையே இந்த ஸ்லோகம் விளக்குகிறது.

அகி$^2$லக$^2$ல கு$^1$லானாம் வர்த$^4$யன் த்$^4$வேஷதோ$^4$ஷம்

வித[3]த[4]த[3]பி நராணாம் கௌதுகம் மத்[4]யமானாம் |
ஸ்வக[3]தி ஸமுசிதானாம் பூ[4]திதா[3]யி ஷுபா[4]னாம்
ப[3]ஹள ஹ்ருதி[3]ஹ நின்யே ஷர்வரீ: காஸ்சிதே[3]வம் || 14-6

பூர்ணப்ரக்ஞர், தம்மிடம் பக்தி கொண்ட சஜ்ஜனர்களுக்கு ஞானபக்தி ஐஸ்வர்யங்களை வழங்கியவாறும், எதிரிகளல்லாத மத்யஸ்தர்களுக்கு வியப்பை உண்டுபண்ணியும், துஷ்டர்களுக்கு அதிகப்படியான த்வேஷத்தையும் கொடுத்து விஷ்ணுமங்களத்தில் நாட்களை கழித்தார்.

ஸ்ரீமதாசார்யரின் அனுஷ்டான கிரமங்களை அடுத்த ஸ்லோகத்தில் விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் 55]
**அருணனுத[3]யத[3]லெத்து[3] கு[3]ருக[3]ளு**
**ஹருஷமானஸதி[3]ந்த[3] ஸ்ரீஶன**
**சரணகமலவ சிந்திஸுத ஸந்ததவு |**
**ஸரிவ ஸூர்யனு பஶ்சிமகெ தா**
**மரெய பொந்து[3]வதனக கர்மவ**
**பரிபரியிம் சரிஸுத தாவனுதி[3]ன ||55**

குருகளு - ஸ்ரீமதாசார்யர்; அருணனுதயதலெத்து - அருணோதய காலத்தில் எழுந்து; ஹருஷமானஸதிந்த - மகிழ்ச்சியான மனதுடன்; ஸ்ரீஷன - ஸ்ரீமன் நாராயணனின்; சரணகமலவ - பாத கமலங்களை; ஸந்ததவு - எப்போதும்; சிந்திஸுத - சிந்தித்தவாறு; ஸூர்யனு - சூரியன்; பஷ்சிமகெ - மேற்கில்; ஸரிவ - நகர்ந்து; மரெய பொந்துவதனக - மறையும் வரை ; தா - ஸ்ரீமதாசார்யர்; அனுதின - தினந்தோறும்; கர்மவ - கடமைகளை; பரிபரியிம் - விதவிதமாக; சரிஸுத - செய்து கொண்டிருந்தார்.

ஸ்ரீமதாசார்யரின் அனுஷ்டான கிரமங்களை இந்த ஸ்லோகத்தில் விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

ஸ்ரீமதாசார்யர் அருணோதய காலத்தில் எழுந்து, மகிழ்ச்சியான மனதுடன், ஸ்ரீமன் நாராயணனின் பாத கமலங்களை எப்போதும் சிந்தித்தவாறு, சூரியன் மேற்கில் நகர்ந்து, மேற்கில் மறையும்வரை,

தினந்தோறும், தம் கடமைகளை விதவிதமாக செய்து கொண்டிருந்தார்.

ஸ்ரீபூர்ணப்ரக்ஞரின் ஆன்ஹிக வர்ணனை மத்வ விஜயத்தின் 14ம் சர்க்கத்தில் 14-7 முதல் விளக்கப்பட்டுள்ளது.

உத3யதி வினதாயா நந்த3னே ஷ்லாக்4ய காலே
ஸ க்ருத ஸகல க்ருத்ய: க்ருத்யவேதி3 ப்ரவேக: |
அருண யவனிகாந்த பி3ரம்ம நாராயணாக்2யம்
கு3ரு க3ணமபி4 த3த்4யௌ யோக்3ய யோகா3ஸனஸ்த2: ||14-7

ஆன்ஹிகங்களை சரிவர செய்வதில் சிறந்தவரான ஸ்ரீமதாசார்யர், அருணோதய காலத்தில் எழுந்து ஸ்னானம் செய்து, தக்க காலத்தில் அனைத்து கர்மங்களையும் யோக நிலையில் அமர்ந்து செய்தார். சிவப்புத் திரைக்கு பின்னால் அமர்ந்து, ஸ்ரீமன் நாராயணனை குறித்து தியானம் செய்தார்.

அம்ருதமபி நிரீக்ஷ்யாsஸ்த்ராவி நிர்மால்யஸூனே
க்4ருதமித3மிதி ஸத்vயோ ப்4ராந்திமந்தோsபி சிஷ்2யா: |
ஸ்ரத3து4ரதி4க வாக்யைர் விப்4ரமாஸ்தச்ச பஸ்சாத்3
அனுதிvனமம்ருதான்னைஸ்தஸ்ய ஸேவஸ்ய ஷக்த்யா || 14-13

இப்படி தகுந்த நேரத்தில் சிஷ்யர்கள் ஸ்னான சந்தியாவனத்தை முடித்து, சிலர் ஜபதபங்களை செய்து, வேறு சிலர் நிர்மால்ய சாலிக்ராம பூஜையை செய்பவர்களாக இருந்தனர். ஸ்ரீமன் மத்வாசார்யரால் எடுக்கப்பட்ட நிர்மால்ய தீர்த்தத்தில் அவரது மகிமை என்னும் அமிர்தமும் நிறைந்திருந்தது. இவை அனைத்தும் சூர்யோதத்திற்கு முன்னர் நடப்பவை.

ஸ்ரீமதாசார்யரின் ஆன்ஹிகங்களை அடுத்த ஸ்லோகத்திலும் தொடர்ந்து விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் 56]
**ஸ்னானமாடி3 தடாகத3லி ஶுசி**
**மானஸத3 மந்தி3ரதி3 ஶ்ரீ ஶகெ3**
**ஸானுராக3தி3 பா4வகுஸுமக3ளர்ப்பிஸுத முத3தி3 |**
**ப்ராணபதி ஹரிகர்ப்பிஸித3 பர**

**மான்னவனு பு[4]ஞ்சிஸுதலீபரி**
**ஸ்னானஜபதப ப்ரவசனக[3]ளிம் காலவனு களெது[3] ||56**

தடாகதலி - தடாகத்தில்; ஸ்னானமாடி - ஸ்னானம் செய்து; ஷுசி மானஸத மந்திரதி - தூய்மையான தனது இதயக் கோயிலில்; ஸானுராகதி - மிகவும் பக்தியுடன்; பாவகுஸுமகள - எட்டு வித பாவபுஷ்பங்களை; அர்ப்பிஸுத - அர்ப்பித்தவாறு; முததி - மகிழ்ச்சியுடன்; பிராணபதி - முக்யபிராணர்; ஹரிகர்ப்பிஸித - ஸ்ரீஹரிக்கு அர்ப்பிதமான; பரமான்னவனு - பரமான்னத்தை; புஞ்சிஸுதலு - உண்டார்; ஈபரி - இப்படியாக; ஸ்னானஜபதப பிரவசனகளிம் - ஸ்னான, ஜப, தப, பிரவசனங்களால் - காலவனு களெது - காலத்தை கழித்து வந்தார்.

ஸ்ரீமதாசார்யரின் காலை நேர ஆன்ஹிகங்களை அடுத்த ஸ்லோகத்திலும் தொடர்ந்து விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

தடாகத்தில் ஸ்னானம் செய்து, தூய்மையான தனது இதயக் கோயிலில், மிகவும் பக்தியுடன், எட்டு வித பாவபுஷ்பங்களை அர்ப்பித்தவாறு, மகிழ்ச்சியுடன், முக்யபிராணர் மற்றும் ஸ்ரீஹரிக்கு அர்ப்பிதமான பரமான்னத்தை உண்டார். இப்படியாக, ஸ்னான, ஜப, தப, பிரவசனங்களால், காலத்தை கழித்து வந்தார்.

மத்வ விஜய ஸ்லோகம் 14-26லிருந்து வரும் விஷயங்களையே இந்த ஸ்லோகம் விளக்கியுள்ளது.

அத[2] த[3]ஷ ஷத ஷோசிஷ்[2]யாப்ரயாதி ப்ரதீச்யாம்
ப்ரவசனமவஸாய ஸ்னாதுமாயாத் தடாகம் |
ப்ருது[2]மதிரிஹ தாலச்ஸ்ரேஷ்ட ஸம்ஸர்க்க[3] லோலை:
ஸமக[3]மி ஸபதி[3] ஸ்வர் நிம்ரகா[3]த்vயைஸ்ச தீர்த்தை[2]: ||14-26

சூரியன் மேற்கு நோக்கி நகரும்போது, ஸ்ரீமதாசார்யார் அன்றைய பிரவசனத்தை முடித்து, மாத்யான்ஹிகத்திற்காக குளத்திற்கு சென்றார். உத்தமர்களின் சம்பந்தத்தைப் பெற்று பவித்ரமாவதற்கு, கங்காதி தீர்த்தங்களின் அபிமானி தேவதைகள் அங்கு வந்தனர்.

க$^{4}$ன ரஸ நிகரோsஸாவந்தரத்யந்த ஷுத்$^{3}$தோ$^{4}$
முனிக$^{3}$ண இவ பூ$^{4}$ய: ஸ்னேஹவான் ப்ராக்$^{3}$ த$^{3}$தா$^{4}$ன: |
ப்ரதி க்ருதிமகி$^{2}$ல ஞஸ்யாsபரோக்ஷ்யேண தாவத்
ஸ்புடமலப$^{4}$த ரூபம் மஜ்ஜனே ஸஜ்ஜனேஷ்$^{2}$டம் || 14-27

தடாகத்தின் தூய்மையான, ஸ்படிகம் போன்ற நீரில் ஸ்ரீமதாசார்யரின் பிம்பம் நன்கு பிரதிபலித்தது. பின்னர், அவர் தடாகத்தில் ஸ்னானம் செய்யும்போது அவர் மயமாகவே ஆனது. இது எப்படி இருந்தது என்றால், தூய்மையான மனதுடனும், அனன்ய பக்தியுடனும் பரமாத்மாவை நினைத்து தியானம் செய்யும் சன்யாசிகள், முதலில் பகவானது பிம்பத்தை மனதில் நிலை நிறுத்திக் கொள்வார்கள். பின்னர் இறுதியாக பரமாத்மாவை நேரடியாக தரிசனம் செய்து அவர் மயமாகவே ஆகி விடுவார்கள். அதாவது, அவரது சாக்ஷாத்காரத்தை அவர்களும் பெற்று விடுவார்கள்.

தமருணமணிவர்ணம் தி$^{3}$வ்ய தே$^{3}$ஹாக்$^{2}$ய கே$^{3}$ஹே
ஸ்னபிதமதி ப்ருது$^{2}$ ஸ்ரத்$^{3}$தா$^{4}$ நதீ$^{3}$சித்த வார்ப்பி$^{4}$: |
நனு ஸ யஜதி நித்யம் ஹ்ருத் ஸரோஜாஸன ஸ்த$^{2}$ம்
ந து ஸக்ருதி$^{3}$தி புஷ்பைரஷ்ட$^{2}$பி$^{4}$ர் பா$^{4}$வ புஷ்பை: ||14-37

ஆசார்யர் நீர் நிரம்பிய சங்கிலிருந்து அபிஷேகம் செய்தார். பின்னர் சிறந்ததான கந்த, அக்ஷதைகளை எடுத்து, லட்சுமி ஸ்வரூபமான பூக்களுடன் ஸ்ரீஹரியை பூஜித்தார். ஸ்ரீஹரிக்கு 16விதமான பூஜைகளை செய்தார். எப்போதும் ஸ்ரீஹரியையே காணும் ஏகாந்த பக்தரான ஸ்ரீமதாசார்யர், எட்டு வித பாவ-புஷ்பங்களினால் பூஜித்தார். ஆசார்யரின் திடமான பக்திக்கு ஸ்ரீஹரி மனமிரங்கி, சஹபோகத்தையே முந்தைய ஹனும அவதாரத்தில் அளித்தான் என்பது நினைவு கூறத்தக்கது.

எட்டு வித பாவபுஷ்பங்களாவன: அகிம்சை, இந்திரிய நிக்ரஹம், அனைவரிடமும் கருணை, சகிப்புத்தன்மை, ஞானம், தவம், தியானம் மற்றும் ஸத்யம்.

பரமத$^{2}$ பரமான்னம் ப்ராப்தமேவா ப்ரயாஸம்
ப்ரபு$^{4}$ரிஹ பு$^{3}$பு$^{4}$ஜேsஸௌ வேத$^{3}$ வாத$^{3}$ ப்ரவீண: |
அஜித பரமப$^{4}$க்த: ஸந்ததம் மன்யமான:

ஸகல ஜக$^{3}$த$^{3}$தீ$^{4}$ஷ: ப்ரீயதாம் ஷௌரிரித்த$^{2}$ம் || (14-39)

போஜனத்திற்கு முன் ‘அனைத்து உலகிற்கும் நியாமகனான, சர்வஸ்வாமியான ஸ்ரீகிருஷ்ணன் மகிழட்டும்’ என்று பரமபக்தரான ஸ்ரீமதாசார்யர் தியானித்தார் என்று தெரிவிக்கிறார் பண்டிதர்.

இத்துடன் மத்வ விஜய பதினான்காம் சர்க்க விஷயம் முடிந்து, அடுத்த ஸ்லோகத்தில், பதினைந்தாம் சர்க்க ஸாரமான ஸ்ரீமதாசார்யரின் உபன்யாஸ விஷயத்தை விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் 57]
**ஹரியு கு$^{3}$ணக$^{3}$ணநிலய ஸகலவ**
**நரித$^{1}$வனு க$^{2}$க$^{3}$க$^{3}$ளனு ஸ்ருஜிஸுவ**
**பரிய தோருவ பா$^{4}$ஷ்யபா$^{4}$வவ விவரிஸுத்திரலு |**
**உருதரத$^{3}$ பாண்டித்யமத$^{3}$தி$^{3}$ந்**
**த$^{3}$ த$^{4}$ரெதலதி$^{3}$ ப்ரக்$^{2}$யாதரிஹ ஒன்**
**தெ$^{3}$ரடு$^{3}$ விக்ரம நாமகரு கேளித$^{3}$ரு ப்ரவசனவ ||57**

ஹரியு - ஸ்ரீஹரி; குணகணநிலய - அனந்த கல்யாண குண பரிபூர்ணன்; ஸகலவனரிதவனு - அனைத்தையும் அறிந்தவன்; ககளனு ஸ்ருஜிஸுவ - சூரியன் முதலான அனைத்தையும் படைப்பவன்; ஈ பரிய தோருவ - இப்படியான கருத்துக்களை சொல்லும்; பாஷ்யபாவவ - தன் பாஷ்யத்தின் அர்த்தத்தை; விவரிஸுத்திரலு - உபன்யாசம் செய்து கொண்டிருக்க; உருதரத - மிகச்சிறந்ததான; பாண்டித்யமததிந்த - பாண்டித்யத்தின் கர்வத்தினால்; தரெதலதி - பூமியெங்கும்; ப்ரக்யாதரிஹ - புகழ்பெற்றவரான; ஒந்தெரடு விக்ரம நாமகரு - த்ரிவிக்ரம பண்டிதாசார்யர்; ப்ரவசனவ - ஆசார்யரின் பிரவசனத்தை; கேளிதரு - கேட்டார்.

ஸ்ரீமதாசார்யரின் உபன்யாஸ விஷயத்தை இந்த ஸ்லோகத்தில் விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

ஸ்ரீஹரி அனந்த கல்யாண குண பரிபூர்ணன். அனைத்தையும் அறிந்தவன். சூரியன் முதலான அனைத்தையும் படைப்பவன். இப்படியான கருத்துக்களை சொல்லும் தன் பாஷ்யத்தின் அர்த்தத்தை ஸ்ரீமதாசார்யர் உபன்யாஸம் செய்து கொண்டிருக்க, மிகச் சிறந்ததான

பாண்டித்யத்தின் கர்வத்தினால், பூமியெங்கும் புகழ்பெற்றவரான த்ரிவிக்ரம பண்டிதாசார்யர், ஆசார்யரின் பிரவசனத்தை கேட்டார்.

மத்வ விஜய பதினைந்தாம் சர்க்கத்தில் முதல் ஸ்லோகத்திலிருந்தே ஸ்ரீமதாசார்யரின் பிரவசன சிறப்புகளை பார்க்கலாம்.

பூ$^4$யோ போ$^3$த$^4$ஸ்ததோ பூ$^4$யோ வ்யாசக்$^2$யௌ பா$^4$ஷ்யமத்$^3$பு$^4$தம் |
க்$^3$ராமே க்$^3$ராமீண ஸாமான்யே வஸம்ஸ்தத்ராமராலயே || 15-1

ஸ்ரீமதானந்ததீர்த்தர் அமராலயத்தில் தம் அற்புத நடையில் சூத்ரபாஷ்ய பிரவசனத்தைத் துவக்கினார். அங்கிருந்த புகழ்பெற்ற அத்வைத பண்டிதரும், கூர்மையான அறிவுடையவரும், சாஸ்திரங்களைக் கற்றவருமான த்ரிவிக்ரம பண்டிதாசார்யரைக் கண்டார்.

பரபக்ஷ ரதா$^2$ரூட$^4$ம் க$^2$ர தர்க மஹாயுத$^4$ம் |
த்ரிவிக்ரமார்யம் சோ஽பஷ்யத் ப்ரதி வீரமிவாக்$^3$ரத: || (15-2)

இங்கு நாராயண பண்டிதர், ஸ்ரீமதாசார்யரின் உபன்யாச நடையை கீழ்க்கண்டவாறு வர்ணிக்கிறார்.

நாத்யத்வரா நாதிரயா ந ஸ்கலந்தி நிரந்தரா |
அனனா வயவேத்ய த$^3$வீயோபி: ப்ரதர்கிதா || (15-4)

மத்வரின் சொற்பொழிவு, காலாட்படையின் நடையைப் போல மெதுவாக இருந்தாலும், ஒரு சீராக இருந்தது. ஆசார்யரின் சொற்பொழிவினால் பாற்கடலைக் கடைந்தபோது வந்த லட்சுமியைப் போல இப்போது இன்னொரு லட்சுமிதேவி வந்துவிட்டாளோ என்று தோன்றியது. அவரது நடை கங்கைப் பிரவாகத்தைப் போலவும் தோன்றியது. நாராயண பண்டிதாசார்யர், ஆசார்யரின் சொற்பொழிவை இப்படியாகக் கூறி முடிக்கிறார்.

நாராயணோ அனந்தகு$^3$ணோ பி$^3$ரம்மாக்$^2$யோ வேத$^3$வேதி$^3$த: |
விஷ்வகர்தேதி விஷ்வக்ஞ: ஸ்ருத்யா யுக்த்யா஽ப்யசேஷ$^2$த$^3$த் || (15-8)

நாராயணன் அனந்தகுண பரிபூர்ணன். வேதங்களால் புகழப்படுபவன். பிரம்மன் என்ற சொல்லிற்கு உரியவன். உலகத்தில் அனைத்தின்

படைத்தலுக்கும் காரணமானவன். பூர்ணப்ரக்ஞர் துர்மதங்களான நிரீஷ்வர சாங்க்ய, பாஸ்கர, பாசுபத, வைஷேஷிக, சூன்யவாத, மாயாவாத, சார்வாக, பௌத்த ஆகிய மதங்களின் தோஷங்களை நிரூபித்து நிராகரித்து, த்வைத சித்தாந்தத்தின் சிறப்புகள் மோட்சத்திற்கான வழியாக இருப்பதை விளக்கினார். இங்கு நாராயண பண்டிதர், அனைத்து மதங்களைப் பற்றியும் சுருக்கமாகச் சொல்லியிருப்பது, அவரது புலமைக்கு ஒரு சான்றாக இருக்கிறது.

இத்யாதீ$^{3}$ன் த$^{3}$ர்ஷயந்த்யர்த்தா$^{2}$ன் வ்யாக்$^{2}$யோபன்யாஸ ஸம்யுதா |
த்ரிவிக்ரமார்யேண ததா$^{3}$ விஷ்வாபி$^{4}$க்$^{3}$ஞஸ்ய ஸுஸ்ருவே || 15-64

இப்படியாக ஸ்ரீமதாசார்யர் செய்த உபன்யாஸங்களை, த்ரிவிக்ரமாசார்யர் மிக கவனத்துடன் கேட்டார்.

மாதனூரு ஸ்ரீவிஷ்ணு தீர்த்தர், தனது ஸ்ரீமத் சுமத்வ விஜய ப்ரமேய மாலிகா கிருதியில், மத்வ விஜய பதினைந்தாம் சர்க்கத்தின் சுருக்கத்தையும், இந்த சர்க்கத்தை படிப்பதால் வரும் பலனையும் இவ்வாறு கூறுகிறார்.

வியாக்$^{2}$யாத்ரா பி$^{3}$ரம்மஸூத்ராணாம் பூர்ணப்ரக்ஞேன வாத$^{3}$த: |
ஜிதஸ்தச் சிஷ்யதாம் ப்ராப்ய ஸோऽகரோத் தத்வதீ$^{3}$பிகாம் ||16||

த்ரிவிக்ரம பண்டிதாசார்யர், ஸ்ரீமதாசார்யருடன், 15 நாட்கள் வாதம் செய்தார். ஸ்ரீவேதவியாச தேவரின் பிரம்ம ஸூத்ரத்திற்கு வியாக்யானம் செய்யும் ஆசார்யருடன் வாதம் செய்து, அதில் தோற்றார். ஆனால், பக்தியுடன் ஆசார்யரின் சிஷ்யத்வத்தைப் பெற்று, ஆசார்யரிடமிருந்து சாஸ்திர, ஸ்ரவணம் செய்து, பாஷ்யத்திற்கு ‘தத்வதீபிகா’ என்னும் டீகையை இயற்றினார்.

அபரோக்ஷ த்$^{3}$ருஷோர்விக்$^{4}$ன நாஷஸ் தத்$^{3}$தா$^{3}$பனம் ததா$^{2}$ |
மோக்ஷதா$^{3}$னமிதி ப்ரோக்தம் ப$^{2}$லம் ஷோட$^{3}$ஷகம் பரம் ||21||

பதினைந்தாம் சர்க்கம் : அபரோக்ஷ ஞானம் அடைதல்

த்ரிவிக்ர பண்டிதாசார்யர், ஸ்ரீமதாசார்யருடன் செய்த வாதத்தை அடுத்த ஸ்லோகத்தில் விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் 58]
**வாத$^{3}$ஸரணியு முந்த$^{3}$ரிது$^{3}$ ஹதி$^{3}$**
**னைது$^{3}$ தினக$^{3}$ளு களெத$^{3}$வீதனு**
**வாத$^{3}$தல்லீடா$^{3}$டி$^{3}$த$^{3}$ மஹாயுகுதியஸ்த்ரக$^{3}$ள |**
**மோத$^{3}$தீர்த்த$^{2}$ரு ஸதெ$^{3}$ய ப$^{3}$டி$^{3}$த$^{3}$ரு**
**வேத$^{3}$யுகுதிக$^{3}$ளிந்த$^{3}$லாக்ஷண**
**பாத$^{3}$கெரகு$^{3}$த விக்ரமார்யனு பே$^{3}$டி$^{3}$த$^{3}$னு தா$^{3}$ஸ்ய ||58**

வாதஸரணியு - வாக்குவாதமானது; முந்தரிது - முன் நடந்து; ஹதினைது தினகளு - 15 நாட்கள்; களெத - செய்தார்; ஈதனு - த்ரிவிக்ரம பண்டிதாசார்யர்; வாததல்லி - வாதத்தில்; ஈடாடித - பேசிய; மஹாயுகுதியஸ்த்ரகள - அஸ்திரங்களைப் போன்றதான அவரது யுக்திகளை; மோததீர்த்தரு - ஸ்ரீமதாசார்யர்; வேதயுக்திகளிந்த - வேத மந்திரங்களை பயன்படுத்தி; ஆக்ஷண - அதே நொடியில்; ஸதெய படிதரு - அவரை வென்றார்; விக்ரமார்யனு - த்ரிவிக்ரம பண்டிதாசார்யர்; பாதகெரகுத - பாதத்தில் விழுந்தவாறு; தாஸ்ய - தன்னுடைய தாஸ்யத்தை; பேடிதனு - வேண்டினார்.

த்ரிவிக்ர பண்டிதாசார்யர், ஸ்ரீமதாசார்யருடன் செய்த வாதத்தை இந்த ஸ்லோகத்தில் விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

வாக்குவாதமானது அடுத்த 15 நாட்கள் நடந்தன. த்ரிவிக்ரம பண்டிதாசார்யர், தனது வாதத்தில் பேசிய, அஸ்திரங்களைப் போன்றதான அவரது யுக்திகளை, ஸ்ரீமதாசார்யர், வேத மந்திரங்களை பயன்படுத்தி, அதே நொடியில், அவரை வென்றார். த்ரிவிக்ரம பண்டிதாசார்யர் ஆசார்யரின் பாதங்களில் விழுந்தவாறு, தன்னுடைய தாஸ்யங்களை வேண்டினார்.

த்ரிவிக்ர பண்டிதாசார்யர், ஸ்ரீமதாசார்யருடன் செய்த வாத விஷயம், மத்வ விஜயத்தில் 15-64 ஸ்லோகம் முதல் வர்ணிக்கப்பட்டுள்ளது.

இப்படி பூர்ணப்ரக்ஞரால் விவரிக்கப்பட்ட, ஆதாரங்களுடனான சொற்பொழிவை த்ரிவிக்ரம பண்டிதர் கேட்டார். அறிஞரான பண்டிதர், ஸ்ரீமதாசார்யரின் சித்தாந்தத்தை எதிர்த்து பல வாதங்களை புரிந்தார். ஸ்ரீபூர்ணப்ரக்ஞர் அனாயாசமாக சிரித்தவாறு அவற்றைக் கண்டித்து நிராகரித்து தம் சித்தாந்தத்தை நிரூபித்தார். அடுத்து பண்டிதர்,

ஆசார்யரின் ஒவ்வொரு வாக்கியத்திற்கும் எதிராக வேதவாக்கியங்கள் என்னும் அஸ்திரங்களை பிரயோகிக்கத் தொடங்கினார்.

ஸப்தாஷ்டானி தினான்யேவம் வாத$^{3}$ம் க்ருத்வா சஹாமுனா |
நிருத்தரம் தம் நிஷ்சோத்யம் சக்ரே சக்ராயுத$^{4}$ ப்ரிய: || (15-69)

சாமான்யரால் பதிலளிக்கமுடியாத கேள்விகளுக்கு, ஸ்ரீமதாசார்யர் மேலும் சிறந்த வேத வாக்கியங்களினால் பதிலளித்து பண்டிதரின் வாதங்களைக் கண்டித்தார். இப்படி த்ரிவிக்ரம பண்டிதருடன் 15 நாட்கள் தத்வ நிர்ணயத்திற்காக வாதம் செய்தார். த்ரிவிக்ரம பண்டிதர் வாயடைத்துப் போனார். இரு சஜ்ஜனர்களுக்கிடையே நடந்த வாதம் இப்படியாக இருந்தது. அவரின் சந்தேகங்கள் தீர்ந்தன. தோற்றதை ஒப்புக்கொண்டார். உத்தம ஜீவிகளான பண்டிதர், ஆசார்யரிடம் 'க்ஷம்யதாம்' என்று மன்னிப்பு கேட்டார்.

பிரணம்யாऽசஷ்$^{2}$ட சிஷ்$^{2}$டோऽஸௌ க்ஷம்யதாம் நாத$^{2}$ சாபலம் |
பதபத்$^{3}$ம ரஜோ தா$^{3}$ஸ்யம் த்$^{4}$ருவம் மே தீ$^{3}$யதாமிதி || 15-70

தங்கள் சரணங்களில் விழுந்தேன். என்னை காப்பாற்றுங்கள்' என்று வேண்டினார்.

ஸ்ரீமதாசார்யரின் ஆணைக்கேற்ப, த்ரிவிக்ரம பண்டிதாசார்யர், தத்வபிரதீப கிரந்தத்தை இயற்றும் விஷயத்தை அடுத்த ஸ்லோகத்தில் விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் 59]
**மத்$^{4}$வதீர்த்தரனுக்ஞெ படெ$^{3}$யுத**
**ஶுத்$^{3}$த$^{4}$தத்வக$^{3}$ளன்னு தோரலு**
**மத்$^{4}$வ பா$^{4}$ஷ்யகெ டீகெ தத்வப்ரதீ$^{3}$ப ரசிஸித$^{3}$ரு |**
**ஶுத்$^{3}$த$^{4}$ஸித்தாந்தக$^{3}$ள ந்யாய**
**த$^{3}$ பத்த$^{3}$தி$^{4}$க$^{3}$ளனு பி$^{3}$ச்சி தோரி ப்ர**
**ஸித்$^{3}$த$^{4}$தமரெந்தெ$^{3}$னிஸித$^{3}$ரு வ்யாக்$^{2}$யான ரசிஸித$^{3}$ரு ||59**

மத்வதீர்த்தர - ஸ்ரீமதாசார்யரின்; அனுக்ஞெ படெயுத - ஆணையைப் பெற்றவாறு; ஶுத்த தத்வகளன்னு - யதார்த்த தத்வங்களை; தோரலு - வெளிப்படுத்த; மத்வ பாஷ்யக்கெ - மத்வரின் பிரம்மஸூத்ர

பாஷ்யத்திற்கு; தத்வபிரதீப டீகை - தத்வபிரதீப என்னும் டீகையை; ரசிஸிதரு - இயற்றினார். ஷுத்த ஸித்தாந்தகள - பவித்ரமான சித்தாந்தத்தின்; நியாயத பத்ததிகளனு - நியாய பத்ததிகளை; பிச்சி தோரி - நன்றாக விளக்கி; பிரஸித்ததம - தான் சர்வக்ஞர்; எந்து எனிஸிதரு - என்று அழைக்கப்பட்டார்; வ்யாக்யான - அனுவியாக்யான; ரசிஸிதரு - இயற்றினார்.

ஸ்ரீமதாசார்யரின் ஆணைக்கேற்ப, த்ரிவிக்ரம பண்டிதாசார்யர், தத்வபிரதீப கிரந்தத்தை இயற்றும் விஷயத்தை இந்த ஸ்லோகத்தில் விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

ஸ்ரீமதாசார்யரின் ஆணையைப் பெற்றவாறு, யதார்த்த தத்வங்களை வெளிப்படுத்த, மத்வரின் பிரம்மஸூத்ர பாஷ்யத்திற்கு, தத்வபிரதீப என்னும் டீகையை (த்ரிவிக்ரம பண்டிதாசார்யர்) இயற்றினார். பவித்ரமான சித்தாந்தத்தின் நியாய பத்ததிகளை நன்றாக விளக்கி, தான் சர்வக்ஞர் என்று அழைக்கப்பட்டார். அனுவியாக்யான கிரந்தத்தை இயற்றினார்.

த்ரிவிக்ரம பண்டிதாசார்யர் தத்வ பிரதீப இயற்றியது மத்வ விஜய (15-72) ஸ்லோகத்திலும், ஆசார்யர் அனுவியாக்யான இயற்றியது மத்வ விஜய (15-88) ஸ்லோகத்திலும் விளக்கப்பட்டுள்ளது.

கு$^{3}$ர்வாக்ஞா கௌ$^{3}$ரவாட்டீகாம் கு$^{1}$ர்வன் பா$^{4}$ஷ்$^{2}$யஸ்ய து$^{3}$ஷ்$^{2}$கராம் |
ஷட$^{3}$ர்த்த$^{2}$ விக்ரமார்யோsஸௌ மஹாசார்யமபா$^{4}$ஷ$^{2}$த || 15-72

ஸ்ரீமத்வாசார்யர் தமது பிரம்மசூத்ர பாஷ்யத்திற்கு வியாக்யானம் எழுதுவதற்கு ஆணையிட்டார். தங்கள் சித்தம் என்று கூறி த்ரிவிக்ரம பண்டிதர் ‘தத்வப்ரதீபா’ என்னும் உத்தமமான வியாக்யானத்தை எழுதினார்.

க்ரந்தே$^{2}$ப்$^{4}$ய எம்போ$^{4}$sகா$^{3}$தே$^{4}$ப்$^{4}$யோ யுக்தயோ நோ து$^{3}$ராத்$^{3}$த$^{4}$ரா: |
மனோ மாந்த்யாத் ததோ கி$^{3}$ரந்த$^{2}$ம் வ்யக்த தர்க ததிம் குரு || (15-87)

அறிந்து கொள்ளப்படமுடியாத ஆழமான இந்த கிருதிகளில் வந்த யுக்திகளை, எடுத்து அறிவது எங்கள் மந்த மதிகளால் முடியவில்லை.

ஆகையால், அந்த தர்க்கங்களை விடுவித்துக் காட்டும் ஒரு கிரந்தம் தங்களிடமிருந்து வரவேண்டும். (என்றார் த்ரிவிக்ரம பண்டிதாசார்யர்).

இத்யர்த்தி$^{2}$தோ வ்யதா$^{4}$ன்மத்$^{4}$வ: ஸோ஽னு வ்யாக்$^{4}$யாம் ஸதாம் ஸுதா$^{4}$ம் |
து$^{3}$ர்வாதி$^{3}$ க$^{3}$ர்வாத்$^{3}$ரி பவிம் மாயி த்$^{4}$வாந்த ரவித்$^{3}$யுதிம் ||15-88

இப்படியாக கேட்டுக் கொண்டதால், ஸ்ரீமதாசார்யர் தமது அனுவியாக்யான கிரந்தத்தை இயற்றினார். மாயாவாதிகளின் அறியாமையை சுடும் சூரியனாக இருக்கிறது இந்த கிரந்தம்.

ஷோபன பட்டர், ஸ்ரீபத்மனாப தீர்த்தர் ஆகும் படலத்தை அடுத்த ஸ்லோகத்தில் விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் 60]
**விவித$^{4}$ ஸம்ஸாரிக நோவு**
**ஸவிது$^{3}$ வரவைராக்$^{3}$ய பொந்து$^{3}$த**
**ஸுவினயதி$^{3}$ ப்ரார்த்தி$^{2}$ஸித$^{3}$ ஸஹஜன யதிவரன மாடி$^{3}$ |**
**பு$^{4}$விகெ$^{3}$பூ$^{4}$ஷண பத$^{3}$மனாப$^{4}$ரு**
**கவிவரரு யதிவரரனேகரு**
**ப்ரவஹிஸிதரனுதி$^{3}$னதி$^{3}$ த$^{4}$ரெயலி ஞானப$^{4}$குதியனு ||60**

விவித - பற்பல வகைகளான; ஸம்ஸாரிக நோவு ஸவிது - சம்சார பந்தங்களை விட்டு; வரவைராக்ய பொந்துத - சிறந்த வைராக்கியத்தை அடைந்தவாறு; ஸுவினயதி - மிகவும் பக்தி, மரியாதையுடன்; பிரார்த்திஸித - பிரார்த்தனை செய்த; ஸஹஜன - பண்டிதனை ; புவிகெபூஷண - ஸ்ரீமதாசார்யர்; யதிவரன - யதி ஆசிரமத்தைக் கொடுத்து; பதுமனாபரு - பத்மனாப தீர்த்தர்; மாடி - செய்தார்; கவிவரரு - கற்றறிந்த கிருஹஸ்தர்கள்; யதிவரர் - பல யதிகள்; அனேகர் - என பலர்; தரெயலி - இந்த நாட்டில்; ஞானபகுதியனு - ஞான பக்திகளை; அனுதினதி - தினந்தோறும்; ப்ரவஹிஸிதரு - பரவச் செய்தனர்.

ஷோபன பட்டர், ஸ்ரீபத்மனாப தீர்த்தர் ஆகும் படலத்தை இந்த ஸ்லோகத்தில் விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

பற்பல வகைகளான சம்சார பந்தங்களை விட்டு சிறந்த வைராக்கியத்தை அடைந்தவாறு, மிகவும் பக்தி மரியாதையுடன்

பிரார்த்தனை செய்த பண்டிதனை, ஸ்ரீமதாசார்யர் யதி ஆசிரமத்தைக் கொடுத்து, பத்மனாப தீர்த்தர் என செய்தார். கற்றறிந்த கிருஹஸ்தர்கள், பல யதிகள் என பலர், இந்த நாட்டில் ஞான பக்திகளை தினந்தோறும் பரவச் செய்தனர்.

மத்வ விஜய 15-120 ஸ்லோகத்தில் ஷோபன பட்டர், ஸ்ரீபத்மனாப தீர்த்தர் ஆகும் விஷயம் வந்திருக்கிறது.

ஆக்ருஷ்டோ$^{2}$sஸ்ய கு$^{3}$ணைர்வாப்தை: யோ கோ$^{3}$தாvயா உபாயயௌ |
ஸ பத்$^{3}$மனாப$^{4}$ தீர்த்தா$^{2}$க்$^{2}$ய: ஸிஷ்$^{2}$யோsன்யோsபூ$^{4}$த் ஸு சேதஸ: || 15-120

கோதாவரி நதிக்கரையிலிருந்து வந்த பண்டிதர், அனைத்து சாஸ்திரங்களையும் அறிந்த, ஷோபன பட்டர், அன்றைய பண்டிதர்களில் சிறந்தவர் ஆவார். ஸ்ரீமதாசார்யரின் நற்குணங்களுக்கு ஈர்க்கப்பட்டார். அவர் மூலமாக சூத்ர பாஷ்யத்தை ஒருமுறை கேட்டார். அவரில் மாற்றம் ஏற்பட்டது. மத்வ சாஸ்திரங்களை ஒப்பி, இதர மதங்களை நிராகரித்து, மத்வ சாஸ்திரங்களை தகுந்த ஆதாரங்களுடன் பிரசாரம் செய்யத் துவங்கினார். ஆசார்யரிடம் சன்யாசம் பெற்று, முதல் சிஷ்யராகி, பத்பனாப தீர்த்தர் என்று அழைக்கப்பட்டார்.

ஸ்ருத்யா மத்யா ஸதா$^{3}$ ப$^{4}$க்த்யா விரக்த்யா நித்ய ஸேவயா |
யஸ்மை பிரஸன்ன: ப்ராஜ்யேக்ஷ: ஸத்$^{3}$யோ வித்$^{3}$யாம் தvதௌ$^{3}$ ஷுபா$^{4}$ம் || 15-121

இவரிடமிருந்த குருபக்தி, சித்தாந்த அறிவு, நினைவுத்திறன், தவ வலிமை ஆகியவற்றைக் கண்ட ஸ்ரீமதாசார்யர் மகிழ்ந்து, வேதாந்த கல்வியை உபதேசம் செய்தார். சிம்மத்தைப் போலிருந்த பத்பனாப தீர்த்தர், சித்தாந்தத்தை பிரசாரம் செய்தவாறு, துர்மதங்களை கண்டிக்கத் துவங்கினார்.

மத்$^{4}$வ ப்ரசிஷ்யா ப$^{3}$ஹவ: சிஷ்யா ஏஷாம் முஹுஸ்ததா$^{2}$ |
அலஞ்சக்ருரலம் ப்ருத்$^{4}$வீம் ஸர்வே ஸத்கு$^{3}$ண பூ$^{4}$ஷ$^{2}$ணா: || 15-132

மேலும் பல பக்தர்கள், கிருஹஸ்தர்கள் ஸ்ரீமதாசார்யரின் சாஸ்திரங்களில் ஈர்ப்பு கொண்டு, பாடங்களைப் படித்து வந்தனர். அவர்கள் அனைவருக்கும் விஷ்ணுபக்தி வளருமாறு செய்தார் ஆசார்யர். மகிழ்ச்சியை, இஹபரங்களில் சுகத்தைக் கொடுத்து, இறுதியில் மோட்சத்தையே கொடுக்கும் சித்தாந்தத்தை போதித்தார்.

இத்துடன் மத்வ விஜய பதினைந்தாம் சர்க்க விஷயங்கள் முடிந்தன. அடுத்த ஸ்லோகத்தில் மத்வ விஜய கடைசி சர்க்கமான பதினாறாம் சர்க்க விஷயங்களை விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் 61]
**ஸ்மரணமாத்ரதி$^{3}$ ஸகல து$^{3}$ரிதவ**
**தரிது$^{3}$ ஶுப$^{4}$க$^{3}$ளனீவ சரிதெய**
**பரிபரிய வித$^{4}$க$^{3}$ளலி ப$^{4}$குதரு வர்ணிஸுத்திரலு |**
**து$^{3}$ருள வ்ருஷல நராதி$^{4}$பனு ப$^{3}$லு**
**க$^{3}$ருவதி$^{3}$ந்த$^{3}$ தூ$^{3}$ஷிஸலு வேத$^{3}$வ**
**கரதலதி$^{3}$ தோரித$^{3}$ரு நிக$^{3}$மப்ரமாண வசனவ ||61**

ஸ்மரணமாத்ரதி - நினைத்த மாத்திரத்திலேயே; துரிதவ தரிது - கஷ்டங்களை நீக்கி; ஷுபகளனீவ - நலன்களைக் கொடுப்பதான; சரிதெய - சரித்திரத்தை; பகுதரு - பக்தர்கள்; பரிபரிய விதகளலி - பற்பல விதங்களில்; வர்ணிஸுத்திரலு - வர்ணித்துக் கொண்டிருந்தனர்; துருள - கெட்டவனான; வ்ருஷல - நீசனான; நராதிபனு - அரசன்; பலு கருவதிந்த - மிக்க கர்வத்துடன்; வேதவ - வேதங்களை; தூஷிஸலு - திட்டத் துவங்கினான்; நிகமபிரமாண வசனவ - அந்த வேத பிரமாண வசனத்தை; கரதலதி - தன் உள்ளங்கையில்; தோரிதரு - நிரூபித்துக் காட்டினார்.

மத்வ விஜய கடைசி சர்க்கமான பதினாறாம் சர்க்க விஷயங்களை இந்த ஸ்லோகத்திலிருந்து விளக்குகிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

நினைத்த மாத்திரத்திலேயே கஷ்டங்களை நீக்கி, நலன்களைக் கொடுப்பதான சரித்திரத்தை, பக்தர்கள் பற்பல விதங்களில் வர்ணித்துக் கொண்டிருந்தனர். நீசனான ஒரு அரசன், மிக்க கர்வத்துடன் வேதங்களை திட்டத் துவங்கினான். அந்த வேத பிரமாண

வசனத்தை, ஸ்ரீமதாசார்யர் தன் உள்ளங்கையில் நிரூபித்துக் காட்டினார்.

மத்வ விஜய 16-1 ஸ்லோகத்தில் இந்த விஷயம் சொல்லப்பட்டிருக்கிறது.

ஸாது4ப்4யோ மது4 மத2னாங்க்3ரி ப4க்தி பா4க்3ப்4ய:
ஸ்ரௌதேப்4யோ விதத மதேர்மஹானு பா4வம் |
வேதா3ந்தம் ஸ்வயமிவ ப3ந்த4 மோக்ஷ மூலம்
வ்யாசஷ்2ட ஸ்புடமத2 கோ1sபி1 கோ1விதோ3sத்ர || 16-1

ஒரு முறை பல அறிஞர்கள் கூடிய சபை ஒன்று நடந்தது. ஸ்ரீமதாசார்யரின் மேல் அதிக பக்திகொண்ட சிஷ்யர் ஒருவர், மோட்சத்திற்கான வழியான, ஆனந்ததீர்த்தரின் பரமோத்ஸவமான மகிமைகளை தெளிவாக விளக்கத் துவங்கினார்.

வேதங்களின் நிலையை நிரூபித்தல்

கோ3மத்யாஸ்தட நிகடேsச்ச கீர்த்தி சந்த்3ரம்
விஷ்வக்ஞும் க்ஷிதி பதிரந்த்ய வர்ண ஜன்மா |
வித்vவேஷ்டா2 ஸ்ருதி கு3ண ஸாத4கம் ஸ்ருதீனாம்
வாசாலோ வசனமுவாச வாக்3மிவர்யம் || 16-2

கோமதி நதிதீரத்தில் ஒரு அரசன். அதிகமாகப் பேசக்கூடியவன். அங்கு பயணத்தில் வந்த ஸ்ரீமதாசார்யரைக் கண்டான். வேதங்களை நிரூபிக்கக்கூடிய, நிலவைப் போல ஒளிர்ந்த, அனைத்தையும் அறிந்த ஸ்ரீமதானந்த தீர்த்தரைக் கண்டு பேசத் துவங்கினான். ’வேத வாக்கியத்தின் பலன் கிடைக்கவில்லையெனில், வேத வாக்கியங்கள் மது குடித்தவன் பேசுவதைப் போலாகும்; அவை நிரூபிக்க முடியாதவை’ என்றான். ‘மந்திர சித்திக்கு தகுதி தேவை’ என்றார் ஸ்ரீமதாசார்யர்.

வேதோ3க்தம் ப2லமலமாப்யதேsதி4காராத்3
இத்யக்தோsதனு மனஸாsம்ப4த3த்த தூ4ர்த்த: |
யோக்3யத்வே ஸதி ந ஹி த்vருஷ்யதேsதி4காரி
நாத: ஸ்யாத் ஸ கர விஷா2ணவத் ஸதே3தி || 16-4

ஆக்ஷேபம் தமஸஹமான உச்சமான:
ஸத்3யோऽஸௌ நிஜக1ர பல்லவத்3வயேன |
ஆதா3ய வ்யதனுத பீ3ஜமோஷதீ4னாம்
ஸூக்தேனாங்கு3ர த3ல புஷ்ப பீ3ஜ ஸ்ருஷ்2டிம் ||16-5

இதை ஒப்புக்கொள்ளாத அந்த ராஜனுக்கு பாடம் புகட்ட வேண்டி, சர்வக்ஞரான ஆசார்யர், ஒரு தானியத்தின் விதையை தம் உள்ளங்கையில் வைத்துக்கொண்டு 'யா ஔதீ: பூர்வஜாதா தேவேப்ய:' என்ற சூக்தத்தை கூறினார். என்ன ஆச்சரியம்! உடனே, அதிலிருந்து இலை, பூ ஆகியவை வளர்ந்ததைக் காட்டினார். வேத பிரமாண்யத்தை நேரடியாக நிரூபித்தார்.

மாதனூரு ஸ்ரீவிஷ்ணு தீர்த்தர், தனது ஸ்ரீமத் சுமத்வ விஜய ப்ரமேய மாலிகா கிருதியில், மத்வ விஜய பதினாறாம் சர்க்கத்தின் சுருக்கத்தையும், இந்த சர்க்கத்தை படிப்பதால் வரும் பலனையும் இவ்வாறு கூறுகிறார்.

ஸம்பாதி3தஸ்வகார்யேऽஸ்மின் ஸர்வக்ஞே ஸர்வதே3வதா: |
வவ்ருஷு: புஷ்பவாரம் கே2 ஸ்தி2தா: ஸ்துதிபரா முதா3 ||17||

சர்வக்ஞரான ஸ்ரீமதாசார்யர் தமது நோக்கமான, பகவந்தனின் சர்வோத்தமத்வம் முதலான காரியங்களை மிகச்சிறப்பாக நிறைவேற்றி, ஐதரேய உபநிஷத்தினை பாடம் சொல்லும் சமயத்தில், தேவதைகள் வானில் நின்று, ஸ்ரீமதாசார்யரின் குணகானங்களை செய்தவாறு, நந்தவனத்தின் புஷ்பங்களை அவர்மேல் தூவினர். அந்த புஷ்பக் குவியலில் ஸ்ரீமதாசார்யர் நம் கண்களிலிருந்து மறைந்தார்.

அபரோக்ஷ த்3ருஷோர்விக்4ன நாஷஸ் தத்3தா3பனம் ததா2 |
மோக்ஷதா3னமிதி ப்ரோக்தம் ப2லம் ஷோட3ஷகம் பரம் ||21||

பதினாறாம் சர்க்கம் : சாட்சாத் மோட்சத்தையே அடைதல்

ஸ்ரீமதாசார்யரின் மகிமைகளை அடுத்த ஸ்லோகத்திலும் தொடர்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் 62]
**தீ3பவாரலு பாட2ஸமயதி3**
**தாபஸரு தம்மங்க்4ரியுகு3ரின**
**தீபத3லி பெ3ளகி3த3ரு ப்ரவசனகெ3ய்த3ரொந்து3தி3ன |**
**ஸ்தாபிஸி2த3ரதி1 தொ3ட்ட3ஶிலெய ஸ்வ**
**ரூப ப3லத3லி துங்கெ3யலி ஸூ**
**ர்யோபராக3தி3 ஸ்னானகெ3ய்யலு ஜலதி4கெ3ய்தி3த3ரு ||62**

பாடஸமயதி - சிஷ்யர்களுக்கு பாடம் எடுத்துக் கொண்டிருக்கையில்; தீபவாரலு - தீபம் அணைந்துவிட; தாபஸரு - ஞானியான ஸ்ரீமதாசார்யர்; தம்மங்க்ரியுகுரின - தன் கால் கட்டைவிரல் நகத்தின்; தீபதலி - தீபத்தில்; பௌகிதரு - ஒளி கொடுத்தார்; பிரவசனகெய்தரு - பிரவசனம் செய்தார்; ஒந்துதின - ஒரு நாள்; துங்கெயலி - துங்கபத்ரா நதிக்கரையில்; ஸ்வரூப பலதலி - தன் ஸ்வரூப பலத்தினால்; அதி தொட்ட ஷிலெய - மிகப்பெரிய பாறையை; ஸ்தாபிஸிதரு - நிறுவினார்; ஸூர்யோபராகதி - சூர்ய கிரகணத்தன்று; ஸ்னானகெய்யலு - பர்வ கால ஸ்னானம் செய்வதற்கு; ஜலதிகெய்திதரு - கடலில் இறங்கினார்.

ஸ்ரீமதாசார்யரின் மகிமைகளை இந்த ஸ்லோகத்திலும் தொடர்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

சிஷ்யர்களுக்கு பாடம் எடுத்துக் கொண்டிருக்கையில், தீபம் அணைந்துவிட, ஞானியான ஸ்ரீமதாசார்யர், தன் கால் கட்டைவிரல் நகத்தின் தீபத்தில் ஒளி கொடுத்து, அந்த ஒளியில் பிரவசனம் செய்தார். ஒரு நாள் துங்கபத்ரா நதிக்கரையில், தன் ஸ்வரூப பலத்தினால், மிகப்பெரிய பாறையை நிறுவினார். சூர்ய கிரகணத்தன்று பர்வ கால ஸ்னானம் செய்வதற்கு கடலில் இறங்கினார்.

கால் நகத்திலிருந்து ஒளி

வ்யாக்2யாதா நிஷி ஸ கதா3சன ப்ரதீ3பே
ஸம்ஷாந்தே புனரபி வாசயாம்ப3பூ4வ |
சிஷ்2யான் ஸ்வான் புரு கருணாம்பு3தி4ர் நிஜாங்க்4ரே:
அங்கு3ஷ்2ட ஸ்புட நக2ராந்த ரோசிஷை2வ ||16-6

ஒரு முறை இரவு வேளையில், ஆசார்யர் சிஷ்யர்களுக்கு பாடம் எடுக்கையில் தீபம் அணைந்து போயிற்று. கருணைக்கடலான ஸ்ரீமதாசார்யர் தம் காலின் கட்டைவிரலின் நகத்தின் நுனியிலிருந்து வெளிச்சத்தை தருவித்தார். அந்த வெளிச்சத்திலேயே பாடத்தை நடத்தியும் முடித்தார். கல்வியின் அபிமானியான பாரதிதேவியின் கணவருக்கு இது ஒன்றும் ஆச்சரியமில்லையே.

பீமனின் நினைவு (16-7, 8, 9 ஸ்லோகங்கள்)

நின்யே தாம் கி$^{3}$ரிமிவ வானரி க்ருதாத்மா
லீலாவத் கர கமலேன ஸோாsமலேன |
தத்ராபி ந்யதி$^{4}$த த$^{1}$யாsஸ்ய ஸூச்யதேலம்
தத் துங்கா$^{3}$ம் நனு நிகஷா$^{2}$sது$^{4}$னாபி கா்ம || 16-9

சா்வக்ஞரான ஸ்ரீமத்வாசார்யர் பயணத்தில் பத்ரா நதிக்கரைக்கு வந்தார். அங்கு வெள்ளத்தை தடுக்க ஒரு தடுப்பு வைக்கவேண்டுமென்று ஒரு பெரிய பாறையைத் தூக்கிய பலர், அதை தூக்கமுடியாமல் நடுவில் இறக்கிவைத்தனர். அதைக் கண்ட ஆசார்யர், 'மக்களின் நலனுக்காக இந்த பாறையை ஏன் சரியான இடத்தில் வைக்கவில்லை?' என்று கேட்டார். அவர்களோ 'யதிஸ்ரேஷ்டரே! இது பீமசேனனால் மட்டுமே முடியும் வேலையாகும்' என்றனர். ஆசார்யர் 'லீலாவத்கரகமலேன சோாsதுலேன' அனாயாசமாக, அந்த பெரிய பாறையை தன் ஒரே கையில் தூக்கி, வைக்கவேண்டிய சரியான இடத்தில் வைத்தார். இந்த பாறையை இன்றும் பார்க்கமுடியும். மக்களுக்கு ஸ்ரீமத்வரின் உதவியாக செயலாகும் இது.

இந்த பாறைக்கு 'பீமனகல்லு' என்று பெயர். 20அடி நீளம். 16 அடி அகலம். 10 அடி உயரமான பாறை. சுமார் 50 டன் எடை இருக்கும். அதன் மேல் மத்வாசார்யரின் படம் வரைந்து 'ஸ்ரீமத்வாசார்யர் ஒரே கையினால் தூக்கி நிறுத்தியது' என்று எழுதினர். இதை இன்றும் சிக்மங்களூர் ஜில்லா மூடுகெரெ தாலுகா மாவினகெரெ கிராமம் அம்புதீர்த்தத்தின் அருகில் காணலாம். அப்போது ஸ்ரீமதாசார்யரின் வயது 74 இருக்கலாம்.

ஸ்ரீமதாசார்யரின் மேலும் சில மகிமைகளை அடுத்த ஸ்லோகத்தில் விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் 63]
**ஜலதி4யலி மஜ்ஜனவ கெ3ய்த3ரு**
**திளிஸித3ரு ஶ்ருதிததிக3ளர்த்த2வ**
**ச2லதி3 கண்ட2வ பிடி3த3 து3ருளன நெலகெ1 கெட3ஹித3ரு**
**ஹலவு வித3தை3ஶ்வர்யக3ள தா**
**ப3ளிய ஜனரிகெ3 தோரித3ரு ஸூர**
**நிலயவைப4வக3ளனு ஜீர்ணோத்3தா4ர மாடி3த3ரு ||63**

ஜலதியலி - கடலில்; மஜ்ஜனவ கெய்தரு - ஸ்னானம் செய்தார்; ஷ்ருதிததிகளர்த்தவ - ரிக்வேதத்தின் ஐதரேய ஸூக்தங்களின் அர்த்தங்களை; திளிஸிதரு - பாடத் துவங்கினார்; சலதி - அழுத்தமாக; கண்டவ - கழுத்தினை; பிடித - பிடித்த; துருளன - கெட்டவனை; நெலகெ கெடஹிதரு - நிலத்தில் தள்ளினார்; தா பளிய - தன்னிடம் இருந்த; ஹலவு விதத - பல விதமான; ஐஷ்வர்யகள - மகிமைகளை; ஜனரிகெ தோரிதரு - மக்களுக்கு காட்டினார்; ஸூரநிலய - பாரந்தி என்னும் ஹரியின் கோயிலை; ஜீர்ணோத்தார மாடிதரு - சீரமைத்து மறுபடி பூஜைக்கு ஏற்பாடு செய்தார்.

ஸ்ரீமதாசார்யரின் மேலும் சில மகிமைகளை இந்த ஸ்லோகத்தில் விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

ஸ்ரீமதாசார்யர் கடலில் ஸ்னானம் செய்தார். ரிக்வேதத்தின் ஐதரேய ஸூக்தங்களின் அர்த்தங்களை பாடத் துவங்கினார். தன் கழுத்தை அழுத்தமாக பிடித்த ஒருவனை நிலத்தில் தள்ளி வென்றார். தன்னிடம் இருந்த பல விதமான மகிமைகளை மக்களுக்கு காட்டினார். பாரந்தி என்னும் ஹரியின் கோயிலை சீரமத்து மறுபடி பூஜைக்கு ஏற்பாடு செய்தார்.

மத்வ விஜய 16-13 ஸ்லோகத்திலிருந்து வரும் விஷயங்களை இங்கு பார்க்கிறோம்.

ஒரு நாள் அமாவாசை. சூரிய கிரகண பர்வ காலமிருந்தது. ஸ்ரீமதாசார்யர் தமது சன்யாசி, கிருஹஸ்த என பல சிஷ்யர்களுடன் சமுத்ர ஸ்னானத்திற்காக சென்றார். ’கன கன கோஷ கோர வேஷ:’ (16-

13) பெரிய பெரிய அலைகள் கடலில் எழுந்தன. சர்வக்ஞாசார்யரின் கால்களில் பட்டு, அவருக்கு சாஷ்டாங்கமாக வணங்குவதாக இருந்தது. இங்கு பண்டிதர், கடலையும் ஆசார்யரையும் ஒப்பிட்டு, இவர் கடலைவிட உயர்ந்தவர் என்று வர்ணிக்கிறார். பிறகு ஆசார்யர் தனது கம்பீரமான குரலில், ரிக் வேதத்தின் ஐதரேய பகுதியின் சூக்தங்களின் வியாக்யானத்தை பாடத் துவங்கினார். பர்வகாலத்தில், சமுத்ர ஸ்னானம் செய்து கடலுக்கு அதிக புனிதத்தைக் கொடுத்தார். அவருடன் வந்த அனைவரும் கடலில் குளித்து புனிதராயினர். கடலில் அலைகளின் வேகத்தை தாங்கமுடியாத பக்தர்களுக்கு குளிக்க முடியாமல் பிரச்னை உண்டாயிற்று. 'ஆக்ராந்தோSதிக குருணா ஸ தேன தாவத் முஞ்சன் சஞ்சலனமபூத் தடாக தேஷ்ய: ||' (16-23) உடனே அனைத்திலும் வல்லவரான ஆசார்யர், தமது தீர்க்கமான பார்வையால், ஆர்ப்பரித்த கடலை மட்டுப்படுத்தினார்.

ஆசார்யரின் ஆணைப்படி, இருவரும் அவரின் கழுத்தினை அழுத்திப் பிடிக்க முயன்றனர். 'சங்கர்ஷாத் க்ரம பரிவர்தமான தைக்ஷ்ணம் ||' (16-27) ஆசார்யரிடம் எந்த மாற்றமும் காணப்படாமல், கழுத்தை இன்னும் பலமாக அழுத்தினர். அப்போதும் தெளிவாக பேசிக் கொண்டிருந்த மத்வர், பீமரே ஆவாரல்லவா?

லகிமாதி வலிமையை காட்டுதல்

நிர்யத்னம் வடுமதி$^{4}$ ருஹ்ய மந்த$^{3}$ஹாஸி ஸ ப்ராயாதி$^{3}$ஹ பரிதோ ந்ருசிம்ஹகே$^{3}$ஹம் |
ஐஸ்வர்யைரிதி லகி$^{4}$மாதி$^{3}$கைருபேதோ மத்$^{4}$வோபூ$^{4}$த் த்ரிபு$^{4}$வன சித்ரரத்ன ராஜ: || (16-30)

ஒருமுறை ஒரு சிறிவன் மேல் அமர்ந்து ஸ்ரீமதாசார்யர் ந்ருசிம்ஹ ஆலயத்தைச் சுற்றி வந்தார். இது மூன்று உலகத்தாருக்கும் வியப்பை அளித்தது. லகிமா, கரிமாதி செல்வங்களை பெற்றிருப்பவரான பூர்ணப்ரக்ஞரின் இந்த செயல், இவர் ஞானத்தில் மட்டும் வல்லவர் இல்லை; வலிமையிலும் இவர் வல்லவரே - என்ற செய்தியை தந்தது. இவரது கிரந்தங்களின் காம்பீர்யமும் இவ்வாறே இருக்கின்றன என்று அறிஞர்கள் அறிந்தனர்.

பாரந்தி ஸூரஸத3னம் விஷாலஸம்வித்
ஸம்ப்ராப்த க2லு ஸுசிரான்னிவேத்4ய ஹீனம் |
க்3ராம்யாக்3ர்ய க்ஷிதிபதிபி4ர் தி3னார்த்த4 மாத்ராத்
தத்3 பூ4திர்வ்யதி4த ஸ பூ4த ப3ல்யனல்பா: || 16-36

த்வாபரத்தில் பீமனாக இருந்தபோது, த்ரௌபதி மற்றும் சகோதரர்களுடன் ‘பாரந்தி’ என்னும் ஆலயத்தில் ஐந்து ரூபத்தில் இருந்த ஸ்ரீஹரியை வணங்கி, நித்ய பூஜைக்கு ஏற்பாடு செய்திருந்தார். அதே இடத்திற்கு ஸ்ரீமத்வராக வந்தவர், அந்தக் கோயிலின் பூஜைகள் நின்று போயிருப்பதைக் கண்டார். உடனடியாக கிராமத்து முக்யஸ்தர்களின் முன்னிலையில், அந்த ஊரின் அரசனையும் அழைத்து, அனைத்து நியமங்களையும் மறுபடி துவக்குமாறு ஏற்பாட்டினைச் செய்தார். ஸ்ரீஹரியை பூஜித்திருந்த மற்றும் அவனின் மகிமைகளை நினைத்துக் கொண்டார். ஆசார்யரின் யோகசித்தியை பலமுறை கண்டிருந்த அவரது சிஷ்யர்களுக்கு இது ஒன்றும் ஆச்சரியமில்லை.

ஸ்ரீமதாசார்யர் நம் கண்களிலிருந்து மறைந்த சந்தர்ப்பத்தை அடுத்த ஸ்லோகத்தில் விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் 64]
**வ்ருஷலனோர்வனு கொல்லப3ருதிரெ**
**ஹொஸரவிய தெரத3லி விஸ்மய**
**வெஸகி3த3ரு ஸ்ரீகிருஷ்ணன ஸுதா4ர்ணவவ ரசிஸித3ரு |**
**ப்ரஸரிஸிது1 ஸத்கீர்த்தி ஜக3த3லி**
**ரஸத3 கு3ணகா3னத3லி தி3விஜரு**
**குஸுமக3ள ஸூரிமளெகெ3ய்த3ரு நந்தி3 முனிவரகெ3 ||64**

வ்ருஷலனோர்வனு - கிராம அதிகாரி ஒருவன்; கொல்லபருதிரெ - கொல்ல வரும்போது; ஹொஸரவிய தெரதலி - உதயசூரியனைப் போல ஒளிர்ந்து; விஸ்மயவெஸகிதரு - அவனை மயக்கினார்; ஸ்ரீகிருஷ்ண ஸுதார்ணவவ - ஸ்ரீகிருஷ்ணாம்ருத மஹார்ணவத்தை; ரசிஸிதரு - இயற்றினார்; ஜகதலி - உலகில்; ஸத்கீர்த்தி - நற்புகழ்; ப்ரஸரிஸிது - பரவியது; ரஸத - மகிமைகளின்; குணகானதலி - குணங்களை (பாடினர்); திவிஜரு - தேவதைகள்; நந்தி முனிவரகெ -

ஸ்ரீமதாசார்யர் மேல்; குஸுமகள - பூக்களின்; ஸுரிமளெகெய்தரு - மழை பொழிந்தனர்;

ஸ்ரீமதாசார்யர் நம் கண்களிலிருந்து மறைந்த சந்தர்ப்பத்தை இந்த ஸ்லோகத்தில் விவரிக்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

கிராம அதிகாரி ஒருவன் தன்னை கொல்ல வரும்போது, ஸ்ரீமதாசார்யர் உதயசூரியனைப் போல ஒளிர்ந்து அவனை மயக்கினார். ஸ்ரீகிருஷ்ணாம்ருத மஹார்ணவத்தை இயற்றினார். உலகில் இவரது நற்புகழ் பரவியது. அனைவரும் இவரின் குணங்களைப் பாடினர். தேவதைகள் ஸ்ரீமதாசார்யர் மேல் பூக்களின் மழை பொழிந்தனர்.

மத்வ விஜய 16-39ம் ஸ்லோகத்திலிருந்து துவங்கி, முடிவு வரையிலான விஷயங்களின் ஸாரமே இந்த ஸ்லோகத்தில் உள்ளது.

து$^3$ர்மந்த்ரை: க$^2$லபடலை: ப்ரசோத்$^3$யமானோ
க்$^3$ராமேஷோ வ்ருஷ$^2$ள பதி: ப்ரஹர்துமேனம் |
ஸம்ப்ராப்தஸ்தத உத யாந்தமீக்ஷமாண:
ப்ரோத்$^3$யந்தம் ரவிமிவ விஸ்மிதோ நனாம || 16-39

ஆசார்யரின் புகழை விரும்பாத சில துஷ்டர்கள் அவரைக் கொல்ல முயன்று, அதில் தோற்று, பின் கிராம அதிகாரிகளிடம் துர்போதனை செய்தனர். சிறிது யோசித்த அவன், பின் ஆசார்யரைக் கொல்வதற்கு வந்து, அவரின் மகிமைகளை அறிந்து, தான் செய்தது தவறென்று உணர்ந்து, அவர் காலில் விழுந்தான். ஆசார்யரின் தரிசனமே ஒருவரின் மனதை எப்படி திருத்துகிறது என்பதற்கு இந்த சம்பவமே சாட்சி.

பயணத்தில் முன்னர், கொக்கட என்னும் கோயில் இருக்கும் கிராமத்திற்கு வந்தார் ஆசார்யர். இடெபடித்தாய என்னும் பிராமண பக்தன். அவனின் பக்திக்கு மெச்சிய ஸ்ரீமதாசார்யர், அவனது நன்மைக்காக உத்தம கிரந்தமான 'கிருஷ்ணாம்ருத மஹார்ணவம்' என்னும் கிரந்தத்தை இயற்றினார். 'ஸ்ரீகிருஷ்ணாம்ருத பரமார்ண வாபிதானாம் சக்ரே சத்வசன ததிம் ஸ்வபக்த பூத்யை: ||' (16-40)

நிஸ்த்வானாம் கதிபய பு4க்தி யுக்த ப4க்தம் ப4க்தானாம் வ்யதி4த சதுர்கு3ணம் த3யாளு: |
பூ4ங்க்தே ஸ்ம த்ரித3ஷ நரோப போ4க்3யமன்னம் ஸ்ருப்ரீத்யை ஸத4ன வதாம் ப்3ருஹத் ப்ரபோ3த4: || (16-47)

இப்படி அறியவேண்டியவர்களுக்கு ஞானத்தையும், ஏழையாக வந்தவர்களுக்கு செல்வத்தையும், உலகத்தை காப்பவரான வாயுதேவரின் அவதாரமான ஸ்ரீமத்வாசார்யர் மோட்சத்திற்கான வழியைக் காட்டி சஜ்ஜனர்களுக்கு மகிழ்ச்சியளித்தார். ஆசார்யர் காட்டிய மகிமைகள், அவருக்கு சாதாரணமாக இருந்தாலும் பக்தர்களுக்கு பக்தி அளிப்பதாக இருந்தது. ஜகத்குருவான ஆசார்ய மத்வரின் நிரந்தர சிந்தனை, அவரது கிரந்தங்களின் பாடம், புராணம் - 'கமனாசன சங்கதாதி லீலா: ஸ்ம்ருதி மாத்ரேண பவாபவர்க தாத்ரீ: |' (13-42) - ஆகியவை மோட்சத்தைக் கொடுப்பதாக இருக்கிறது. நாராயண பண்டிதர் 'மனோவிஷுத்யை சரிதானுவாத:' அதாவது பவித்ரமான, ஞானபக்திகளை வளர்க்கும், மகிழ்ச்சியைக் கொடுக்கும் கதையினை நினைவுபடுத்துகிறார்.

கீ3ர்வாணை: விஜய மஹோாத்சவஸ்ய பூஜாம்
கு1ர்வாணைரவிரள சம்விதஸ்ததா3னீம் |
விஸ்மேரைர் முனிநிகரூப தே3வயுக்தை:
சுஸ்மேரைரத தமவேக்ஷிதம் ப்ரஜக்3மே || (16-52)

பூலோகத்தின் மிகச்சிறந்த க்ஷேத்திரமான அனந்தாசனனின் திவ்ய சன்னிதியில், உத்தம நற்குணங்களைக் கொண்ட சிஷ்யர்களுடன் வீற்றிருந்த, மங்களகீர்த்தியினால் ஒளிரும், எண்ணற்ற நற்குணங்களைக் கொண்டவரான, ஞானபக்தி வைராக்கியத்தை பெற்றிருப்பவர்களில் முதல்வரான, ஆனந்தத்தைக் கொடுக்கும் சாஸ்திரங்களை இயற்றிய, ஐதரேய உபநிஷத் பாஷ்ய பாடத்தை சிஷ்யர்களுக்கு எடுத்துக் கொண்டிருந்த ஸ்ரீமதாசார்யரை காண்பதற்கு, சுரர்கள் வானத்திலிருந்து வணங்கினர். ஸ்ரீபூர்ணப்ரக்ஞரைக் கண்டு சுரோத்தமர்கள் பணிவுடன் போற்றி வணங்கினர்.

நமஸ்தே ப்ராணேஷ ப்ரணத விப4வாயாவனிமகா3:
நம: ஸ்வாமின் ராமப்ரியதம ஹனுமன் கு3ருகு3ண |

நமஸ்துப்4யம் பீ4மப்ரப3ல க்ருஷ்ணேஷ்ட ப4க3வன்
நம: ஸ்ரீமன் மத்4வ ப்ரதிஷ சத்ருஷன் நோ ஜயஜய || (16-57)

‘பரமகுருகளான ஸ்ரீமன்மத்வாசார்யரே | நீங்கள் நற்-சாஸ்திரங்களால் துர்-சாஸ்திரங்கள் என்னும் இருட்டினைப் போக்கினீர்கள். ஸ்ரீ நாராயணின் நற்குணங்களை சஜ்ஜனர்களுக்கு தெரியவைத்தீர்கள். ஜீவோத்தமரான நீங்கள் எங்களுக்கு அருளுங்கள்’ என்றனர். ஸ்ரீராமசந்திரனுக்கு ப்ரியமான ஹனுமந்த தேவருக்கு வணக்கங்கள். ஸ்ரீகிருஷ்ணனுக்கு இஷ்டமான பீமசேனதேவருக்கு வணக்கம். ஸ்ரீவேதவியாசரின் ப்ரியத்திற்கு ஆளான ஸ்ரீமத்வாசார்யருக்கு வணக்கங்கள். நமக்கு ஞானத்தை கொடுப்பவராக, துஷ்டர்களை அழிப்பவராக ஜெயித்தீர்கள். இப்படி வணங்கியவாறு பிரம்ம ருத்ராதி தேவதைகள் பூர்ணப்ரக்ஞரின் விஜய மஹோத்ஸவத்தை காண்பதற்காக குடும்பத்துடன் வந்தனர். இங்கு பண்டிதர், ஸ்ரீமதாசார்யரின் திவ்ய உருவத்தைக் கொண்டாடியிருக்கிறார்.

ஸ்ரீமந்தம் சசிவத3னம் குசேஷயாக்ஷம் க3ம்பீ4ர ஸ்வரமதி தி3வ்ய லக்ஷணாட்4யம் |
பஷ்யந்த: ஸ்வகுvருமதார்சிசன் க்ருதார்த்தா2 வாண்யாதம் ஹரிரதிபூர்ண காமமேதே || (16-55)

வானில் காட்சியளித்த ருத்ர, இந்த்ராதி தேவதைகள் குருகளான மத்வாசார்யரின் மஹாவிஜயோத்ஸவத்தை பாராட்டியவாறு, ஜயஜய என்றவாறு, ‘ஷரணம் குரோ கருணயாsபி நோ பவே |’ (16-56) - அஞ்ஞானத்தைப் போக்கி, சுஞ்ஞானத்தைக் கொடுத்து, முகுந்தனைக் காட்டுங்கள். தங்களுடைய கருணையும், அருளும் இருக்கட்டும் என்று வேண்டினர். ஸ்ரீவாயுதேவரின் மூன்றாவது அவதாரத்தை மனதார கொண்டாடி ஜயஜய என்றனர்.

இதி நிக3திதவந்தஸ்தத்ர விருந்தா3ரகேந்த்3ர குvருவிஜய மஹந்தம் லாளயந்தோ மஹாந்தம் |
வவ்ருஷு2ரகி2ல த்3ருஷ்யம் புஷ்பவாரம் சுகந்தvம் ஹரிதயித வரிஷ்டை ஸ்ரீமதாvனந்த3 தீர்த்தே || (16-58)

அனைவரும் பார்த்திருக்கையில், ஸ்ரீநாராயணரின் அன்பிற்குப் பாத்திரரான ஸ்ரீமதானந்ததீர்த்த பகவத்பாதரின் மேல் தேவலோகத்து நறுமணம் நிறைந்த புஷ்பவிருஷ்டி ஆனது. அங்கிருந்த பார்வையிலிருந்து மறைந்த ஆசார்யர், ஸ்ரீவேதவியாசருடன் பதரியில் தங்கினாலும், ரஜதபீடபுரத்திலும், அவரது கிரந்தங்களிலும் எப்போதும் நிலைத்திருக்கிறார்.

அடுத்த, கடைசி ஸ்லோகத்தில், இந்த கிருதியின் மங்களத்தை செய்கிறார் ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர்.

[ஸ்லோகம் 65]
**ப்ரசுரமதி$^{1}$ விஜயக$^{3}$ள ஸாரவ**
**ரசிஸிதெ$^{3}$ன்னய பரம கு$^{3}$ருக$^{3}$ளு**
**வசனஶுத்$^{3}$தி$^{4}$யனித்து நுடி$^{3}$ஸித$^{3}$ தெரதி$^{3}$ நுடி$^{3}$தி$^{3}$ஹெனு |**
**ஶுசிமனதி$^{3}$ ஸுஸ்வரதி$^{3}$ பாட$^{3}$லு**
**ப்ரசுரவாக$^{3}$லி ஷாந்திஸுக$^{2}$க$^{3}$ளு**
**பு$^{4}$ஜபிடி$^{3}$து$^{3}$ மேலெத்தி ஸலஹுவ கு$^{3}$ருவர ப்ரஸன்ன || 65**

ப்ரசுரமதி - ஸ்ரீமதாசார்யரின்; விஜயகள ஸாரவ - விஜயத்தின் ஸாரத்தை; ரசிஸிதெ - இயற்றினேன்; என்னய பரம குருகளு - என்னுடைய பரம குருகள்; வசனஷுத்தியனித்து - எனக்கு வசன ஷுத்தியைக் கொடுத்து; நுடிஸித தெரதி - இயற்ற வைத்ததைப் போல; நுடிதிஹெனு - இயற்றினேன்; ஷுசிமனதி - சுத்தமான மனதுடன்; ஸுஸ்வரதி - நல்ல ஸ்வரத்துடன்; பாடலு - இதனை பாடினால்; ஷாந்திஸுககளு - அமைதி, சுகங்கள்; ப்ரசுரவாகலி - பரவட்டும்; புஜபிடிது - தோள்களைப் பிடித்து; மேலெத்தி ஸலஹுவ - மேல்தூக்கி காப்பான்; குருவர - மிகச்சிறந்தவனான; பிரஸன்ன - ஸ்ரீபிரஸன்னனான ஸ்ரீஹரி.

ஸ்ரீபிரஸன்ன என்னும் அங்கிதத்தைக் கொண்டவரான ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர், இந்த கிருதியை இத்துடன் மங்களம் செய்கிறார்.

ஸ்ரீமதாசார்யரின் விஜயத்தின் ஸாரத்தை, என் பரமகுருகள் எனக்கு வசன ஷுத்தியைக் கொடுத்து, இயற்ற வைத்ததைப் போல இயற்றினேன். சுத்தமான மனதுடன் நல்ல ஸ்வரத்துடன் இதனை

